**பரல்கள் 12 ஆய்வு நூல்**




**பரல்கள் 12** ஆய்வு நூல் காப்பிய இலக்கியம், இலக்கணம், சமய இலக்கியம், இக்கால இலக்கியம், ஒப்பிலக்கியம் மற்றும் தகவல் தொடர்பியல் உள்ளிட்ட பல்துறைசார் ஒன்பது ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பு, கட்டுரைகள் அறிவியல் அணுகுமுறையில் வடிவமைப்பு. பன்முக ஆய்வுச் சிந்தனை வீச்சுகளின் வெளிப்பாடு. பகுத்தாய்தல், திறனாய்தல், விளக்கம் செய்தல், மதிப்பிடுதல், ஒப்பிடுதல் முதலான திறனாய்வு அணுகு முறைகளைப் பயன் கொண்டுள்ளமை. தமிழ் இலக்கிய மற்றும் இலக்கணக் கொள்கைகளின் விளக்கம், பிற மொழி இலக்கிய ஒப்புநோக்கு, அறவியல், சமூகவியல் மற்றும் சமயவியல் குறித்த செய்திப்புலப்பாடு. மொத்தத்தில் 'பரல்கள் 12' நவீன அறிவியல் யுகத்திற்கேற்ற ஒரு புதிய வார்ப்பு.

சனவரி 1999. பக். 21+174

ரூ. 90

# பரல்கள் 12

ஆய்வுக்கட்டுரைகள்


பதிப்பாசிரியர்

இராம. தனசேகரன்

துணைப் பதிப்பாசிரியர்

சை. வஹிதாகௌசியா

சீ. காயத்ரிதேவி

இரா. கவிதா



தமிழ் ஆய்வாளர் மன்றம்

தமிழியற் புலம்

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

மதுரை 625 021, இந்தியா

1999

# Bibliographical Data


| | | |
|---|---|---|
| Title | : | Paralkal |
| Subject | : | Research Articles |
| Editor | : | R. Dhanasekaran<br>President<br>Tamil Research Scholars Association<br>Madurai Kamaraj University |
| Language | : | Tamil |
| Edition | : | First: January 1999 |
| Size | : | Demy 1x8 |
| Paper | : | TNPL Map Litho 7.7 Kg. Demy |
| No.of Pages | : | 195 (21+174) |
| No.of Copies | : | 1000 |
| Book Design | : | R. Dhanasekaran<br>Research Scholar<br>School of Tamil Studies<br>Madurai Kamaraj University |
| Type Setting & Printing | : | Acme Computers and Offset<br>117, Nethaji Road, Madurai 625 001<br>Ph : 747529 |
| Publishers | : | © Tamil Research Scholars Association<br>Madurai Kamaraj University<br>Madurai 625 021, India |
| Price | : | Rs. 90.00 |

பரல்கள் 12

ⓟ தமிழ் ஆய்வாளர் மன்றம் / பதிப்பாசிரியர்: இராம. தனசேகரன்/ முதற்பதிப்பு: சனவரி 1999 / வெளியீடு: தமிழ் ஆய்வாளர் மன்றம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை 625 021, இந்தியா / நூல் வடிவம்: இராம. தனசேகரன் / நூல் அச்சு: அக்மி ஆப்செட், மதுரை 625 001. / விலை: ரூ90.00

# பரல்கள் 12


புரவலர்

**அறிஞர் வை.தி. நடராசன்**

தலைவர் & ஒருங்கிணைப்பாளர், தமிழியற் புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

நெறிஞர்

**அறிஞர் சு. வேங்கடராமன்**

தலைவர், இக்கால இலக்கியத்துறை, தமிழியற் புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

**அறிஞர் இ. முத்தையா**

இணைப்பேராசிரியர், நாட்டுப்புறவியல் துறை, தமிழியற் புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

பதிப்பாசிரியர்

**திரு. இராம. தனசேகரன்**

தலைவர், தமிழ் ஆய்வாளர் மன்றம், தமிழியற் புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

துணைப் பதிப்பாசிரியர்

**செல்வி சை. வஹிதாகௌசியா**

செயலர், தமிழ் ஆய்வாளர் மன்றம், தமிழியற் புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

**செல்வி சீ. காயத்ரிதேவி**

இணைச்செயலர், தமிழ் ஆய்வாளர் மன்றம், தமிழியற் புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

**செல்வி இரா. கவிதா**

பொருளர், தமிழ் ஆய்வாளர் மன்றம், தமிழியற் புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

# பதிப்புக் குழு

◆ பதிப்பாசிரியர்

**இராம. தனசேகரன்,** எம்.ஏ., எம்.ஃபில்.
தலைவர், தமிழ் ஆய்வாளர் மன்றம், தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை 625 021

◆ துணைப் பதிப்பாசிரியர்

**சை. வஹிதாகௌசியா,** எம்.ஏ., எம்.ஃபில்.
செயலர், தமிழ் ஆய்வாளர் மன்றம், தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை 625 021

**சீ. காயத்ரிதேவி,** எம்.ஏ., எம்.ஃபில்.
இணைச்செயலர், தமிழ் ஆய்வாளர் மன்றம், தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை 625 021

**இரா. கவிதா** எம்.ஏ., எம்.ஃபில்.
பொருளர், தமிழ் ஆய்வாளர் மன்றம், தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை 625 021

# கட்டுரையாளர்கள்

**இராம. தனசேகரன்**
ஆய்வாளர்
தமிழியல் துறை, தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ் நாடு

**சை. வஹிதாகௌசியா**
ஆய்வாளர்
திருக்குறள் ஆய்வகம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ் நாடு

**கா. சந்தானலெட்சுமி**
ஆய்வாளர்
இலக்கணத் துறை, தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ் நாடு

**சீ. காயத்ரிதேவி**
ஆய்வாளர்
திருக்குறள் ஆய்வகம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ் நாடு

**மெ. செந்தாமரை**
ஆய்வாளர்
ஒப்பிலக்கியத் துறை, தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ் நாடு

**பு. தங்கமாரியம்மாள்**
ஆய்வாளர்
இஸ்லாமியத் தமிழியல் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ் நாடு

**இரா. கவிதா**
ஆய்வாளர்
தொடர்பியல் துறை, தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ் நாடு

**ச. ஆமினாபர்வின்**
ஆய்வாளர்
இஸ்லாமியத் தமிழியல் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ் நாடு

# பதிப்புரை

**இராம.தனசேகரன்**
தலைவர்
தமிழ் ஆய்வாளர் மன்றம்
தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ் நாடு

வளர்தமிழ் மதுரையம்பதி பல்கலைக்கழகத் தமிழ் ஆய்வாளர் மன்றத்தின் உருவாக்கமே 'பரல்கள்'. இதுவரை பதினொரு பரல்களைக் கண்ட பெருமை தமிழ் ஆய்வாளர் மன்றத்திற்குரியது. அவ்வகையில், வெள்ளிவிழாக்காணும் தமிழ் ஆய்வாளர் மன்றத்தின் பன்னிரண்டாவது படைப்பான **'பரல்கள் 12 – நவ குறிஞ்சி மலர்'**.

காப்பிய இலக்கியம், இலக்கணம், இக்கால இலக்கியம், தகவல் தொடர்பியல், ஒப்பிலக்கியம், மற்றும் சமய இலக்கியம் முதலான பல்துறைசார் ஒன்பது ஆய்வுக்கட்டுரைகளின் தொகுப்பே இந்நூல். இந்நூலின்கண் அமைந்துள்ள கட்டுரைகள் தமிழ் ஆய்வாளர் மன்ற புதன் வட்டக் கருத்தரங்கில் படிக்கப்பெற்று, மன்ற நெறிஞர்களால் செப்பம் செய்து, பின்னர் நூலாக்கம் பெற்றுள்ளன.

வளர்ந்து வரும் நவீன அறிவியல் யுகத்திற்கேற்ப கட்டுரை அமைப்பில் ஆய்வுச்சுருக்கம் (Abstract), கருச்சொற்கள் (Keywords), முதலான புதுப்பரிமாணங்களை அறிவியல் அணுகுமுறையில் (Scientific Approach) கையாண்டுள்ளமை குறிப்பிடத்தக்க ஒரு புது முயற்சி. அவ்வகையில் **பரல்கள் 12 – ஆய்வு நூல்,** பரல்களின் தொடர் வளர்ச்சியில் ஒரு மைல்கல்.

பரல்கள் 12 ஆய்வு நூலாக்க முயற்சியில் உற்றுழி உதவியவர்கள் பலர்.

- முகவுரை நல்கிய **பேராசிரியர் வை.தி. நடராசன்** அவர்கள், அணிந்துரை அளித்த **பேராசிரியர் சு. வேங்கடராமன்** அவர்கள், வாழ்த்துரை வழங்கிய **பேராசிரியர் இரா. மோகன்** அவர்கள், பரல்கள் 12 ஆய்வு நூல் சிறந்த முறையில் உருவாக பெரிதும் உதவிய மன்ற நெறிஞர் **முனைவர் இ. முத்தையா** அவர்கள், மற்றும் மதிப்புரை வழங்கிச் சிறப்பித்த தமிழியல்

துறைத்தலைவர் **அறிஞர் மு. மணிவேல்** அவர்கள் ஆகியோர்களுக்கு முதற்கண் மிக்க நன்றி.

- அறிவியல் அணுகுமுறையில் கட்டுரைகளை வடிவமைக்கப் பெரிதும் உதவிய இனிய நண்பர் **திரு. த. வேணுகோபால்** (ஆய்வாளர், உயிரியல் புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்) அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றி.

- 'குறிஞ்சி மலர்' நிழற்படம் தந்துதவிய அருமை நண்பர் **டாக்டர் கே. அன்பழகன்** (உரிமையாளர், 'பயோடெக்' ஆய்வகம், ஏற்காடு) அவர்களுக்கும், மதுரை காமராசர் பல்கலைக்கழக உயிரியல் புல ஆய்வு நண்பர்கள் **திரு. இரா. சுதர்சன்** மற்றும் **திரு. ந. சங்கர்** ஆகியோர்களுக்கும் மிக்க நன்றி.

- இந்நூலாக்க முயற்சியில் பல்வேறு நிலைகளில் பெரிதும் உதவிய ஆய்வு நண்பர்கள் **திரு. ஆ. முனியன்** (மொழியியல் துறை), **செல்வி மெ. செந்தாமரை** (தமிழியற் புலம்) ஆகியோர்களுக்கும், தமிழ் ஆய்வாளர் மன்றப் பொறுப்பாளர்கள் மற்றும் கட்டுரையாளர்களுக்கும் மிக்க நன்றி.

- பரல்கள் 12 ஆய்வு நூல் அச்சுப்படி (Proof) திருத்துவதில் பெரிதும் உதவி புரிந்த இளநிலை ஆய்வாளர் **செல்வி ஜெ. ஜெயகலா** (தகவல் தொடர்பியல் துறை, தமிழியற் புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்) அவர்களுக்கு இதயங்கனிந்த நன்றி.

- பரல்கள் 12 ஆய்வு நூலினைக் கணினியில் வடிவமைத்து, அழகுற அச்சிட்டு, நூலாக்கி உதவிய அக்மி கம்ப்யூட்டர்ஸ் & ஆப்செட் உரிமையாளர் **திரு. வெ. ஞானகோபால்** மற்றும் **திரு. சு. கோபிநாதன்** ஆகியோர்களுக்கும், தட்டச்சில் உதவிய இனிய தோழியர் **செல்வி எல். வி. லெஜி** மற்றும் **செல்வி மு. தனலெட்சுமி** ஆகியோர்களுக்கும் மிக்க நன்றி.

தமிழ் ஆய்வாளர் மன்றத்தினரின் சிறு முயற்சியான **'பரல்கள் 12'** ஆய்வு நூலினைத் தமிழ் கூறு நல்லுலகம் வரவேற்று ஊக்கமளிக்கும் என நம்புகின்றேன்.

மதுரை 625 021 **இராம.தனசேகரன்**

சனவரி 27, 1999 பதிப்பாசிரியர்

# முகவுரை

**அறிஞர் வை.தி.நடராசன்**
மன்றப் புரவலர்
தலைவர் & ஒருங்கிணைப்பாளர்
தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ் நாடு

'பரல்கள்' என்னும் ஆய்வுக்கட்டுரைத் தொகுதி தமிழியற் புலத்தின் ஆய்வு மாணவர்கள் ஆர்வத்துடன் ஒவ்வோராண்டும் வெளிக்கொணரும் ஒன்று. இவ்வாண்டு இது பன்னிரண்டாவது முறையாக மலர்ந்து புலத்திற்குச் சிறப்புச் சேர்த்துள்ளது. முனைவர் பட்ட ஆய்வாளர்கள் தத்தம் ஆய்வில் ஒரு பகுதியினைக் கட்டுரை வடிவில் சிந்தனைக்கு முன் வைத்துள்ளனர். இவ்ஆய்வுத் தொகுப்பில் இடம் பெற்றுள்ள ஒன்பது ஆய்வுக்கட்டுரைகள் பல்வேறு ஆய்வுப்பரப்பினைத் தன்னகத்தே கொண்டு இலங்குகின்றன.

'சிலம்பில் மலிவு' என்னும் முதற்கட்டுரை சிலப்பதிகாரத்தில் இடம்பெற்றுள்ள மகிழ்வு குறித்த இன்ப நிகழ்வுகளைச் சுட்டும் நோக்கில் அமைந்துள்ளது. அடுத்து சிலம்பில் அமைந்துள்ள முல்லைக் கூறுகளான ஆற்றியிருத்தல், ஆற்றுவித்தல், தலைவன் நிலை, இல்லற இன்பம் முதலானவற்றைத் திறனாயும் நோக்கில் அமைந்துள்ளது 'சிலம்பில் முல்லை' என்னும் இரண்டாவது கட்டுரை.

ஆய்த எழுத்தைத் 'தனிநிலை' என்று குறிப்பிடும் ஆய்வாளர், ஆய்தம் குறித்துத் தண்டபாணி சுவாமிகள் முன்வைக்கும் சிந்தனைகளைத் தன் கட்டுரையில் நிரல்படத் தொகுத்தளித்துள்ளார்.

இராஜம் கிருஷ்ணனின் அலைவாய்க்கரை நாவலில் இடம் பெற்றுள்ள பரதவர் பிரச்சினைகள், அவர்களின் போராட்டம், அதனால் ஏற்படும் மாறுதல்கள் ஆகியவற்றினைச் சுட்டி நிற்கிறது 'இராஜம் கிருஷ்ணன் நாவலில் தொழிலாளர் சமுதாய மாற்றம்' என்னும் கட்டுரை.

சமூக நிறுவனங்களான குடும்பம், கல்வி, சமயம் போன்றவை ஒரு சமூக உறுப்பினன் மீது ஏற்படுத்தும் தாக்கத்தினை ஊடகங்களும்

நிகழ்த்துவதால் ஊடக நிறுவனமும் ஒரு சமூக நிறுவனமே என்று நிரூபிக்க முயல்கின்றது 'ஊடக நிறுவனம் ஒரு சமூக நிறுவனம்' என்னும் கட்டுரை.

திருக்குறள், திருக்குர்ஆனில் முறையே இடம்பெற்றுள்ள ஈகை மற்றும் ஜக்காத்தினை ஒப்பிட்டு விளக்கும் வகையில் அமைந்துள்ளது 'ஈகையும் ஜக்காத்தும்' என்னும் கட்டுரை.

அறநிலையில் தமிழறிஞர் திருவள்ளுவரையும், கிரேக்கத் தத்துவ அறிஞர் மார்க்க அரேலியரையும் ஒப்பிடுகின்றது 'திருவள்ளுவர் மார்க்க அரேலியர் அறக்கோட்பாடு ஒப்பீடு' என்னும் கட்டுரை.

'கிறிஸ்தவ இறைக்கோட்பாட்டில் தந்தை பண்புருவாக்கம்' என்னும் கட்டுரை கிறிஸ்தவ சமயத்தின் தந்தையான தூய ஆவியின் இயல்பினை எடுத்துரைக்க முனைகின்றது. திருக்குர்ஆனில் இடம்பெற்றுள்ள வரலாற்று நிகழ்ச்சிகளை முறையே தொகுத்தளிக்கின்றது 'திருக்குர்ஆனில் வரலாற்று நிகழ்ச்சிகள்' என்னும் கட்டுரை.

காப்பிய இலக்கியம், இலக்கணம், சமயம், ஒப்பிலக்கியம், நாவல் மற்றும் தகவல் தொடர்பியல் ஆகிய துறைகளில், புதிய கண்ணோட்டத்துடன் ஆய்வுக்கட்டுரைகள் சிறப்பாக அமைந்துள்ளன. ஆய்வுக்கட்டுரைகள் அனைத்தும் மாறுபட்டக் கோணத்தில் விரிந்த தளத்தில் அமைந்துள்ளதுடன், ஆய்வாளர்களின் உழைப்பின் சிறப்பினையும் எடுத்தியம்புகின்றன.

தமிழியற் புலம் என்ற அடிக்கட்டுமானத்தில் நின்று, பல்நோக்கில் ஆய்வினைக் கட்டமைக்கும் ஆய்வாளர்களின் ஆய்வுத்திறன் வளம்பெற்று சிறக்கவும், அதன்வழித் தமிழ் கூறு நல்லுலகம் பயன் பெறவும் உளமார வாழ்த்துகின்றேன்.

மதுரை 625 021

சனவரி 28, 1999 **வை.தி.நடராசன்**

# அணிந்துரை

**அறிஞர் சு.வேங்கடராமன்**
மன்ற நெறிஞர்
பேராசிரியர் & தலைவர்
இக்கால இலக்கியத்துறை, தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ் நாடு

*மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற்புல ஆய்வாளர்கள் 'பரல்கள்' என்னும் பெயரில் ஆண்டுதோறும் ஆய்வுக்கட்டுரைகளை நூலாகக் கொண்டு வருகிறார்கள். அவர்கள் ஆய்வினில் கண்ட உண்மைகளை அறிவுலகிற்கு இதன் வழியே வெளிப்படுத்துகிறார்கள். கூர்மையான சிந்தனையும், புதியன நாடும் விழைவும் இக்கட்டுரைகளில் நிறைந்திருக்கக் காணலாம்.*

*காப்பிய இலக்கியம், இடைக்கால இலக்கியம், நாவல், தகவல் தொடர்பியல், ஒப்பிலக்கியம், ஒப்பியல் சமயம் என்ற தளங்களில் இவ்வாய்வுகள் அமைந்துள்ளன.*

*வாரந்தோறும் புதன் கிழமைகளில் ஆய்வு மன்றத்தில் இக்கட்டுரைகளைப் படித்து, விவாதித்து, பின்னர் செம்மை செய்து நூலாக ஆக்கியுள்ளனர். இக்கட்டுரைகளை ஆய்வு மன்றத்தில் படித்த நிலையிலிருந்து; இன்றைய நூலாக்க நிலை வரை பார்த்த, அவற்றின் வளர்ச்சிக்கு உடனிருந்த மகிழ்ச்சி எங்களுடையது.*

*'தம்மில் தம்மக்கள் அறிவுடைமை' கண்டு மகிழும் மனநிலையில் 'பரல்கள் 12' ஆய்வுத் தொகுதியை வரவேற்று, தமிழ் கூறு நல்லுலகிற்கு அறிமுகப்படுத்துவதில் மகிழ்வும், மனநிறைவும் அடைகின்றேன். எதிர்வரும் காலத்தில், இவர்களின் சிந்தனை வீச்சு இன்னும் புதிய எல்லையினைத் தொடும் என்ற எதிர்ப்பார்ப்பில் வாழ்த்துகின்றேன்.*

மதுரை 625 021
சனவரி 28, 1999

**சு.வேங்கடராமன்**

# வாழ்த்துரை

**அறிஞர் இரா.மோகன்**
பேராசிரியர், ஒப்பிலக்கியத்துறை
சிறப்பு நிதியுதவித் திட்ட ஒருங்கிணைப்பாளர்
தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ் நாடு

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை மலருவது குறிஞ்சி மலர். அதுபோல் பன்னிரண்டு முறை மலர்ந்திருக்கும் அரியதோர் ஆய்வு மலர் 'பரல்கள்'.

'பரல்கள்' என்னும் பெயருக்கேற்ப இதன் முதற்கட்டுரை 'சிலம்பில் மலிவு' என்ற தலைப்பில் நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தைப் பற்றியதாக அமைந்திருத்தல் பாராட்டத்தக்கது. மேலும் 'சிலம்பில் முல்லை' என்னும் இரண்டாவது கட்டுரை சிலம்பில் அமைந்துள்ள முல்லைக்கூறுகளைத் திறனாயும் நோக்கில் அமைந்திருப்பதும் குறிப்பிடத்தக்கது.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற்புல ஆய்வாளர்கள் முன்னைப் பழைய இலக்கியங்களை ஆராய்வதோடு மட்டும் நின்றுவிடாமல், பின்னைப் புதிய ஆய்வுத்துறைகளிலும், அணுகுமுறைகளிலும், கருத்தினைச் செலுத்துவதற்கும் தயங்காதவர்கள் என்பதற்கு இந்நூலின்கண் உள்ள 'ஊடக நிறுவனம் ஒரு சமூக நிறுவனம்', 'திருவள்ளுவரும் மார்க்க அரேலியரும்', 'இராஜம் கிருஷ்ணன் நாவலில் தொழிலாளர் சமுதாய மாற்றம்' என்ற கட்டுரைகள் கட்டியம் கூறுகின்றன.

அறுவகை இலக்கணம் படைத்த 'தண்டபாணி சுவாமிகளின் தனிநிலைக் கொள்கை'யைத் தன் ஆய்வுப்பொருளாகக் கொண்டுள்ளது இந்நூலில் இடம்பெற்றுள்ள ஒரு கட்டுரை.

'1999 – மத நல்லிணக்க ஆண்டு'! அதற்கேற்ப இந்நூலில் 'ஈகையும் ஜக்காத்தும்', 'திருக்குர்ஆனில் வரலாற்று நிகழ்ச்சிகள்', 'கிறிஸ்தவ இறைக்கோட்பாட்டில் தந்தை பண்புருவாக்கம்' ஆகிய

கட்டுரைகள் அமைந்துள்ளன. இவை கட்டுரையாளர்களின் ஒப்பியல் ஆர்வத்தையும், இறையியல் ஈடுபாட்டையும் ஒருங்கே புலப்படுத்தும் வண்ணம் உருவாக்கப்பட்டுள்ளன.

"செல்லும் நெறியனைத்தும் சேம நெறியாக!
மல்க நிதியம்! வளஞ்சிறக்க"

என ஆய்வாள நண்பர்களை நெஞ்சார வாழ்த்துகிறேன். தமிழ் கூறு நல்லுலகம் அவர்களின் நூல் வெளியீட்டு முயற்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் நல்கும் என நம்புகிறேன்.

மதுரை 625 021
சனவரி 25, 1999

**இரா.மோகன்**

# மதிப்புரை

**அறிஞர் மு.மணிவேல்**
இணைப்பேராசிரியர் & தலைவர்
தமிழியல் துறை
தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ்நாடு

*மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழ் ஆய்வாளர்கள் 1975ல் தமிழ் ஆய்வாளர் மன்றம் தொடங்கி, வாரத்தின் புதன்கிழமைதோறும் புதன் வட்டக் கருத்தரங்குகளை நடத்தி, கருத்துக்களை விவாதம் செய்து, தம் ஆய்வுரைகளைச் செம்மையாக்கிப் 'பரல்களாக' நூலாக்கி, மேலாய்வுகளுக்குப் பயனாகும் வகையில் வழங்கி வருவது பாராட்டிற்குரியது.*

*இப்பல்கலைக்கழகத் தமிழியற் புலத்தில் யானும் ஆய்வாளனாக இருந்த காலத்து முதல் மூன்று பரல்கள் வெளி வந்துள்ளன. இது காறும் தொடர்ந்து பதினோரு பரல்களை வெளியிட்டுள்ள இப்பல்கலைக்கழகத் தமிழ் ஆய்வாளர்கள் வெளியிடும் இந்நூல் பன்னிரண்டாவது "பரல்கள்" ஆகும்.*

*பரல்களில் வெளியிடப்பட்டுள்ள கட்டுரைகளின் ஆசிரியர்களாகிய ஆய்வாளர்கள் தாம் மேற்கொண்ட, மேற்கொண்டுள்ள ஆய்வுப்பொருளோடு தொடர்புடைய வகையில் உரிய முதன்மை, துணைமைச் சான்றாதாரங்களைத் திரட்டி, ஏற்ற அணுகுமுறைகளில், ஆய்வுநெறிமுறைப்படித் தம் ஆய்வுக் கருத்துக்களை வெளியிட்டு வந்துள்ளனர். அக்கட்டுரைகள் அனைத்தும் தரமுடையனவும், பயனுடையனவுமாவன. அவ்வகையில் அமைந்த ஆய்வுக்கட்டுரைகளைத் தாங்கிய நூலாக இப்பொழுது பன்னிரண்டாவது பரல்கள் வெளியிடப்படுகின்றது. பல்துறைசார் நிலையில் தமிழியற் புல ஆய்வாளர்களின் கட்டுரைகளும், திருக்குறள் ஆய்வகம், இசுலாமியத் தமிழ் இலக்கியத்துறைசார்ந்த ஆய்வாளர்களின் கட்டுரைகளும் இடம்பெற்றுள்ள சிறப்பினையும் இந்நூல் பெற்றுள்ளது.*

இப்பரல்கள் நூலில் சிறப்பாகக் கருதத்தக்க ஒன்பது ஆய்வுக்கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரைகளில் தமிழ் இலக்கிய, இலக்கணக் கொள்கைகளை எடுத்துக்காட்டுவதும், பிறமொழி, பிறநாட்டு இலக்கியக் கொள்கைகளை ஒப்பிட்டுக் காட்டுவதும், இவற்றின்வழி அறவியல், சமூகவியல், சமயவியல் என்றிவ்வாறான வாழ்வியல் தொடர்புபட்ட செய்திகளைப் புலப்படுத்துவதும் அமைகின்றன. பகுத்தாய்தல், விளக்கம் செய்தல், ஒப்பிடுதல், திறனாய்தல், மதிப்பிடுதல் என்றிவ்வாறான அணுகுமுறைகள் இந்நூற் கட்டுரைகளில் பின்பற்றப்பட்டுள்ளன.

இந்நுலின்கண் அமைந்த, ஆய்வாளர் இராம. தனசேகரன் எழுதியுள்ள 'சிலம்பில் மலிவு', 'சிலம்பில் முல்லை' என்ற முதலிரண்டு கட்டுரைகளும் தமிழின் முதற்காப்பியமான சிலப்பதிகாரத்தில் அமைந்த அகப்பொருட் செய்திகளைச் சங்க இலக்கிய மரபிலும், தொல்காப்பியப் பொருளதிகார இலக்கியக் கொள்கைகள் அடிப்படையிலும் எடுத்துக் காட்டுவனவாக அமைகின்றன. இல்லற வாழ்க்கையின் நிகழ்வுகளான புணர்ச்சி, அதனாற்பெறும் இன்ப நுகர்வு, மக்கட்பேறு, அதனாலான மகிழ்ச்சி என்பவற்றைக் குறித்துத் தொல்காப்பியர் கூறும் 'மலிவு' என்பதன் விளக்கச் சான்றாகச் சிலம்பில் கோவலன்–கண்ணகி, கோவலன்–மாதவி வாழ்க்கையில் அமைந்த நிகழ்வுகளை முதற்கட்டுரை விளக்குகின்றது. 'முல்லை' என்ற அகத்திணைக்குரிய, 'தலைவனின் பிரிவில் தலைவி ஆற்றியிருத்தல் என்னும் உரிப்பொருள் விளக்கத்திற்குச் சான்றாக அமையும் கோவலன்–கண்ணகி, கோவலன்–மாதவி பிரிவு நிகழ்வில் காட்டப்படும் ஆற்றாமை நிலைபாடுகள், அது தொடர்ச்சியாக அமையும் பிரிந்து வருந்தியிருக்கும் தலைவியை ஆற்றுவித்தல், பிரிந்த தலைவனின் வரவு, தலைவியோடு அவன் கூடி இல்லறம் பேணுதல் என்பன இரண்டாவது காட்டுரையில் குறிக்கப்பட்டுள்ளமை சுட்டுதற்குரியன.

தண்டபாணி சுவாமிகளின் தனிநிலைக் கொள்கை' என்னும் கட்டுரையில் ஆய்வாளர் கா. சந்தானலெட்சுமி ஆய்த(ஃ)எழுத்தின் வடிவம், ஒலிப்பு, மொழியில் அதன் அமைவிடம், சிறப்புத்தன்மை ஆகியனவற்றை எடுத்துரைக்கிறார். ஆய்தம் குறித்த தொல்காப்பியம், வீரசோழியம், மற்றும் நன்னூல் கருத்துக்களையும், இளம்பூரணர்,

பேராசிரியர், நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்கள் கருத்துக்களையும் தண்டபாணி சுவாமிகளின் அறுவகை இலக்கண நூற் கருத்துக்களோடு ஒப்பிட்டுக் காட்டுவது சிறப்பு. ஆய்தமாகிய தனிநிலை முச்சுழி உடையது, கழுத்தினை இடமாகக் கொண்டு பிறப்பது, இடையின மெய்களின் இனவெழுத்தாய் அமைவது, உயிரெழுத்து மெய்யெழுத்துக்களுக்கிடையே அமைவது என்றிவ்வாறான ஆய்தம் பற்றிய தண்டபாணி சுவாமிகளின் கருத்துக்களை இக்கட்டுரையாளர் எடுத்துக் காட்டியிருக்கிறார்.

'படைப்பாளர் இராஜம் கிருஷ்ணன் எழுதிய அலைவாய்க் கரையில் நாவலில் குறித்த தொழிலாளர் சமுதாய மாற்றம்' பற்றிய கருத்துக்களை ஆய்வாளர் மெ. செந்தாமரை ஆராய்ந்திருக்கிறார். சமூகவியல் அறிஞர்கள் சுட்டிக்காட்டும் மேல்நிலை ஆக்கம், கீழ்நிலை ஆக்கம், புதுமை ஆக்கம், தேசிய ஆக்கம், என்னும் நால்வகைச் சமுதாய மாற்றக் கோட்பாடுகளை எடுத்துக் காட்டி அதன் அடிப்படையில் தம் ஆய்வுக்குரிய செய்திகளை விளக்கம் செய்கிறார். அலைவாய்க்கரை மக்களாகிய மீனவர்களின் சமய மாற்றக் காரணம், தொழிலாளர் சட்டங்கள் அவர்களுக்குப் பயன்படாமை, இன்றைய இயந்திரமயமான சூழலில் அவர்களுக்குண்டான பாதிப்பு ஆகியவற்றையும் இராஜம் கிருஷ்ணன் சுட்டிக்காட்டுவதை இக்கட்டுரையாசிரியர் குறிப்பிட்டிருக்கிறார்.

'ஊடக நிறுவனம் ஒரு சமூக நிறுவனம்' என்ற ஆய்வுக் கட்டுரையில் ஆய்வாளர் இரா. கவிதா சமூக நிறுவனங்களின் செயற்பாடுகளோடு ஊடக நிறுவனங்களின் செயற்பாடுகள் ஒத்திருத்தலை எடுத்துக்காட்டுகிறார். சந்ததி உருவாக்குதல், சமூக மயமாக்குதல், சமூக உணர்வையும், சமூக அமைப்பையும் பராமரித்தல் என்றிவ்வாறான நிலைகளில் இவ்விரண்டு நிறுவனங்களின் செயல்களை ஆராய்ந்துரைக்கிறார். ஜோசு எம். ஷெபார்ட், கிங்ஸ்லே டேவிஸ், மேக் இவர், பேஜ், எச்.இ. பர்னால், சி.ஏ.எல், ரோசன்கிரன், ஹெராக் கிரிட்டஸ், ராட்கிளிப் பிரௌஎன், மோரீஸ் ஜின்ஸ், டோர், கே.எஸ்.சீதாராம், சங்கர்ராவ் என்று பல அறிஞர்களின் கருத்துக்களையும் தம் ஆய்வுரைக்கு இவர் பயன்கொண்டிருக்கிறார்.

திருவள்ளுவர் தம் குறட்பாக்களில் ஈகை பற்றிக் கூறும் கருத்துக்களோடு, திருக்குர்ஆனில் ஜக்காத் பற்றி அறியப்படும் செய்திகளை ஒப்பிட்டுரைக்கிறார். சை. வஹிதாகௌசியா. அவ்வகையில் 'ஒப்புரவு', 'ஈகை' என்னும் திருக்குறள் அதிகாரச் செய்திகளையும், திருக்குர்ஆன் 'ஜக்காத்' என்பதற்குக் குறிக்கும் உண்மை, தருமம், வளர்ச்சி நிலை என்பனவற்றை விளக்கியும், ஒப்பிட்டும் இக்கட்டுரையில் செய்திகள் கூறப்படுகின்றன. தம் ஆய்வுரையின் முடிவாக ஈகை குறித்துத் திருக்குறள் கூறும் கருத்துக்கள் மற்றும் ஜக்காத் குறித்துத் திருக்குர்ஆன் கூறும் கருத்துக்கள் ஆகியவற்றின் அடிப்படையில் திருக்குறளும், இசுலாமும் இன்றைய நடைமுறைச் சமூகத்தில் காணலாகும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளையும், அவற்றைச் சீர்செய்யும் முறைகளையும் கூறுகின்றன என்கிறார் கட்டுரையாளர்.

ஆய்வாளர் சீ. காயத்ரிதேவி, திருவள்ளுவர் மற்றும் ரோமப் பேரரசராக இருந்த மார்க்க அரேலியர் ஆகிய இருவரையும் அவர்தம் கருத்து நிலைகளில் ஒப்பாய்வு செய்கிறார். அவ்வகையில் அறம், அறன் வலியுறுத்தல், இறை, இல்லறம், தீவினை அஞ்சுதல், ஒழுக்கம் போற்றுதல், மனத்தூய்மை, பகைவர்க்கு அருளுதல், என்பன பற்றிய இருவரின் கருத்துக்களும் இவர்தம் கட்டுரையில் ஆயந்துரைக்கப் படுகின்றன. ஒரு குறிப்பிட்ட காலநிலையில் வெவ்வேறு நாடுகளில், பின்புலத்தில் வாழ்ந்த இரண்டு அறச்சிந்தனையாளர்களின் கருத்துக்களை ஒப்பிட்டுக் காட்டுவதன் வாயிலாக, உலகப் பொதுநோக்கில் உலகத்தவர்க்கு நற்கருத்துக்களைக் கூறுவதும், அவர்களை நல்வழிப்படுத்துவதுமான எண்ணமும், தேவையும் இருந்தன என்பதனை இக்கட்டுரை சுட்டிக்காட்டுகிறது.

கிறித்தவ சமயத் திருமறையான திருவிவிலியத்தில் அமைந்துள்ள திருமறை வசனங்களின் அடிப்படையில் 'கிறித்தவ சமயம் காட்டும், இறைக்கோட்பாட்டில் தந்தை என்பதன் பண்புருவாக்கம்' பற்றிய செய்திகளை ஆராய்ந்திருக்கிறார் ஆய்வாளர் பு. தங்கமாரியம்மாள். அவ்வகையில், நீதிபரர், உலக இயக்க நிலைக்கு அப்பாற்பட்டவர், அருளும் ஆசியும் வழங்குபவர் என்பனவற்றைத் தந்தை என்பதற்கான பண்புறுப்புக்களாக எடுத்துக்காட்டி விளக்குகிறார் இவர். இத்தகைய

பண்புருவாக்கத்திற்குரிய தந்தையான இறைவனை ஏற்றுப் பின்பற்றுவோர் தூய்மையும், செழுமையும் பெறுவர் என்பது கட்டுரையின் உள்ளீடாகக் காணப்படுகிறது.

ஆய்வாளர் ச. ஆமினாபர்வின் தம் ஆய்வுக்கட்டுரையில் திருக்குர்ஆனில் குறித்த வரலாற்று நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டுவதோடு அதற்கு முற்காலத்தில் வாழ்ந்தவர்கள் பற்றிய செய்திகளையும் தெரிவிக்கிறார். திருக்குர்ஆனிற்கு முன்னதாக புர்கான், தவ்ரத், இன்ஜீல், ஜபூர் ஆகிய நான்கு வேதங்கள் இருந்தமை, அவை குறித்த செய்திகள், அவற்றிக்குப் பின் திருக்குர்ஆன் வந்தமைக்கான காரணம் ஆகியன இக்கட்டுரையில் கூறப்படுகின்றன. திருக்குர்ஆனில் வரலாற்று நிகழ்ச்சிகள் இடம்பெற்றுள்ளதற்கான காரணங்களையும், அந்நிகழ்ச்சிகள் வாயிலாகக் குறிக்கப்பெறும் நபிமார்கள் பற்றிய குறிப்புக்களையும் விரிவாக விளக்கியிருக்கின்றார் கட்டுரையாளர்.

இப்பரல்கள் நூலில் பல்துறை சார்ந்த, பல்சமயம் சார்ந்த, வாழ்வியல் குறித்த பல செய்திகள் வழங்கப்பட்டுள்ளன. இவை வாழ்க்கை மேம்பாட்டிற்கும், மேலாய்வுகளுக்கும் உதவக்கூடியன. எம் தமிழ் ஆய்வாளர்களின் முன்னையப் பரல்கள் நூல்களைப் பயன்கொண்டது போலவே இப்பரல்கள் நுலையும் அறிஞர் உலகம் பயன்கொள்ளும் என நம்புகிறேன்.

மதுரை 625 021

சனவரி 30, 1999

**மு.மணிவேல்**

# பொருளடக்கம்

# ஆய்வுக் கட்டுரைகள்

## காப்பிய இலக்கியம் / இலக்கணம் / இக்கால இலக்கியம் / தகவல் தொடர்பியல் / ஒப்பிலக்கியம் / சமய இலக்கியம்

பரல்கள் 12, சனவரி 1999, பக். 9 – 20, ⓟ தமிழ் ஆய்வாளர் மன்றம், மதுரை

# சிலம்பில் மலிவு *

இராம. தனசேகரன்

*தமிழியற் புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,*
*மதுரை 625 021, இந்தியா*

**ஆய்வுச்சுருக்கம்.** மலிவு – மகிழ்ச்சி. தலைமக்கள் கற்பில் இல்லொழுக்கம்; புணர்ச்சியால் மகிழ்தல். சிலம்பில் மலிவு குறித்த நிகழ்வுகள் – கோவலன், கண்ணகி இல்லற இன்பம்; இன்ப நுகர்வு; கோவலன் கண்ணகியை நலம் பாராட்டல். கோவலன் மாதவி புணர்வின்பம். புகாரில் பிற மகளிர் புணர்ச்சி மகிழ்தல். மாதவி, கோவலன் மகப்பேற்று மகிழ்வு போல்வன.

*கருச்சொற்கள்.* தமிழ்க் காப்பியம்; சிலப்பதிகாரம்; மகிழ்வு; இல்லொழுக்கம்; புணர்வின்பம்; மகப்பேறு.

## 1. அறிமுகம்

அகப்பொருளின் களவு, கற்பு ஆகிய இருவகைக் கைகோள்களுள், கற்பிற்கு முதன்மை கொடுத்துப் படைக்கப்பட்ட காப்பியம் சிலப்பதிகாரம். மலிவு, புலவி, ஊடல், உணர்வு, பிரிவு ஆகிய ஐந்து அகப்பொருள் கூறுகளைத் தன்னகத்தே கொண்டமைவது கற்பொழுக்கம். இவற்றுள் இல்லொழுக்கம், புணர்ச்சி மகிழ்தல், மகப்பேற்று மகிழ்வு முதலான மலிவு குறித்த தொல்காப்பியரின் வரையறைகளைச் சிலம்பில் பொருத்தி, அவற்றை மதிப்பிடும் நோக்கில் இக்கட்டுரை அமைகின்றது.

---

* தமிழ் ஆய்வாளர் மன்ற புதன் வட்டக் கருத்தரங்கில் (செப்டம்பர் 9, 1998) படிக்கப் பெற்றது

## 2. மலிவு

மலிவு—மகிழ்ச்சி. மலிவு குறித்த அறிஞர்தம் கருத்துக்கள் இவண் குறிப்பிடத்தக்கது. அவை:

- **"மலிவு என்பது இல்லொழுக்கம், புணர்ச்சி முதலிய வற்றால் மகிழ்தல்"** [1] என்பர் பேராசிரியர்.

- **"களவொழுக்கம் மேற்கொண்ட தலைமக்கள் களவு முற்றி, மணம் புரிந்து, கற்பு வாழ்வில் தடைகள் ஏதுமின்றி, தன் மனக்குறைத் தீரக் கூடிக் கலந்தின் புற்று மகிழ்வதே மலிவு"** [2] என்பது புலவர் குழந்தை – யின் கருத்து.

- மலிவு குறித்த தொல்காப்பியரின் வரையறைகள்:

  **"தலைவனும் தலைவியும் களவில் நிகழ்ந்தவற்றை ஒருவர் மற்றொருவரோடு கூறி இன்புறுவதுடன், அப்பொழுது ஏற்பட்ட இடையூறுகள், தவறுகள் இனி ஏற்படாது எனத் தெளிந்து, ஒருவர் மீது ஒருவர் அன்பு செலுத்தி இன்பம் நுகர்தல்,**

  **தலைவி களவுக்காலத்தில் வருந்திய வருத்தம் தீரத் தன் காதல் மிகுதி தோன்றச் சொல்லும் பொருளினைச் செவிமடுத்த தலைவன், இனித் தம்மிடையே பிரிவு நேராது எனக்கூறி, அவளது அச்சத்தினைப் போக்குதல். தலைவன் தலைவியைப் பெற்றமைக்காகப் பெருமிதம் கொள்ளுதல்; தலைவி, தலைவனின் பெருமைகளை யெல்லாம் எடுத்துரைத்து மகிழ்தல்,**

  **தலைவியுடன் இன்புற்று இல்லறம் நடத்தும் தலைவன், அத்தலைவியின்பால் தான் பெறும் இன்பம் எப்பொருளினும் சிறப்புடைத்து என்று கூறி மகிழ்தல், அத்துடன் யாதானும் ஒன்றை நுகரும் தலைவன், தலைவியிடம் நீ கையால் தொட்டது வானோர் அமிழ்தம் போல் இனிக்கிறதே; அதன் காரணம் யாதெனக் கேட்டலும், தலைவி தலைவனிடம் அன்று களவுக் காலத்தே நும்மைப் பார்க்கவும் தொடவும் பெருநாண் அடைந்தேனே அதன் காரணம் யாதெனக் கேட்டலும்,**

தலைமக்கட்கே விளங்கா வியப்பைத் தந்து, அவர்களைப் பெரிதும் மகிழ்வித்தல்,

தலைவி பிற பெண்டிர் அஞ்சும்படி சிக்கனமாக இனிதே இல்லறம் நடத்தும் திறன்கண்டு மகிழ்ந்த தலைவன், தலைவியைப் பலப்படப் பாராட்டுதல்; மேலும் தலைவன் இல்லறம் மேற்கொண்ட தலைவியிடம் துறவியர், பெரியோர், பெற்றோர், சுற்றத்தார் போன்றோரிடம் இன்னவாறு நடந்துகொள்ள வேண்டும் என்று கூறத் தலைவியும் அவ்வாறே நடந்து தலைவனை மகிழ்வித்தல்,

தலைவி கருப்பமுற்ற காலத்து சுற்றம் முதலியோர்க்கு விருந்திடல், பிறந்த புதல்வன் முகம் காணல், பெயரிடல், இரவலர்க்குப் பரிசில் வழங்குதல், குழந்தையைக் காக்கவென இல்லுறை தெய்வ வழிபாடியற்றல் போன்றவற்றால் மகிழ்தல்."

இதனைத் தொல்காப்பியர்,

"கரணத்தி னமைந்து முடிந்த காலை
நெஞ்சுதளை யவிழ்ந்த புணர்ச்சி,
அல்லல் தீர வார்வமொ டளைஇச்
சொல்லுறு பொருள், சொல்லென
ஏனது சுவைப்பினு நீகை தொட்டது
வானோ ரமுதம் புரையுமா லெமக்கென
அடிசிலும் பூவுந் தொடுத்தல்,
அந்தணர் திறத்துஞ் சான்றோர் தேஎத்தும்
அந்தமில் சிறப்பிற் பிறர்பிறர் திறத்தினும்
ஒழுக்கங் காட்டிய குறிப்பு,
நோன்மையும் பெருமையும் மெய்கொள வருளிய
பன்னல் சான்ற வாயிலொடு பொருந்தித்
தன்னின் ஆகிய தகுதி,
புதல்வற் பயந்த புனிறுசேர் பொழுதின்
நெய்யணி மயக்கம் புரிந்தோ ணோக்கி
ஐயர் பாங்கினு மமரர்ச் சுட்டியுஞ்
செய்பெருஞ் சிறப்பொடு சேர்தல்"[3]

என்று குறிப்பிடுகின்றார்.

## 3. சிலம்பில் மலிவு

சிலம்பில் இளங்கோவடிகள் பதிவு செய்துள்ள மலிவு குறித்த நிகழ்வுகளை மூன்று வகைப்படுத்தலாம். அவை:

- **கோவலன், கண்ணகி ஆகியோர்தம் வாழ்வில் இடம் பெற்றுள்ள மலிவு குறித்த நிகழ்வுகள். கோவலனும் கண்ணகியும் மெய்யுற்றுப் புணர்ந்த இன்ப நுகர்வு, அவ்வின்ப நுகர்வின் காரணமாகக் கோவலன், கண்ணகியை நலம் புனைந்துரைத்த நெஞ்சுதளை யவிழ்ந்த காமப்புணர்ச்சி, மற்றும் கோவலன், கண்ணகி இருவர்தம் இல்லொழுக்கம்.**

- கோவலன், மாதவி ஆகியோரின் வாழ்வில் அமைந்துள்ள மகிழ்வு தொடர்பான நிகழ்வுகள். கோவலனும் மாதவியும் ஊடலும் கூடலும் கொண்டு துய்த்த உடனுறை புணர்வின்பம், மற்றும் கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்த பெண்மகவிற்கு 'மணிமேகலை' எனப் பெயர் சூட்டி மகிழ்தல்.

- புகார் நகரில் தத்தம் காதலருடன் கூடிக்களித்த பிற மகளிர்தம் புணர்வின்ப மகிழ்வு

போன்றவை ஆகும்.

### 3.1 இல்லொழுக்கம்

தலைமக்கள் மணம் புரிந்து வாழ்தலே இல்லொழுக்கம். இது களவு, கற்பு ஆகிய இருவகை ஒழுக்கங்களுள் கற்பொழுக்கத்தின்பால் அமைவது. களவு வெளிப்பட்டு, தமர் கொடுப்பக் கொள்ளும் மணவினை நிறைவேறிய பின்பு, மலிவு உள்ளிட்ட வாழ்வினைத் தலைமக்கள் மேற்கொள்வதே கற்பென வழங்கப்பெறும். கற்பு என்பது இல்லறவொழுக்கமாகும்[4].

இளங்கோவடிகள் சிலம்பில் கோவலனும் கண்ணகியும் புகாரில் நடத்திய இல்லற மாண்பு, மற்றும் மதுரை ஆயர்பாடியில் இடைக்குல மடந்தை மாதரியின் இல்லத்தில் நடத்திய ஒரு நாள் இல்லறச் சிறப்பு போன்றவற்றினைப் பதிவு செய்துள்ளார்.

புகாரில் கோவலன், கண்ணகி ஆகிய இருவரும் இன்பம் நுகர்ந்துவருங்கால், கோவலனின் தாய் அவ்விருவரும் இல்வாழ்வோர்க்கு இன்றியமையாத சுற்றந்தழாஅல், அறவோர்க்களித்தல், விருந்தோம்பல் முதலான அறச்செயல்கள் புரிந்து, இல்லறம் நடத்த வேண்டி, தம் பொருளில் ஒரு பகுதியை அவர்களுக்குப் பகுத்துக் கொடுத்து, அவர்களைத் தனி மனைப்படுத்தினார். கண்ணகியும் பிறர் போற்றும்வண்ணம் ஒருசில ஆண்டுகள் இனிதே இல்லறம் நடத்தினாள்.

மேலும் கண்ணகி, மதுரை ஆயர்பாடியில் மாதரி இல்லத்தில் நடத்திய ஒரு நாள் இல்லறச் சிறப்பும் குறிப்பிடத்தக்கதாகும். கண்ணகி இடைக்குல மடந்தையர் கொடுத்த கோளிப்பாகல், வெள்ளரிக்காய், இளமாதுளங்காய், மா, பலா, வாழை, முதலான காய்களுடன் செந்நெல் அரிசி, பால், தயிர், நெய் ஆகியவற்றைக் கொண்டு தனது கைவன்மையால் உணவு சமைத்தாள்.

கண்ணகி தனது மெல்லிய விரல்கள் சிவக்கும்படியாகக் காய்களை அரிந்து, முகம் வியர்க்க, கண்கள் சிவக்க, தனது கைகள் பயின்றறியாத சமையல் தொழிலைச் செய்து, தன் காதலனுக்கு உணவு சமைத்தாள். பின்பு அழகிய பனைஓலை இருக்கையில் கோவலனை அமரச்செய்து, நன்னீரால் அவனது பாதங்களைக் கழுவி, குமரி வாழை இலை பரப்பி, அதில் அமுது படைத்துக் கோவலனை உண்பித்தாள். கோவலனும் உண்டு மகிழ்ந்தான். உண்டு மகிழ்ந்த கோவலனுக்குக் கண்ணகி வெற்றிலைச்சுருளோடு பாக்கும் கொடுத்து மகிழ்ந்தாள். இதனை,

> **"மெல்விரல் சிவப்பப் பல்வேறு பசுங்காய்**
> **கொடுவாய்க் குயத்து விடுவாய் செய்யத்**
> **திருமுகம் வியர்த்தது செங்கண் சேந்தன**
> **கரிபுற அட்டில் கண்டனள் பெயர**
> **வையெரி மூட்டிய ஐயை தன்னொடு**
> **கையறி மடமையிற் காதலற் காக்கித்**
> ..................................................................
> **குமரி வாழையின் குருத்தகம் விரித்தீங்கு**
> **அமுத முண்க அடிக ளீங்கென"** [5]

என்று இளங்கோவடிகள் குறிப்பிடுவதிலிருந்து அறியலாம்.

கண்ணகி தனது கைவன்மையால் தான் பயின்றறியாத, சமையல் தொழிலால் உணவு சமைத்துக் கோவலனை உண்பித்து, அவனை மகிழ்வித்துத் தானும் மகிழ்ந்த நிகழ்வானது, குறுந்தொகையில் காணலாகும் ஒரு தலையின் செயலினை ஒத்துள்ளது. இனிதே இல்லறம் நிகழ்த்தும் குறுந்தொகைத் தலைவி, சமைத்த புளிக்குழம்பை இனிதென்று கூறித் தலைவன் உண்ணும் போது, அவளது அகமகிழ்வினை முகம் வெளிப்படுத்துகின்றது. இதனை,

**"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**
**கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்**
**குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்**
**தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்**
**இனிதெனக் கணவன் உண்டலின்**
**நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே"[6]**

என்ற குறுந்தொகைப் பாடல் உணர்த்துகின்றது. இது போன்றே கோவலன் கண்ணகியின் சமையல்திறன் கண்டு பெரிதும் உவந்தான். இவ்வாறாக, மாதரி இல்லத்தில் கண்ணகி, கோவலன் ஆகிய இருவரின் ஒரு நாள் இல்லற இன்பத்தினை எடுத்துக்காட்டிய இளங்கோவடிகள், அதன்வழிப் புகாரில் கோவலனும் கண்ணகியும் நடத்திய இல்லற மாண்பினை உய்த்துணர வைத்துள்ள திறன் போற்றுதற்குரியது.

தலைவி தன் சமையல்திறனால் தலைவனை மகிழ்வித்தல், இல்லற இன்பங்களுள் தலைசிறந்த ஒன்றாகும். அவ்வகையில் கண்ணகியும் மதுரை ஆயர்பாடியில் தானே பெரிதும் முயன்று சமைத்து, கோவலனுக்கு உணவு படைத்து, அவனை மகிழ்வித்ததுடன் தானும் மகிழ்ந்து, சிறந்த இல்லறவின்பத்தைப் பெற்றவளாகின்றாள்.

## 3.2 புணர்ச்சி மகிழ்தல்

களவொழுக்கத்தில் உள்ளம் புணர்ந்த தலைமக்கள் உடற்புணர்ச்சிக்கு அவாவுவர். அப்பொழுது உடல் ஒன்றுதற்குத் தக்க தனி இடம் தேர்வர். இடம் வாய்ப்பின் இன்பப்பாயல் கொள்வர். தக்க தனி இடம் வாய்க்காவிடில் வரைவு முடிந்த நிலையில் மெய்யுறு புணர்ச்சி எய்துவர்

சிலம்பில் கோவலன், கண்ணகி ஆகியோர்தம் வாழ்வில் களவொழுக்கம் நிகழ்ந்ததற்கான சுவடு ஏதும் இல்லை. எனவே பலரறி மணம் புரிந்த கோவலன், கண்ணகி இருவரும் மனம் மகிழ்ந்து,

மெய்யுறு புணர்ச்சியை விரும்பி, தென்றல் தவழும் இடைநிலை மாடத்து, மணிக்கால் அமளி மலர்ப்பாயலில், ஞாயிறும், திங்களும் போல வீற்றிருந்தனர். அப்பொழுது கோவலன் கண்ணகியின் நாணத்தைப் போக்க வேண்டி, அவளது பெருந்தோளில் சந்தனக்குழம்பு கொண்டு தொய்யில் எழுதி அவளை மகிழ்வித்துத் தானும் மகிழ்ந்தான். பின்பு இருவரும் புல்லி புணர்ச்சிப் பேரின்பம் எய்தினர். இதனை,

> **"வெண்தோட்டு மல்லிகை விரியல் மாலையொடு**
> **கழுநீர்ப் பிணையல் முழுநெறிப் பிறழத்**
> **தாரு மாலையும் மயங்கி"** [7]

என்று இளங்கோவடிகள் குறிப்பிடுவதிலிருந்து அறியலாம்.

இதில் மெய்யுற்றுப் புணர விரும்பிய கோவலன், கண்ணகி இருவர்தம் உள்ள விருப்பும், தென்றல் வரவு, மலர்ப்பாயல் போன்றப் புறச்சூழல்களும், சந்தனக்குழம்பு கொண்டு தொய்யில் எழுதிய கோவலனின் செயல்திறனும் அவர்களின் இன்ப நுகர்விற்கு வழிவகுத்து, அவர்களைப் பெரிதும் மகிழ்வித்துள்ளன.

காதல் வயப்பட்ட தலைவனும், தலைவியும் ஒருவரையொருவர் புகழ்ந்து கொள்வர். ஆனால் மெய்யுறு புணர்ச்சிக்குப்பின் தலைவன் தலைவியை வெளிப்படையாகப் புகழ்ந்து நலம் பாராட்டுதல் போல் தலைவி, தலைவனைப் பாராட்டுவது அகமரபன்று. மாறாக தலைவனைத் தலைவி மனத்தளவிலேயே பாராட்டுவாள். இவ்அக மரபினை அடியொற்றியே இளங்கோவடிகள் கோவலன், கண்ணகி இருவரின் இன்பப் புணர்விற்குப் பின் கோவ்லன்பால் நலம் புனைந்துரைத்தலை அமைத்துள்ளார். மேலும் கண்ணகி, கோவலனைத் தன் மனத்தளவில் புகழ்ந்து பாராட்டியிருப்பாள் என்பதனை உய்த்துணரும் வண்ணம் படைத்துக் காட்டியுள்ளார்.

சிலம்பில் கோவலன், கண்ணகியின்பால் துய்த்த இன்ப நுகர்வின் காரணமாக அவளது அழகுநலன் மற்றும் பண்புநலன் குறித்துப் பெரிதும் பாராட்டுகின்றான். கண்ணகியின் தோற்றப் பொலிவில் மயங்கிய கோவலன், அவளது உறுப்பழகினை வியந்து, இரதியிற் சிறந்து இலக்குமி ஒத்த வடிவழகினையும், சிவனின் இளம்பிறையினை நுதலாகவும், காமவேளின் கரும்புவில்லைப் புருவங்களாகவும், முருகவேளின் வேலாயுதத்தைக் கண்களாகவும் கொண்ட பேரழகி என்று அவளது அழகின் சிறப்பினைப் பாராட்டுகின்றான்.

மேலும் கண்ணகியின் பண்புநலன் குறித்து மயில்கள் தோற்கும் சாயலும், அன்னங்கள் வியக்கும் மென்னடையும், கிளிகள் மயங்கும் இனிய மொழியும் வாய்க்கப் பெற்றவள் என்றும், அன்பு, அடக்கம், நாணம், பெருந்தன்மை ஆகிய குடிப்பண்புகள் நிறைந்த பெருமடமகள் என்றும், தன்னை வாழ்விக்கும் இனிய அமிழ்து என்றும், தன்னை இன்புறுத்துகின்ற இசை என்றும் பலப்படப் பாராட்டுகின்றான். இவ்வாறாக கோவலன் கண்ணகியைப் பாராட்டும் விதத்தினை,

> **"மாசறு பொன்னே வலம்புரி முத்தே**
> **காசறு விரையே கரும்பே தேனே**
> **அரும்பெறற் பாவாய் ஆருயிர் மருந்தே**
> **பெருங்குடி வாணிகன் பெருமட மகளே**
> **மலையிடைப் பிறவா மணியே யென்கோ**
> **அலையிடைப் பிறவா அமிழ்தே யென்கோ**
> **யாழிடைப் பிறவா இசையே யென்கோ"** [8]

என்று இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார்.

கோவலனின் இப்பாராட்டுரை கண்ணகியின்பால் பெற்ற இன்பப்புணர்வின் காரணமாக அவன் உள்ளத்தின் மகிழ்ச்சியினை வெளிப்படுத்துகின்றது. கோவலனின் இந்நலம் புனைந்துரைத்தலை 'நெஞ்சுதளை யவிழ்ந்த காமப்புணர்ச்சி' [9] என்பர்.

அடுத்து கோவலன், மாதவி ஆகியோர்தம் புணர்வின்பம் குறிப்பிடத்தக்கது. மாதவி ஆடல், பாடல், அழகு ஆகிய மூன்றிலும் சிறந்து கலையரசியாக விளங்கி, சோழ மன்னனால் 'தலைக்கோலி' பட்டம் வழங்கிச் சிறப்பிக்கப் பெற்றவள். இத்தகு சிறப்பு வாய்ந்த மாதவி, பச்சை மாலையுடன் தன்மனை புகுந்த கோவலனைப் பேரார்வத்துடன் எதிர்கொண்டு, மணவாளனாக ஏற்று மகிழ்ந்தாள். அத்துடன் இனிய அந்தி மாலைப்பொழுதில் மலர்ப்பாயலையுடைய பள்ளியிடத்தே தங்கிக் கோவலனை எய்தினமையினால் புதுப்பொலிவு பெற்றும் திகழ்ந்தாள். மேலும் நிலா முற்றத்தின்கண் கோவலனுக்குக் கலவியும், புலவியும் கலந்து வழங்கி, அவனை மகிழ்வித்துத் தானும் மகிழ்ந்தாள். இதனை,

> **"கலவியும் புலவியுங் காதலற் களித்தாங்கு**
> **ஆர்வ நெஞ்மொடு கோவலற் கெதிரிக்**
> **கோலங் கொண்ட மாதவி"** [10]

என்ற இளங்கோவடிகளின் கூற்று மெய்ப்பிக்கின்றது.

மேலும் மாதவி கோவலனுடன் சிறந்த காதல் வாழ்வினை மேற்கொண்டவள் ஆவாள். காதல் வாழ்வில் இன்பப் பெருக்கின் திறவுகோலாய் அமைவது ஊடல். அத்தகு ஊடலின் நுட்பத்தினை நன்கு உணர்ந்து, அதனைக் கோவலனுடன் சிறந்த முறையில் பகிர்ந்து கொண்டவள் மாதவி. மெய்யுறு புணர்ச்சியில் மேன்மேலும் புணர்வின்பத்தைப் பெருக்கவல்ல ஊடலினைத் தக்க தருணத்தில் வழங்கி, கோவலனைப் பெரிதும் மகிழ்வித்தவள் மாதவி. அதனால் கோவலன் தான் கண்ணகியிடம் பெறாத ஊடலின்பத்தினை மாதவியின்பால் பெற்று மகிழ்ந்தான். மாதவி கோவலனுக்கு வழங்கிய புணர்வின்பச் சிறப்பினை,

**"கூடலும் ஊடலும் கோவலற் களித்துப்**
**பாடமை சேக்கைப் பள்ளியு ளிருந்தோள்"** [11]

என்று இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார்.

கலைமனம் கொண்ட கோவலனின் இன்பப் பெருக்கிற்கு மாதவி ஒரு கருவியாய் அமைந்துள்ளாள். மாதவியின் பேரெழிலும், கலைத்திறனும் கோவலனின் கலைரசனைக்குப் பெருவிருந்தாய் அமைந்து, அவர்கள் இருவரையும் ஒன்றாய் இணைத்து, நெடுநாள் இன்ப வாழ்விற்கு வழிவகுத்துள்ளன. மாதவியும் கோவலனின் கலைரசனைக்கேற்ப நடந்து, அவனைப் பெரிதும் மகிழ்வித்துள்ளாள். கோவலனை மகிழ்விப்பதில் கண்ணகியைவிட மாதவி சிறந்து விளங்கியமை அவள் கோவலனிடம் மேற்கொண்ட செயல்திறன்களின் வழி அறியலாம். மாதவி கலையரசியாக விளங்கியமை, அவளது இசைத்திறன், பல்வகை அணிகலன்களை அணிந்து தன்னை விதவிதமாக அலங்கரித்துக் கொண்டமை, கோவலனிடம் உரிமையுடன் ஊடல் கொள்ளும் போக்கு போன்றவை கோவலனை மகிழ்விக்க மாதவி மேற்கொண்ட செயல் முறைகளாகும். இச்செயல் முறைகள் மாதவி, கோவலன் ஆகியோர்தம் புணர்வின்பம் சிறக்கப் பெரிதும் உதவிய காரணிகளாய் அமைந்துள்ளன.

புகாரில் கோவலன் மாதவியன்றியும், தத்தம் காதலரைப் புணர்ந்திருக்கும் வாய்ப்புடைய பிற மகளிரும், மெய்யுறு புணர்ச்சியால் புணர்வின்பம் எய்தும் நல்வாய்ப்பினைப் பெற்று மகிழ்வெய்தினர். அவர்கள் தத்தம் பள்ளியறையில் சந்தனம் பூசி, மலர்மாலை சூடி, மலர்ப்பாயலில் தங்கி, காதலருடன் கூடிய கூட்டத்தினால் மயங்கி, அவர்தம் மார்பினிடத்தே பொருந்தி, இன்துயில் கொண்டனர். இதனை இளங்கோவடிகள்,

"மந்தமா ருதத்து மயங்கினர் மலிந்தாங்கு
ஆவியங் கொழுந ரகலத் தொடுங்கிக்
காவியங் கண்ணார் களித்துயி லெய்த"[12]

என்று குறிப்பிடுவதிலிருந்து அறியலாம்.

புகார் நகரில் கோவலனும் கண்ணகியும், கோவலனும் மாதவியும், தத்தம் காதலரைப் புணர்வின்பத்தால் மகிழ்வித்த பிற மகளிரும் பெருமகிழ்வெய்தினமை மேற்குறித்த வகையில் சிலப்பதிகாரத்தில் சுட்டப்பட்டுள்ளது.

## 3.3 மகப்பேற்று மகிழ்வு

கற்பு வாழ்வில் தலைமக்கள் புதல்வனைப் பெற்று மகிழ்வர். தலைவன் பரத்தையரைத் தன் இன்ப நுகர்விற்குப் பயன்கொள்வானேயன்றி அவளிடம் குழந்தைப்பேறு கொள்வதில்லை. மாறாக, தலைவனுக்கு உரிமையுடைய தலைவியே குழந்தையைப் பெறுதல் அகமரபு.

சிலம்பில் காப்பியத் தலைவியான கண்ணகிக்குக் குழந்தைப் பேறு வாய்க்கவில்லை. மாறாக, கணிகையர்குலத் தோன்றலான மாதவியே மணிமேகலையை ஈன்றெடுத்தாள். இது கண்ணகிக்கு இல்லாத ஒரு தனிச்சிறப்பாக மாதவிக்கு அமைகின்றது. இளங்கோவடிகள் மாதவியைக் கண்ணகிக்கு நிகராகச் சுட்டுவதற்கே மகப்பேற்றுச் சிறப்பினை மாதவிக்கு வழங்கியுள்ளதாகத் தெரிகின்றது. இது அகப்பொருள் மரபில் இளங்கோவடிகள் செய்துள்ள புதுமையான மரபு மாற்றம் எனலாம்.

மாதவிக்கு மகள் பிறந்த பொழுது அப்பெண் மகவிற்குப் பெயர் சூட்ட எண்ணிய முதிய கணிகை மகளிர் பலர் ஒருங்கு கூடி, அழகிய பெயரொன்றினைக் கூறுமாறு கோவலனை வேண்டினர். கோவலன் தன் முன்னோருள் ஒருவனைக் காத்தருளிய தெய்வத்தை நினைத்து, குழந்தைக்கு 'மணிமேகலை' என்று அத்தெய்வத்தின் பெயரினைச் சூட்டுவோம் என்றான். கோவலன் விருப்பப்படியே கணிகையர் அக்குழந்தைக்கு 'மணிமேகலை' எனப் பெயர்சூட்டி அம்மகவினை வாழ்த்தினர். அப்பொழுது கோவலன், அம்மகவின் ஆக்கங்கருதி, மாதவியுடன் கூடி, செம்பொன் முதலியவற்றை இரவலர்க்கு வாரி வழங்கினான். இதனை,

"அணிமே கலையார் ஆயிரங் கணிகையர்
மணிமே கலையென வாழ்த்திய ஞான்று
மங்கல மடந்தை மாதவி தன்னொடு
செம்பொன் மாரி செங்கையிற் பொழிய"[13]

என்று இளங்கோவடிகள் குறிப்பிடுவதிலிருந்து அறியலாம்.

மேலும் மணிமேகலை பெயர் சூட்டு விழாவில் கோவலனிடம் தானம் பெறுதற் பொருட்டு வந்த முதிய மறையவனை, மதயானையின் பிடியிலிருந்து காத்தருளிய 'கருணை மறவனாக்' கோவலன் விளங்கினான்.[14] கோவலன் இச்செயலால் அம்மறையவனை மகிழ்வித்துத் தானும் மகிழ்ந்துள்ளான்.

## 4. நிறைவு

❖ சிலம்பில் இல்லொழுக்கத்தால் மகிழ்தல் என்ற நிலையில் புகாரில் கோவலன், கண்ணகி இருவர்தம் இல்லற மாண்பு மற்றும் மதுரை ஆயர்பாடியில் மாதரி இல்லத்தில் கோவலன், கண்ணகி இருவரின் ஒரு நாள் இல்லறவின்பம் போன்றவை குறிப்பிடத்தக்கன.

❖ புணர்ச்சியால் மகிழ்தல் என்ற நிலையில் கோவலன், கண்ணகி இருவரின் இன்பப்புணர்வு, கோவலன் கண்ணகியை நலம் புனைந்துரைத்தல், கோவலன், மாதவி ஆகிய இருவரும் துய்த்த உடனுறை இன்பம், மற்றும் புகார் நகரில் தத்தம் காதலருட்டன் கூடிக்களித்த பிற மகளிரின் புணர்வின்பம் போன்றவை அமைந்துள்ளன.

❖ புதல்வனைப் பெறுதல் என்ற நிலையில் மாதவி மணிமேகலையைப் பெறுதலும், மணிமேகலை பெயர்சூட்டு விழாவில் கோவலனும் மாதவியும் இரவலர்க்குப் பொன்னைப் பரிசாக வழங்கி மகிழ்தலும் அமைந்துள்ளன.

## குறிப்புகள்

1. பேராசிரியர், (உ. ஆ.), தொல்காப்பியம் – பொருளதிகாரம், ப. 398
2. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், ப. 166
3. நச்சினார்க்கினியர், (உ. ஆ.), தொல்காப்பியம்–பொருளதிகாரம், 146
4. ந. சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 185
5. சிலப்பதிகாரம், கொலைக்களக் காதை, 29–43
6. குறுந்தொகை, 167
7. சிலப்பதிகாரம், மனையறம்படுத்த காதை, 33–35
8. மேலது., 73–79
9. கொ. இலட்சுமணசாமி, சிலப்பதிகாரம் – மணிமேகலை காப்பிய மரபு, ப. 80
10. சிலப்பதிகாரம், அந்திமாலை சிறப்புச்செய் காதை, 32–34
11. சிலப்பதிகாரம், கடலாடு காதை, 109–110
12. சிலப்பதிகாரம், அந்திமாலை சிறப்புச்செய் காதை, 43–46
13. சிலப்பதிகாரம், அடைக்கலக் காதை, 35–41
14. சிலப்பதிகாரம், அடைக்கலக் காதை, 53

## துணை நூல்கள்


இலட்சுமணசாமி, கொ., சிலப்பதிகாரம் – மணிமேகலை காப்பிய மரபு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம், 1975

இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், கழக வெளியீடு, சென்னை, 1969

புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், பாரி நிலையம், சென்னை, 1959

சுப்பு ரெட்டியார், ந., தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை, பழநியப்பா பிரதர்ஸ், சென்னை, 1988

சோமசுந்தரனார், பொ.வே., (உ. ஆ.), குறுந்தொகை, கழக வெளியீடு, சென்னை, 1978

பேராசிரியர், (உ. ஆ.)
நச்சினார்க்கினியர், (உ. ஆ.), தொல்காப்பியம் – பொருளதிகாரம், கழக வெளியீடு, சென்னை, 1980 ■

பரல்கள் 12, சனவரி 1999, பக். 23 – 47, ⓟ தமிழ் ஆய்வாளர் மன்றம், மதுரை

# சிலம்பில் முல்லை *

இராம. தனசேகரன்
தமிழியற் புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை 625 021, இந்தியா

**ஆய்வுச்சுருக்கம்.** முல்லை – இருத்தல். 'முல்லை' காதலரின் தூய இன்ப வாழ்வினைக் குறிக்கும் ஓர் அடையாள மலர்; கற்பொழுக்கத்தினைக் குறிக்கும் ஒரு குறியீடு. சிலம்பில் இருத்தல், ஆற்றுவித்தல், தலைவன் வரவு, இல்லற இன்பம் முதலான முல்லைக் கூறுகள் இடம் பெற்றுள்ளன.

இருத்தல் – கோவலனைப் பிரிந்த கண்ணகி மற்றும் மாதவி, புகார் நகரில் காதலரைப் பிரிந்த பிற மகளிர் போன்றோர் முறையே தத்தம் காதலர் வரவெண்ணி ஆற்றியிருத்தல். ஆற்றுவித்தல் – கண்ணகியின் பிரிவாற்றாமையைக் கண்ட தோழி தேவந்தி, கோவலனை மீண்டும் பெற, தம்கால வழக்கான புண்ணிய துறைகள் மூழ்குதல்; காமவேளை வழிபடல் முதலானவற்றினைக் கூறி ஆற்றுவித்தல். தலைவன் வரவு – மாதவியின்பால் புறத்தொழுக்கம் மேற்கொண்ட கோவலன் வறுமையுற்று, அவள்மேல் ஐயம் கொண்டு, அவளைப் பிரிந்து கண்ணகியை நாடி வருதல். இல்லற இன்பம் – மதுரை ஆயர்பாடியில் கோவலன், கண்ணகி ஆகியோரின் ஒரு நாள் இல்லற இன்பம் அவர்கள் ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொள்ள வழி வகுத்தல்.

**கருச்சொற்கள்.** தமிழ்க் காப்பியம்; சிலப்பதிகாரம்; ஆற்றியிருத்தல்; ஆற்றுவித்தல்; தலைவன் வரவு; இல்லற இன்பம்.

## 1. அறிமுகம்

தொன்மைக் காலந்தொட்டு தமிழ், கிரேக்கம் முதலான பல்வேறு மொழி இலக்கியங்களில் முல்லைப்பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

* தமிழ் ஆய்வாளர் மன்ற புதன் வட்டக் கருத்தரங்கில் (சனவரி 6, 1999) படிக்கப் பெற்றது.

உலகின் பல்வேறு மொழி இலக்கியங்களில் முல்லைப்பாடல்கள் இடம் பெற்றிருந்த போதிலும், அவற்றின் பாடுபொருளில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. கிரேக்க முல்லைப்பாடல்கள், 'மலைப்பின்னணியில் வாழ்ந்த இடையர்தம் எளிய வாழ்வு, இயற்கை, காதல், இசை மற்றும் பொற்காலக்கனவு' போன்றவற்றினைப் பாடுபொருளாய்க் கொண்டுள்ளன.[1] ஆங்கில முல்லைப்பாடல்கள், 'நகர வாழ்விலிருந்து விலகி நாட்டுப்புறத்தின் நலங்களைத் துய்த்தல், எளிமையின் இனிமையில் மகிழ்தல், அமைதியான வாழ்வினை நாடுதல் போன்றவற்றினை மையமாகக் கொண்டு முல்லை நிலப் பெண்களின் காதல், ஆயர்கள் வாழ்வு, இயற்கைப்புனைவு' போன்றவற்றினைப் பாடுபொருளாய்க் கொண்டுள்ளன.[2] தமிழ் முல்லைப்பாடல்கள் 'காதலி, காதலன் வரவை எதிர்நோக்கி ஆற்றியிருக்கும் கற்பொழுக்கம்' பற்றியே பெரிதும் பேசுகின்றன. தமிழ் முல்லைப்பாடல்கள், ஆயர்கள் வாழ்வினைப் பேசினும் இலட்சிய ரீதியாக உயர்ந்து நின்று 'இருத்தல்' என்னும் ஒழுக்கத்தினை மிகுதியும் பேசிய பெருமைக்குரியதாகும். செயலைவிடச் செயற்படும் மனித உணர்விற்குப் பெரிதும் முக்கியத்துவம் தரப்பட்டுள்ள சிறப்பு, தமிழ் மரபிற்கே உரிய தனித்தன்மையாகும். இவ்வகையில் தமிழ் முல்லைப்பாடல்கள் பிறமொழி இலக்கிய முல்லைப் பாடல்களிலிருந்து உயர்ந்து விளங்குகின்றன.[3] இத்தகுச் சிறப்பு வாய்ந்த முல்லைக்கூறுகளின் தாக்கம் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகளால் பதிவு செய்யப்பட்டுள்ளன. அவ்வகையில் சிலம்பில் இடம்பெற்றுள்ள இருத்தல், ஆற்றுவித்தல், தலைவன் வரவும் தலைவி மகிழ்வும், மற்றும் மகிழ்ச்சி நிரம்பிய இல்லற இன்பம் முதலான முல்லைக்கூறுகளின் திறனை மதிப்பிடுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

## 2. முல்லை

முல்லை குறித்த அறிஞர்தம் கருத்துக்கள் இவண் குறிப்பிடத்தக்கது.

- **'முல்லை' – காதலரின் தூய இன்ப வாழ்வினைக் குறிக்கும் ஓர் அடையாள மலர்;[4]**

- **கற்பொழுக்கத்தினைக் குறிக்கும் ஒரு குறியீடு.[5]**

தூய்மையான அழகும், இனிய மணமும் கொண்ட முல்லை மலர், மாலைப்பொழுதில் இல்லம் திரும்பும் கணவர்க்கும்,

இல்லத்திலிருந்தவாறே கணவனை எதிர்நோக்கும் மனைவியர்க்கும் ஒருங்கே உள்ளத்தைக் கவரக்கூடியது. ஆதலின் காதலரின் தூய இன்ப வாழ்வினைக் குறிக்கும் ஓர் அடையாள மலராய் 'முல்லை மலர்' அமைந்துள்ளது. வினைமேற்செல்லும் தலைவன், தன் கடமை முடித்துக் கார் காலத்திற்குள் திரும்புவதாகவும், அதுவரையில் தலைவி தான் ஆற்றியிருப்பதாகவும் கூறி, ஒருவருக்கொருவர் கட்டுப்பட்டு, சொல் தவறாமல் இயைந்து நடப்பர். கற்பெனப்படுவது சொற்றிறம்பாமையாகலின் 'முல்லை' கற்பினைக் குறிக்கும் ஒரு குறியீடாய் அமைந்துள்ளது.

தமிழ் முல்லைப்பாடல்கள் தலைவனைப் பிரிந்த தலைவியின் பிரிவுத்துயர், வினைமேற்சென்ற தலைவன், தனித்திருக்கும் தலைவி குறித்து எண்ணுகின்ற அவனது மனவோட்டம், மற்றும் கணவன் – மனைவி ஆகியோர் நடத்தும் இல்லற மாண்பு போன்றவற்றினை வெளிப்படுத்தும் போக்கில் அமைந்துள்ளன.

முல்லைப்பாடல்களில் கூடிப்பிரிந்த காதல் நெஞ்சங்கள் மீண்டும் கூடத் துடிக்கும் ஏக்கம், மற்றும் காதல் வயப்பட்டுத் தனித்திருக்கும் காதலரின் தனிமைத்துயர் போன்றவை முதன்மை நோக்கில் அமைந்துள்ளன. மேலும் வினைமுற்றித் திரும்பும் தலைவன் வரவெண்ணிக் கற்பொடு ஆற்றியிருக்கும் தலைவியின் பொறப்பும், தன்னைப்பிரிந்து தனித்திருக்கும் தலைவியின் துயரநிலை குறித்து வுருந்தும் தலைவனின் மனவோட்டமும் சிறப்பிடம் பெறுகின்றன.

தலைவன் வரவெண்ணிக் காத்திருக்கும் தலைவி கார்கால வரவு, முல்லை மலர்தல், கோவலர்தம் குழலோசை, மழை பொழிதல் முதலான மாலைக்கால நிகழ்வுகள் கண்டு, தலைவன் வாராமையால் துயருறுதல், நல்லிரவில் ஒலிக்கும் காளையின் ஒற்றை மணிஒலி, வாடைக்காற்றுத் தொடர்ந்து வீசுதல் போன்றவற்றால் தனிமைத்துயர் மிக்கு பிரிவாற்றாமல் வருந்துதல், முதுமகளிர் விரிச்சி (நற்சொல்) கேட்டுவந்து ஆற்றுவித்தல், பாணன் தூது சென்று தன் நிலையினைத் தலைவனிடம் கூற, தலைவி மன அமைதி பெறுதல் போன்றவை ஆற்றியிருக்கும் தலைவியின் நிலை குறித்து முல்லைப்பாடல்கள் தரும் விளக்கமாகும்.

வினைமேற்சென்ற தலைவன் பாசறையில், தனித்திருக்கும் தலைவியின் நிலை குறித்து வருந்துதல், கார் காலம், மாலைக்கால நிகழ்வுகள் போன்றவை தன்னைப்பிரிந்த தலைவியின் தனிமைத்துயரை மிகுவித்து அவளை வாட்டுமே என்று கலங்குதல், தான் மேற்கொண்ட கடமை இன்னும் முடியாமையும், குறித்த காலத்தில் தலைவியைச் சேர இயலாமையும் ஆகிய இரு நிலைகளுக்கு இடைப்பட்ட தலைவனின் இக்கட்டான நிலை போல்வன தலைவி குறித்த, தலைவனின் மனவோட்டங்களாக முல்லைப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.

தலைவன் தான் மேற்கொண்ட வினை முடிந்தவுடன் காதலியுடன் வீட்டிலிருந்து வாழும் இன்ப வாழ்வினை விரும்புதல், அதனால் விரைந்து தன் இல்லம் சேர்தல், இல்லம் வந்த தலைவனைத் தலைவி வரவேற்று மகிழ்தல், தலைவன் தன் காதலியோடும், புதல்வனோடும் அன்புமொழி பேசி இன்புறுதல் முதலான கணவன் – மனைவி ஆகியோரின் இல்லறச்சிறப்பினையும் முல்லைப் பாடல்கள் புலப்படுத்துகின்றன.

### 3. சிலம்பில் முல்லை

சிலம்பில் ஆற்றியிருத்தல், ஆற்றுவித்தல், தலைவன் வரவும் தலைவி மகிழ்வும், இல்லற இன்பம் முதலான முல்லைக்கூறுகள் இடம்பெற்றுள்ளன.

- **இருத்தல் – சிலம்பில் இருத்தல் குறித்த நிகழ்வுகளாக புறத்தொழுக்கம் மேற்கொண்ட கோவலனைப் பிரிந்த கண்ணகி, ஆற்றாமை மிக்கு வருந்தி, தவக்கோலம் பூண்டு, கோவலன் திரும்பி வருமளவும் அவன் வரவெண்ணி ஆற்றியிருத்தல். ஊழ்வலியால் கோவலனைப் பிரிந்த மாதவி பிரிவாற்றாமல் யாழ் இசைத்தல், மடல் வரைதல், தோழி வசந்தமாலையைத் தூதுவிடல் முதலான முயற்சிகளில் தோல்வியுற்று, கண் துயிலாது, கோவலன் வரவு பார்த்து ஆற்றியிருத்தல். புகார் நகரில் காதலரைப் பிரிந்த பிறமகளிர், தத்தம் காதற்கொழுநரைக் கூட இயலாமைக்கு வருந்தி, துன்பக்கண்ணீர் விட்டு ஆற்றியிருத்தல் போன்றவை அமைந்துள்ளன.**

- ஆற்றுவித்தல் – கோவலனைப் பிரிந்த கண்ணகியின் பிரிவுத்துயர் கண்ட தோழி தேவந்தி, கண்ணகி கோவலனை மீண்டும் பெற்று இன்புறுதற் பொருட்டு, கணவனைப் பிரிந்தோர் மீண்டும் கணவனைப் பெற மேற்கொள்ளும் தம் கால வழக்கான புண்ணிய துறைகள் மூழ்குதல், காமவேளை வழிபடுதல் முதலானவற்றை எடுத்துக் கூறி கண்ணகியை ஆற்றுவித்தாள்.
- தலைவன் வரவு – கோவலன் மாதவியின் அழகில் மயங்கி, அவள்பால் இன்பம் துய்த்தற்பொருட்டு புறத்தொழுக்கம் மேற்கொண்டு, தன் செல்வமனைத்தையும் அவளிடம் இழந்து, வறுமையுற்று, மாதவியின்மேல் ஐயம் கொண்டு, அவளைப் பிரிந்து, கண்ணகியை நாடி வந்தான். அப்பொழுது கோவலன் வரவினால் உள்ளம் மகிழ்ந்த கண்ணகி அவனை அன்புடன் முகமலர்ந்து வரவேற்றாள்.
- இல்லற இன்பம் – மதுரை ஆயர்பாடியில் கோவலன், கண்ணகி ஆகியோரின் ஒரு நாள் இல்லற இன்பம் கண்ணகியின் அன்பு மற்றும் பெருமையினைக் கோவலன் உணரவும், கோவலன் செய்த தவறினைக் கண்ணகி சுட்டிக் காட்டவும், மற்றும் கோவலன், கண்ணகி இருவரும் ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொள்ளவும் வழி வகுப்பதாய் அமைந்துள்ளது.

## 3.1 இருத்தல்

முல்லைத்திணையின் உரிப்பொருள் ஆற்றியிருத்தல். இது தலைவியுடன் பெரிதும் தொடர்புடையது. தலைவன் பிரிதல், தலைவியின் துயர்கண்டு தோழியும், பாணனும் வருந்துதல் ஆகிய சூழல்களால் இது தோற்றுவிக்கப்படுகின்றது. ஆற்றியிருத்தல் குறித்து,

- "தலைவன் வருந்துணையும் ஆற்றியிருத்தல்"[6] என்று இளம்பூரணரும்,
- "தலைவி பிரிவுணர்த்தியவழி பிரியார் என்று இருத்தலும், பிரிந்துழிக் குறித்த பருவம் அன்றெனத்தானே கூறுதலும், பருவம் வருந்துணையும் ஆற்றியிருந்தமை பின்னர் கூறுவனவும் போல்வன இருத்தல்"[7] என்று நச்சினார்க்கினியரும்,

- **"போர் காரணமாகவும், பொருள் காரணமாகவும் பிரிந்த தலைவன் கார் காலத்திற்குள் திரும்பி வருவான் என்று தலைவி நம்பிக்கையுடன் ஆற்றியிருத்தலையே இருத்தல்"**[8] என்று மு. வரதராசனாரும் குறிப்பிடுகின்றனர்.

சிலம்பில் புறத்தொழுக்கம் மேற்கொண்ட கோவலனைப் பிரிந்த கண்ணகியும், ஊழ்வினையால் கோவலனைப் பிரிந்த மாதவியும், மற்றும் புகார் நகரில் காதலரைப் பிரிந்த பிறமகளிரும் முறையே தத்தம் காதற்கொழுநர் வரும்வரை அவரது வரவெண்ணி ஆற்றியிருந்தனர்.

கோவலன் காமக்கிழத்தி மாதவியின்பால் புறத்தொழுக்கம் மேற்கொண்ட பொழுது, அவனைப் பிரிந்த கண்ணகி கடுந்துயர் உற்று, புறத்தே தன்னைப் புனைந்து கொள்ளாமல், பொலிவிழந்து, தவக்கோலத்துடன் ஆற்றியிருந்தாள். அகத்தே வருத்தமும், புறத்தே வாட்டமும் கொண்ட கண்ணகி தன் கூந்தலுக்கு நெய்யிட்டு வாராமல், நெற்றியில் திலகமிடாமல், கண்களுக்கு மை எழுதாமல், மங்கல அணி தவிர பிற அணிகள் எதுவும் அணியாமல், கோவலன் வரவினை எதிர்நோக்கி ஆற்றியிருந்தாள். கண்ணகி ஆற்றியிருந்த நிலையினை இளங்கோவடிகள்,

**"அஞ்செஞ் சீறடி யணிசிலம் பொழிய<br>
மென்துகில் அல்குல் மேகலை நீங்கக்<br>
கொங்கை முன்றிற் குங்குமமெ ழுதாள்<br>
மங்கல வணியிற் பிறிதணி மகிழாள்<br>
கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்<br>
திங்கள் வாண்முகம் சிறுவியர் பிரியச்<br>
செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்பப்<br>
பவள வாணுதல் திலகம் இழப்பத்<br>
தவள வாணகை கோவலன் இழப்ப<br>
மையிருங் கூந்தல் நெய்யணி மறப்பக்<br>
கையறு நெஞ்சத்துக் கண்ணகி"**[9]

**என்று குறிப்பிடுகின்றார்.**

மாதவி கடற்கரைச் சோலையில் தனக்கில்லாத புதுக்காதலன் இருப்பதாக கானல்வரி பாடிய பொழுது, அவள்மேல் ஐயுற்ற கோவலன், அவளை மாயப்பொய் பலகூட்டும் மாயத்தாள், எனக் கணித்து நீங்கினான். காதலன் நீங்கத் தனியே இல்லம் சென்ற மாதவி, பிரிவுத்துயரால் பசலை நோயுற்று வருந்தி, மன ஆறுதல் பெற வேண்டி, யாழ் மீட்ட முயன்று தோல்வியுற்றாள். அத்துடன் மேலும் ஆற்றாமை மிகவே, கோவலனைப் பெறும் பொருட்டு அவனுக்குத் திருமுகம் எழுதி, அதனைத் தோழி வசந்தமாலையினிடம் கொடுத்து, அவளைத் தூதாக்கி, கோவலனை மீண்டும் பெறும் முயற்சியிலும் தோல்வி கண்டாள். ஆயினும் நம்பிக்கை இழக்காத மாதவி, கோவலன் மாலையில் தன் இல்லம் வாராவிட்டாலும் காலையில் அவசியம் வருவான் என்ற நம்பிக்கையில் கண் துயிலாமலும், மலர் மஞ்சத்தில் பொருந்தாமலும் கையறு நெஞ்சத்தோடு ஆற்றியிருந்தாள். இவ்வாறாக கோவலனைப் பிரிந்த மாதவி, அவன் வரவெண்ணி ஆற்றியிருந்த நிலை குறித்து இளங்கோவடிகள்,

**"அணித்தோட்டுத் திருமுகத் தாயிழை எழுதிய**
**மணித்தோட்டுத் திருமுகம் மறுத்ததற் கிரங்கி**
**வாடிய உள்ளத்து வசந்த மாலை**
**தோடலர் கோதைக்குத் துனைந்துசென் றுரைப்ப**
**மாலை வாரா ராயினும் மாணிழை**
**காலைகாண் குவமெனக் கையறு நெஞ்சமொடு**
**பூமலர் அமளிமிசைப் பொருந்தாது வதிந்தனள்**
**மாமலர் நெடுங்கண் மாதவி"** [10]

என்று குறிப்பிடுகின்றார்.

புகார் நகரில் தத்தம் காதலரைப் பிரிந்து, தனித்து வாழ நேர்ந்த பிறமகளிர், பிரிவாற்றாமல் பெரிதும் வருந்தி, மலர்ப்பாயலில் பள்ளி கொள்ளாமல், தத்தம் காதற்கொழுநருடன் கூடிக்கலந்து இன்பந்துய்க்க இயலாத நிலைக்குப் பெரிதும் ஏங்கி, துன்பக்கண்ணீர் வடித்தனர். அவர்தம் பிரிவாற்றாத அவல நிலையினை,

**"காதலர்ப் பிரிந்த மாதர் நோதக**
**ஊதுலைக் குருகின் உயிர்த்தன ரொடுங்கி"** [11]

என்று இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார்.

இவ்வாறாக, சிலம்பில் கோவலனைப் பிரிந்த கண்ணகி, மாதவி, மற்றும் தத்தம் காதலரைப் பிரிந்த பிறமகளிர் ஆகியோர் பிரிவாற்றாமையால் வருந்தி, காதலரின் வரவெண்ணி அவர் வருந்துணையும் ஆற்றியிருந்தனர்.

வினைமேற்சென்ற தலைவனைப் பிரிந்து, அவனது பிரிவாற்றாமல் வருந்தி, ஆற்றியிருக்கும் சங்கத் தலைவியர்தம் நிலையும், சிலம்பில் கோவலனைப் பிரிந்து, பிரிவாற்றியிருக்கும் கண்ணகி மற்றும் மாதவியின் நிலையும் ஒப்புநோக்கத்தக்கது. இவ்வாறு ஒப்புநோக்குதல் கண்ணகி மற்றும் மாதவி ஆகியோர் பிரிவாற்றியிருந்த சிறப்பினை உணர வழி வகுக்கும்.

சங்கத் தலைவி வினைவயிற் பிரிந்த தலைவன், தான் வருவதாகக் குறித்துச் சென்ற கார்காலத்தில் அவன் வாராமையினால் ஆற்றாமை மிக்கு, பெரிதும் வருந்தும் நிலையில் காணப்படுகின்றாள். மேலும் அவளது தனிமைத்துயரினை மிகுவிக்கும் காரணிகளாக கார்காலம், மாலைப்பொழுது, முல்லை மலர்தல், மழை பெய்தல், கோவலர்தம் குழலோசை, தொடர்ந்து வீசும் வாடைக்காற்று, நள்ளிரவில் ஒலிக்கும் ஒற்றை மணியொலி போன்றவை அமைந்துள்ளன. இத்தகு சூழலில், சங்கத் தலைவி தன்னைப் பிரிந்த தலைவனின் வரவு நோக்கி, ஆற்றியிருப்பதாக முல்லைப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.

சிலம்பில் கோவலனைப் பிரிந்த கண்ணகி, பிரிவாற்றாமை யினால் மனம் வருந்தி, தன்னைப் புனைந்து கொள்ளாமல், தவக்கோலம் பூண்டு, கோவலன் வருந்துணையும், அவன் வரவு நோக்கி ஆண்டு பல ஆற்றியிருந்தாள். கண்ணகியின் இந்நிலை சங்கத் தலைவியின் நிலையிலிருந்து முற்றிலும் மாறுபட்ட ஒன்றாகும். வினைமேற்சென்ற தலைவன் வருவதாகச் சுட்டிச்சென்ற கார்ப்பருவம் வரை ஆற்றியிருந்து, அப்பருவம் வந்தவுடன் அவன் வாராமையால் அவன் வரவினை எதிர்பார்த்து ஏங்குதல், தனிமைத்துயர் மிகுதல் போன்ற நிலையில் சங்கத் தலைவி ஆற்றியிருக்கின்றாள். ஆனால் சிலம்பில் வினையின் பொருட்டு பிரிவு மேற்கொள்ளாமல், மாதவியின்பால் புறத்தொழுக்கம் மேற்கொண்ட கோவலனின் வரவுநோக்கி, கண்ணகி ஆற்றியிருக்கின்றாள். காமக்கிழத்தி மாதவியின்பால் இன்பம் நுகர்தற்பொருட்டு, பரத்தையிற்

பிரிந்த கோவலன், குறித்த காலத்தில் திரும்பும் நிலையில் இல்லை. இத்தகு சூழலில், கோவலனை மீண்டும் பெறுவதற்காக எவ்வித முயற்சியும் மேற்கொள்ளாமல், அவன் வருந்துணையும், அவனது வரவு நோக்கி, ஆண்டு பல கண்ணகி ஆற்றியிருத்தல், மானிடப் பெண்ணுக்கேயுரிய இயல்பு நிலையிலிருந்து மாறுபட்டு, தெய்வநிலையில் கண்ணகியின் மேன்மைச் சிறப்பினைப் புலப்படுத்தும் போக்கில் அமைந்துள்ளது.

கண்ணகி, கோவலன் பிரிவினால் பிரிவாற்றாமல் வருந்தி, தானுறும் துயரினைக் கோவலனின் பெற்றோர்கள் அறியக் கூடாதென்பதில் பெரிதும் கவனத்துடன் இருந்து வந்தாள். அதனாற்றான் கோவலனின் பெற்றோர்முன் தன் வருத்தம் தெரியாவண்ணம் பொய்யான முறுவல் பூத்து நிற்பதை வழக்கமாகக் கொண்டிருந்தாள். கண்ணகி இவ்வாறு கோவலனின் பெற்றோர்களிடம் நடந்து கொண்ட விதம், ஆற்றியிருக்கும் சங்கத் தலைவியின் நிலையுடன் ஒத்து காணப்படுகின்றது. ஆற்றாது வருந்தும் சங்கத்தலைவி தலைவனுடைய வருகையைக் குறித்துச் சொல்லுமாறு கிளியோடு பேசி கேட்கும்பொழுது, தலைவனுடைய வருகையைப் பற்றித்தான் கலங்குவதைப் பிறர் அறியாதபடி மெல்லப் பேசுகின்றாள்; அஞ்சிப் பேசுகின்றாள். தலைவன் பிரிந்தது நாட்டுக்கடமை பற்றியே ஆதலால், தான் கலங்குவது அறமாகாது என்றும், ஆற்றியிருப்பதே கடமை என்றும் எண்ணும் உயர்ந்த நோக்கம் கொண்டே சங்கத் தலைவி அவ்வாறு நடந்து கொள்கிறாள். இதனை,

> **"செந்தார்ப் பைங்கிளி முன்கை ஏந்தி**
> **இன்றுவரல் உரைமோ சென்றிசினோர் திறத்து என**
> **இல்லவர் அறிதல் அஞ்சி மெல்லென**
> **மழலை இன்சொல் பயிற்றும் நாணுடை அரிவை"**[12]

என்று அகநானூற்றுப் பாடல் ஒன்று தெரிவிக்கின்றது. இதில் சங்கத் தலைவனும், கோவலனும் மேற்கொண்ட பிரிவில் வேறுபாடு காணப்பட்ட போதிலும், அவரவருடைய வரவெண்ணி ஆற்றியிருக்கும் தலைவி மற்றும் கண்ணகியின் மனநிலை ஒன்றாக ஒத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

தலைவன் பிரிவெண்ணி ஆற்றாது வருந்தும் சங்கத் தலைவியின் வருத்தத்திலும், கோவலன் பிரிவினால் வருந்தும் கண்ணகியின் வருத்தத்திலும் பெரிதும் வேறுபாடு காணப்படுகின்றது. சங்கத் தலைவி தான் தலைவனுடன் கூடி இன்பந்துய்க்க இயலாமை குறித்து ஏங்கும் ஏக்கமே அவளது வருத்தத்தில் பெரிதும் காணப்படுகின்றது. ஆனால் கண்ணகி, கோவலனுடன் கூடித்துய்க்கும் உடலின்பத்திற்காக ஏங்காமல், தன் நாயகனோடு நின்று இல்வாழ்வோர்க்குரிய கடனாற்ற இயலவில்லையே என்று ஏங்கி, வருந்தும் வருத்தமே அவளிடம் காணப்படுகின்றது. இதனை,

> "அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்
> துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
> விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை"[13]

என்று ஆயர்பாடியில் கோவலனிடம் கண்ணகி கூறுவதிலிருந்து உணரலாம்.

கோவலனைப் பிரிந்த மாதவி, ஆற்றியிருக்கும் போக்கு சங்க இலக்கிய காமக்கிழத்தியருடன் ஒப்பு நோக்கத்தக்கது. தலைவனைப் பிரிந்த காமக்கிழத்தியர் அவனது பிரிவினால் வருந்தி, ஆற்றியிருத்தல் அகமரபன்று. மேலும் பிரிந்த தலைவனை, மீண்டும் பெற முயலுதலும் இல்லை. ஆனால் சிலம்பில் கோவலனைப் பிரிந்த மாதவி, அவனது பிரிவாற்றாமல் மலர்ப்பாயலில் கண்துயிலாது வருந்துதல், கோவலனை மீண்டும் பெற அவனுக்கு மடல் வரைதல், தோழியைத் தூதுவிடல் போன்றவை சங்க இலக்கிய காமக்கிழத்தியர் மேற்கொள்ளாத மற்றும் அவர்களிடம் காணப்பெறாத புதுமையானதொரு மரபு மாற்றமாகும்.

சிலம்பில் கோவலனைப் பிரிந்த கண்ணகி மற்றும் மாதவி ஆகிய இருவரும் ஆற்றியிருக்கும் நிலையிலும்கூட வேறுபட்டு நிற்கும் போக்கினைக் காணமுடிகின்றது. கண்ணகி கோவலனைப் பிரிந்து, ஆண்டு பல ஆகியும் அவனை மீண்டும் பெற, எவ்வித முயற்சியும் மேற்கொள்ளவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அத்துடன் பிரிந்த கணவனை மீண்டும் பெறுவதற்கு தேவந்தி கூறிய உலக வழக்கு நெறியான புண்ணிய துறை மூழ்குதல், காமவேளை வழிபடல் முதலானவற்றையும் பீடன்று என விலக்கியதுடன், கோவலன்

வருமளவும், அவன் வரவு நோக்கி ஆற்றியிருந்த பெருஞ்சிறப்பிற் குரியவள் ஆவாள். ஆனால் மாதவி, கோவலனைப் பிரிந்து ஒரு நாள் கூட அவனது பிரிவினைத் தாங்கமாட்டாமல், அவனை மீண்டும் பெற, மேற்கொண்ட முயற்சிகள் அவள் கோவலன்பால் கொண்ட உணர்வுப்பூர்வமான அன்பின் மிகுதியினைக் காட்டுவதாய் அமைந்துள்ளது.

இவ்வாறாக சிலம்பில் கோவலனைப் பிரிந்த கண்ணகி, மாதவி ஆகியோர் ஆற்றியிருக்கும் போக்கு, சங்கத் தலைவி மற்றும் காமக்கிழத்தியரின் போக்கிலிருந்து வேறுபட்டு, கண்ணகி, மாதவியின் உயர்வினைச் சுட்டும் போக்கில் அமைந்துள்ளது.

## 3.2 ஆற்றுவித்தல்

தலைவி, தலைவன் பிரிவை ஆற்றாது வருந்துகையில் தோழி, பாணன், தலைவன் ஆகியோர் பலமொழிகளைக் கூறித் தலைவியை ஆற்றுவிப்பர். தலைவன் குறித்துச்சென்ற கார்ப்பருவம் வந்தும் தலைவன் வாராமை, தலைவன் போர்வயிற் பிரிவானே என்று தலைவி அஞ்சுதல் போன்ற சூழல்கள் ஆற்றுவித்தல் அடிக்கருத்தைத் தோற்றுவிக்கின்றன. 'ஆற்றுவித்தல்' எனும் அடிக்கருத்து கற்பெனும் திண்மையைக் கட்புலனாக்கும் செவ்விய சூழலைச் சுட்டும்; தலைவன் தலைவி ஆகியோரின் மனவலைவரிசை ஒன்றாக இழைத்தலைப் புலனாக்கும்.[14]

தலைவன் பிரிந்தபின் ஆற்றவியலாத தலைவியைத் தோழி ஆற்றுவிக்கும் பின்புலங்களாக,

- **களவில் வரைவிடை வைத்துப் பிரிந்த சூழல்,**
- **கற்பில் பிரிவிடை ஆற்றாத சூழல்,**
- **பருவங்கண்டு தலைவி ஆற்றாத சூழல்** [15]

போன்றவைகளை இலக்கியங்கள் சுட்டுகின்றன.

தலைவியை ஆற்றுவிக்க தோழி கையாளும் அணுகுமுறைகளாக,

- **தலைவன் குறித்துச்சென்ற பருவ வரவைக்காட்டித் தேற்றுதல்,**
- **தலைவி பருவங்கண்டு அழிந்தபோது இது பருவம் அன்றென மறுத்தல்,**
- **நன்னிமித்தங்களைச் சுட்டி ஆறுதல் அளித்தல்,**

- **சுரத்தில் இணைந்து நிற்கும் இயற்கை உயிர்களைத் தலைவன் காணும் வாய்ப்பினை எடுத்துரைத்துத் தலைவன் வரவிற்கான காரணத்தைச் சுட்டல்,**

- **தலைவனின் நற்பண்புகளை எடுத்துரைத்து வருவார் என நம்பிக்கையூட்டல்**

போன்றவைகளைச் சுட்டலாம்.

சிலம்பில், கற்பில் மாதவியின்பால் புறத்தொழுக்கம் (பரத்தமை) மேற்கொண்ட கோவலனைப் பிரிந்த கண்ணகி, ஆற்றாது வருந்தும் சூழலில் தோழி தேவந்தி, கணவனைப் பிரிந்தோர் மீண்டும் கணவனைப் பெற மேற்கொள்ளும் தம் கால வழக்கினை எடுத்துரைத்து ஆற்றுவிக்கும் போக்கு காணப்படுகின்றது.

கோவலன் பிரிவினால் ஆற்றாது வருந்தும் கண்ணகியைத் தோழி தேவந்தி, நீ பிரிந்த நின் கணவனோடு கூடி இன்ப வாழ்வினைப் பெறுவாயாக என்று வாழ்த்தி அவளைத் தேற்றுகின்றாள். அத்துடன் கண்ணகி, கோவலனை மீண்டும் பெற, தான் அறிந்த தம்கால உலக வழக்கொன்றினையும் எடுத்துக் கூறுகின்றாள். கணவனைப் பிரிந்தோர் மீண்டும் கணவனைப் பெற சோமகுண்டம், சூரியகுண்டம் ஆகிய புண்ணிய துறைகளில் மூழ்கி, அங்குள்ள காமவேளை வழிபடுவர். அதுபோலவே நாமும் ஒருநாள் புண்ணிய துறைகள் ஆடி, காமவேளை வழிபட்டு, பிரிந்த நின் கணவனைப் பெறுவோம் என்று கூறி, கண்ணகியை அழைக்கின்றாள். இதனை,

> **"கடலொடு காவிரி சென்றலைக்கு முன்றில்**
> **மடலவிழ் நெய்தலங் கானற் றடமுள**
> **சோமகுண்டஞ் சூரிய குண்டந் துறைமூழ்கிக்**
> **காமவேள் கோட்டந் தொழுதார் கணவரொடு**
> **தாமின் புறுவ ருலகத்துத் தையலார்**
> **போகஞ்செய் பூமியினும் போய்ப்பிறப்பர் யாமொருநாள்**
> **ஆடுது மென்ற அணியிழை"** [16]

என்று இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார்.

தேவந்தி கண்ணகியைத் தேற்றி ஆற்றுவிக்கத் தான் அறிந்த உலக வழக்கினை எடுத்துக்கூறுதல், சங்கத் தலைவியை ஆற்றுவிக்க முதுமகளிர் மேற்கொள்ளும் முயற்சியுடன் ஒப்புநோக்கத்தக்கது.

தலைவன் பிரிவால் பிரிவாற்றாது வருந்தும் தலைவியைத் தோழி பலவாறு தேற்றியும் தேறாத நிலையில், வயதான முதுமகளிர் சிலர் அக்கால வழக்கொன்றினை (விரிச்சி கேட்டல்) மேற்கொண்டு தலைவியைத் தேற்றுகின்றனர்.

முதுமகளிர் சிலர் ஊர் நடுவே சென்று ஓரிடத்தில் நெல்லையும், முல்லை மலர்களையும் தூவிக் கைதொழுது, நற்சொல் எதிர்பார்த்து நின்றனர். அப்பொழுது அங்கே ஆய்மகள் ஒருத்தி சிறு கயிற்றால் கட்டப்பட்ட இளங்கன்றின் பசித்துன்பத்தையும், அது தன் தாயை நினைந்து வருந்துவதையும் கண்டு, அதன் முதுகைத் தடவி, "ஆயர்கள் பின்னே இருந்து கையில் கோல் கொண்டு செலுத்த, உன் தாய்மார் இப்போதே வீட்டுக்கு வந்து சேர்வார்" என்று சொல்வதைக் கேட்டனர். மிக நல்ல வாய்ச்சொல் கேட்டோம் என்று மகிழ்ந்த முதுமகளிர் உடனே திரும்பி வந்து தலைவியிடம் அதைச் சொல்லி, "பகைவரை வென்று திறை கொண்டு தலைவர் திரும்புவது உறுதி; ஆதலால் நீ இவ்வாறு துயரப்படாதே" என்று தேற்றுகின்றனர். இதனை நப்பூதனார்,

> **"பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்பச்**
> **சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்**
> **உறுதுயர் அலமரல் நோக்கி ஆய்மகள்**
> **நடுங்குசுவல் அசைத்த கையள் கைய**
> **கொடுங்கோல் கோவலர் பின்நின்று உய்த்தர**
> **இன்னே வருகுவர் தாயர் என்போள்**
> **நன்னர் நன்மொழி கேட்டனம்"**[17]

என்று குறிப்பிடுகின்றார்.

சங்க காலத்தில் வினைமேற்சென்ற தலைவனைப் பிரிந்து, பிரிவாற்றாது வருந்தும் தலைவியை, முதுமகளிர் நற்சொல் கேட்டு வந்து தேற்றுவதுபோல் மாதவியின்பால் புறத்தொழுக்கம் மேற்கொண்ட கோவலனைப் பிரிந்து, பிரிவாற்றாது வருந்திய கண்ணகியைத் தோழி தேவந்தி, தம்கால வழக்கான புண்ணிய துறைகள் மூழ்குதல், காமவேளை வழிபடல் முதலானவற்றைக் கூறி ஆற்றுவிக்கும் போக்கு அமைந்துள்ளது.

## 3.3 தலைவன் வரவு

முல்லையொழுக்கத்தில் வினைமேற்சென்ற தலைவனின் வரவும், அவன் வரவினால் ஆற்றியிருந்த தலைவியின் மகிழ்வும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இது காதல் வயப்பட்டுத் தனித்திருக்கும் தலைவன் – தலைவி ஆகியோரின் தனிமைத் துயரினையும், ஏற்கனவே கூடிப்பிரிந்த தலைவன், தலைவி ஆகிய இரு காதல் நெஞ்சங்கள் மீண்டும் கூடத்துடிக்கும் ஏக்கத்தினையும், வெளிப்படுத்தும் ஒரு அருமையான பகுதியாகும்.

தலைவியைப் பிரிந்து வினைமேற்சென்ற தலைவன், பாசறையில் தலைவியின் நிலைகுறித்து வருந்துதல், அத்துடன் தான் மேற்கொண்ட கடமையைப் பெரிதென எண்ணுதல், தலைவியின் ஆற்றாமையைப் பாணன் கூறக் கேட்டு மீளும் வேட்கை, வரும் வழியில் ஆணும் பெண்ணுமாய் பறவை, விலங்குகள் இணைந்திருக்கும் காட்சிகளைக் காணுதல், அதனால் தலைவியின்பால் அன்பு மீதூர்தல், வினை முடித்துத் தேர்ப்பாகன் உதவியால் விரைந்து இல்லம் செல்லுதல், இல்லத்தில் தன்னை வரவேற்று மகிழ்ந்த தலைவியினிடம் அன்பு மொழி பேசுதல் போன்றவை வினைமேற்சென்று மீண்ட தலைவனின் மனநிலை குறித்து முல்லைப்பாடல்கள் குறிப்பிடும் விளக்கமாகும்.

வினைவயிற்பிரிந்த தலைவன் பாசறையில் போர்க்கடமைகளில் மூழ்கித் தலைவியை மறப்பதில்லை. மாறாக கார்காலம் கண்டு, தான் தலைவியிடம் திரும்புவதாகச் சொன்ன சொல் நினைந்து, அவ்வாறு செய்ய இயலாத தன்நிலை குறித்து வருந்துகின்றான். அத்துடன் தலைவியைத் தனியே விட்டுவிட்டு வந்ததற்காகத் தன் நெஞ்சை நோகின்றான். கார்கால மாலைப்பொழுதில், தன் வரவு பார்த்துக் காத்திருக்கும் தலைவி, தனிமைத் துயரினால் பெரிதும் துன்புறுவாளே என்று அவள்நிலை குறித்து உருகுகின்றான். மேலும் கார்காலம், முல்லை மலர்தல், தொடர்ந்து மழை பொழிதல் முதலான புறச்சூழல்கள் தனித்திருக்கும் தலைவியைத் தனக்கு நினைவூட்ட, உறக்கம் கொள்ளாமல் பெரிதும் வருந்துகின்றான். இவ்வாறு தலைவியின்பால் தான் கொண்ட பாச உணர்விற்கும், தான் மேற்கொண்ட வினையை முடிக்கும் கடமையுணர்ச்சிக்கும் இடைப்பட்ட தலைவன் இருதலைக் கொள்ளி எறும்பு போல் பரிதாப நிலையில் காணப்படுகின்றான்.

இந்நிலையில், பாணன் பாசறை சென்று தலைவியின் பிரிவாற்றாத் துயரினைத் தலைவனுக்கு எடுத்துக் கூற, அது கேட்டத் தலைவன், தலைவியின் ஆற்றாத நிலைக்குப் பெரிதும் இரங்கி, போர் முடிந்தவுடன் விரைந்து சென்று காதலியைக் காண விழைகின்றான். போரில் வெற்றி பெற்று, இல்லம் திரும்பும் தலைவன், வரும் வழியில் அன்புறு காட்சிகளைக்கண்டு, அதனால் தலைவியின்பால் அன்பு மீதூரப்பட்டு, அவளை விரைந்து காணும் ஆவலில் இல்லம் செல்கின்றான். தலைவனின் வருகையை அறிந்த தலைவி,

> **"பலநாளாகப் புனைந்து கொள்ளாத தன் கூந்தலை மாசறத் தூய நீராட்டிச் சில பூக்கள் சூடி வந்து, தலைவனைத் தழுவி வரவேற்று மகிழ்கின்றாள்".[18]**

தன்னை வரவேற்று மகிழ்ந்து துயர் நீங்கி இருக்கும் தலைவியை நோக்கித் தலைவன்,

> **"வந்த வழியெல்லாம் உன்னைப் போன்ற மயில்கள் ஆட, உன் அழகிய நெற்றியின் மணம் போல் கமழும் முல்லை மலர, மான்கள் உன்னைப் போன்றே மருண்டு பார்க்க, அவற்றைக் கண்ட நான் உன்னையே நினைத்தபடி கார் காலத்தை விடவும் மிக விரைந்து வந்தேன்"[19]**

என்று அன்புமொழி கூறி மகிழ்கின்றான்.

இது வினைமேற்சென்ற தலைவனின் வரவும், தலைவன் வரவால், அதுவரை ஆற்றியிருந்த தலைவியின் மகிழ்வும், குறித்து முல்லைப்பாடல்கள் தரும் செய்திகளாகும்.

சிலம்பில் மாதவியின்பால் புறத்தொழுக்கம் மேற்கொண்ட கோவலன், தன் செல்வமனைத்தையும் மாதவியினிடம் இழந்து, வறுமையுற்று, தன் நிலை குறித்து வருந்தி, கண்ணகியை அடையும் நிலை காணப்படுகின்றது.

கோவலன், கலையரசி மாதவியின் பேரழகில் மயங்கி, அவள்பால் விடுதலறியா விருப்பங்கொண்டு, அவளுடன் இன்பந்துய்த்து வந்தான். அப்பொழுது, மனைவி கண்ணகியையும், மற்றும் தன் சுற்றத்தினரையும் மறந்த நிலையிலேயே காணப்படுகின்றான்.

நாளடைவில் கோவலன் தன் செல்வமனைத்தையும் மாதவியின்பால் இழந்து, நல்குரவு அடைந்து, தன் நிலையை எண்ணி வருத்தம் கொள்ளலானான். இந்நிலையில், மாதவி இல்லாத புதுக்காதலன் தனக்கிருப்பதாக கானல்வரி பாட, அவள்மேல் ஐயங்கொண்டு, அவளை வெறுத்து, மாயப்பொய் பலகூட்டும் மாயத்தாள் என்று கணித்து, அவளை விட்டு நீங்கி, கண்ணகியை அடைந்தான்.

கோவலன் தன் வறுமை நிலைக்கு நாணி, தன் இல்லம் நுழைய தயங்கியவனாக, குற்ற உணர்வோடு பள்ளியறைச் சென்று, கண்ணகியின் வாடிய மேனி வாட்டங்கண்டு, அவள் நிலைக்கு இரங்கி, வருந்தினான். மாதவியின்பால் தான் கொண்ட தீய ஒழுக்கத்தின் காரணமாக தன் செல்வமனைத்தும் தொலைந்தன என்றும், அதனால் உண்டான நல்குரவு இப்பொழுது எனக்குப் பெரிதும் நாணத்தைத் தருகின்றது என்றும் கண்ணகியினிடம் கூறி வருந்தினான். அப்பொழுது கோவலனின் கழிவிரக்க மொழிகளைக் கேட்ட கண்ணகி, அவனது துயர் போக்கக் கருதி, தன்பால் உள்ள ஓர் இணைச்சிலம்புகளை முகமலர்ச்சியுடன் தந்து உதவினாள். இதனை,

**"சலம்புணர் கொள்கைச் சலதியோ டாடிக்**
**குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைந்த**
**இலம்பாடு நாணுத் தருமெனக் கென்ன**
**நலங்கேழ் முறுவல் நகைமுகங் காட்டிச்**
**சிலம்புள கொண்மெனச் சேயிழை"[20]**

என்ற இளங்கோவடிகளின் கூற்றிலிருந்து அறியலாம்.

இங்கு, தலைவியைப் பிரிந்து வினைமேற்சென்று மீளும் சங்கத் தலைவனின் மனநிலையும், கண்ணகியைப் பிரிந்து புறத்தொழுக்கம் மேற்கொண்டு மீளும் கோவலனின் மனநிலையும் ஒப்புநோக்கத்தக்கது. வினைமேற்சென்ற தலைவன் எந்தச்சூழலிலும் தலைவியை மறந்தானில்லை. தான் மேற்கொண்ட கடமையுணர்ச்சியினூடே எப்பொழுதும் தலைவி குறித்த நினைவுகளிலேயே அவனது மனவோட்டம் காணப்படுகின்றது. ஆனால் புறத்தொழுக்கம் மேற்கொண்ட கோவலன் மாதவியின்பால் இன்பம் நுகர்ந்து வருங்கால்,

தன் மனைவி கண்ணகியின் நிலைகுறித்து நினைவு கூர்ந்ததாகத் தெரியவில்லை. தான் வறுமையுற்றதால் மாதவி தன்னைப் புறக்கணிக்கின்றாளோ என்ற எண்ணம் கோவலனுக்குத் தோன்றியபொழுதுதான், கண்ணகியை நினைந்து, அவளை நாடி வருகின்றான். மேலும் வினைவயிற்பிரிந்த தலைவன், தான் மேற்கொண்ட வினையை முடித்து, வெற்றிக்களிப்புடன் தன் வரவு பார்த்துக் காத்திருக்கும் காதலியைக்காணும் ஆர்வத்தில் விரைந்து வருதலும், புறத்தொழுக்கம் மேற்கொண்ட கோவலன், தன் செல்வமனைத்தையும் மாதவியின்பால் இழந்து, தன் வறுமைநிலைக்கு நாணி, தன் மனை புக அஞ்சிய நிலையில் கண்ணகியை நாடி வருதலும் குறிப்பிடத்தக்கது. சங்கத் தலைவனின் வரவில் மகிழ்ச்சியும், கோவலனின் வரவில் துயரமும் காணப்படுகின்றது.

வினைமுடித்து இல்லம் வந்த தலைவனை வரவேற்பதில் சங்கத் தலைவி மகிழ்வது போலவே, கண்ணகியும் தன்னை நாடி வந்த கோவலனைப் புன்முறுவலுடன் வரவேற்று, மகிழ்வது, மானிடப் பெண்களுக்கேயுரிய நிலையினைக் கடந்து, தெய்வீக நிலைசார்ந்த ஒன்றாக அமைந்துள்ளது.

## 3.4 இல்லற இன்பம்

தலைவன் தான் மேற்கொண்ட வினையை முடித்து இல்லம் திரும்பியதும், அவன் வரவால் மகிழ்வெய்திய தலைவி, தலைவனுடன் இணைந்து நடத்தும் இல்லறச் சிறப்பினை முல்லைப்பாடல்கள் சுட்டுகின்றன.

தலைவன் தன் காதலியோடும், மகனோடும் வீட்டிலிருந்து இனிது வாழும் சிறப்பினையும், தலைவி உணவு சமைத்துத் தலைவனுக்கு அன்புடன் படைத்து மகிழ்வதையும் செவிலி கண்டு வந்து நற்றாய்க்கு எடுத்துரைத்து மகிழ்கின்றாள்.

> **"மறி (குட்டி) இடையே இருக்கப்பெற்ற ஆண் மானும், பெண் மானும் போல, மகனைத் தம்மிடையே கொண்டு தலைவனும், தலைவியும் தோன்றும் காட்சி மிகவும் இனிதாக உள்ளது. அது கடல் சூழ்ந்த இவ்வுலகிலும் மேலுலகிலும் பெறுதற்கு அரியது"[21]**

என்றும்,

> "தலைவி முற்றிய தயிரைப் பிசைந்து, புளிக்குழம்பு வைத்து, உணவு சமைத்து கணவனுக்கு அன்புடன் வழங்குகின்றாள். அதைத் தலைவன் மிகவும் இனிமையாக உள்ளது என்று கூறி, உண்டு மகிழ்கின்றான். அதைக் கண்ட தலைவியின் முகத்தில், நுட்பமான மகிழ்ச்சி அரும்புகின்றது"[22]

என்றும் காதலர்கள் மேற்கொள்ளும் இல்லற மாண்பினைச் செவிலி கூறுவதன்வழி அறியலாம்.

சிலம்பில் கோவலன் – கண்ணகி ஆகியோர்தம் இல்லற இன்பம் குறித்த நிகழ்வுகளாக,

- மதுரை ஆயர்பாடியில் கோவலன், கண்ணகி ஆகியோர்தம் ஒரு நாள் இல்லற இன்பம் சிறக்க மாதரி உதவுதல்;
- கண்ணகி, ஐயையின் உதவியுடன் உணவு சமைத்து கோவலனுக்குப் படைத்து மகிழ்தல்;
- கண்ணகி உணவு படைக்க, கோவலன் உண்டு மகிழும் காட்சி நப்பின்னையும், கண்ணனும் போல மாதரிக்குத் தோன்றுதல்;
- உண்டு மகிழ்ந்த கோவலன், கண்ணகியின் பெருந்தன்மையினை எண்ணி மகிழ்தல்;
- கோவலன் தான் கண்ணகிக்கு இழைத்த கொடுமையினை நினைத்து வருந்தல்;
- கண்ணகி கோவலன் செய்த தவறினைச் சுட்டுதல்;
- கோவலன் கண்ணகியின் மேன்மையை உணர்ந்து, அவளைப் பலப்பட பாராட்டுதல்

போன்றவற்றினைச் சுட்டலாம்.

கண்ணகி மதுரையில் எவ்விதத் துன்பமுமின்றி பாதுகாப்பாக இருக்க வேண்டி, கவுந்தியடிகள் மாதரியிடம் அவளை அடைக்கலப்படுத்தினார். மாதரி யாதொரு தீங்குமில்லாத எளிமையும், அமைதியும், இனிமையும் நிறைந்த ஆயர்குலத்தில் தோன்றியவள். மேலும் மாதரியின் சிறப்பும், தூய்மையும் கருதியே கவுந்தியடிகள், அவளிடம் கண்ணகியை அடைக்கலப்படுத்தினார். இதனை,

"ஆகாத் தோம்பி ஆப்பயன் அளிக்கும்
கோவலர் வாழ்க்கையோர் கொடும்பா டில்லை
தீதிலள் முதுமகள் செவ்வியள் அளியள்
மாதரி தன்னுடன் மடந்தையை இருத்துதற்கு
ஏதம் இன்றென எண்ணினள்" [23]

என்று இளங்கோவடிகள் கூறுவதிலிருந்து அறியலாம். இத்தகுச் சிறப்பு வாய்ந்த மாதரி, கோவலன் – கண்ணகியைத் தன் விருந்தினராக ஏற்று, அவர்களிடம் மிக்க அன்பு கொண்டு, அவர்களைத் தன் மகனாகவும், மருமகளாகவும் எண்ணி மகிழ்ந்தாள். மேலும் அவர்களின் உயர்வுகருதி அவர்களைத் தனி மனைப்படுத்தியும், தன் மகள் ஐயையைக் கண்ணகிக்கு ஏவல் மகளாக்கியும் மகிழ்ந்தாள்.

மதுரை ஆயர்பாடியில் மாதரி இல்லத்தில் கோவலனும், கண்ணகியும் நடத்திய ஒருநாள் இல்லற மாண்பு அவர்களது வாழ்வில் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும். மாதரி இல்லத்தில், கண்ணகியின் இல்லறம் சிறக்கப் பெரிதும் உதவியவர்கள் முல்லைவாழ் மக்களான மாதரி, ஐயை, மற்றும் சில ஆய்ச்சியர் ஆவர். கண்ணகி ஆயர்குல மகளிர் கொடுத்த உணவுப் பொருட்களைக் கொண்டு, ஐயையின் உதவியோடு தான் பயின்றறியாத அட்டில் தொழிலைச் செய்து, கோவலனுக்கு உணவு படைத்தாள். கோவலனும் உண்டு மகிழ்ந்தான். கண்ணகி உணவு படைக்க, கோவலன் உண்டு மகிழும் காட்சியினைக் கண்டு மாதரி, ஐயை உள்ளிட்ட ஆயர்குல மகளிர் பலரும் பெருமகிழ்வெய்தினர். நம்பின்னையும், கண்ணனுமே நம் விருந்தினராக எழுந்தருளினர் போலும் என்று பெருவியப்பெய்தினர். இடைக்குல மடந்தையர் இடையே கோவலனும், கண்ணகியும் இளம் தம்பதியர் போல் காட்சி அளித்தனர். மேலும் இம்மதுரை ஆயர்பாடியில் அமுதுண்ணும் இந்நம்பியும், அவனுடைய துயர்தீர்க்கும் இந்நங்கையும் பண்டு வடமதுரை ஆயர்பாடியில் பிறந்து, நப்பின்னையை மணந்து, அவள் அன்பால் துயர் தீர்ந்த கண்ணனைப் போலவே நமக்குக் காட்சி தருகின்றனர் என அவர்தம் அழகினை மாதரியும், ஐயையும் தம்முள் கூறி மகிழ்ந்தனர். இதனை,

**"ஆயர் பாடியின் அசோதை பெற் றெடுத்த**
**பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ**
**நல்லமு துண்ணும் நம்பி யீங்குப்**
**பல்வளைத் தோளியும் பண்டுநங் குலத்துத்**
**தொழுனை யாற்றினுள் தூமணி வண்ணனை**
**விழுமந் தீர்த்த விளக்குக் கொல்லென**
**ஐயையுந் தவ்வையும் விம்மித மெய்தி"[24]**

என்று இளங்கோவடிகள் குறிப்பிடுவதிலிருந்து அறியலாம்.

கோவலன் உண்டு முடித்தவுடன் கண்ணகி அவனுக்குத் தாம்பூலம் வழங்கினாள். அப்பொழுது, கோவலன் கண்ணகியைத் தன்னருகே அழைத்துத் தழுவிய நிலையில், தான் அவளைப் பிரிந்து கெட்டலைந்ததற்கு வருந்தினான். அத்தருணத்தில், கண்ணகி கோவலனது புறநெறியால் அவனது பெற்றோர்கள் வருந்தியதையும், தான் இவ்வாழ்வோர்க்குரிய கடனாற்ற இயலாது இருந்த நிலையினையும் எடுத்துக்கூறி தன் மனக்குறையைப் புலப்படுத்தினாள். இதனை,

**"யானகத் தொளித்த நோயும் துன்பமும்**
**நொடிவது போலுமென் வாயல் முறுவற்கவர்**
**உள்ளகம் வருந்தப் போற்றா வொழுக்கம் புரிந்தீர்"[25]**

என்று இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார்.

மதுரை ஆயர்பாடியில் கோவலன், கண்ணகி ஆகியோரின் மகிழ்வான இல்லறக்காட்சி, புதுவாழ்வின் தொடக்கம் போல் மாதரிக்குத் தோன்றுகிறது. மேலும் கோவலனும், கண்ணகியும் தம் இல்லறத்தை மீண்டும் மதுரை ஆய்ச்சியர் இல்லத்தில் ஆரம்பிப்பது போலும் உள்ளது. புகாரில், மாதவி அரங்கேறிய போது மறைந்த கண்ணகியின் இன்ப வாழ்வு, மாதரி இல்லத்தில் மீண்டும் புத்தம் புதிய தரத்தினதாய் மறுமலர்ச்சி அடைவதுபோல் உள்ளது. துயரத்தீயில் தூயனான கோவலனின் முழு அன்புக்கும் உரியவளாக கண்ணகி விளங்கினாள். முன்பு புகாரில் கண்ணகியின் புற

அழகினைப் புகழ்ந்த கோவலன், இப்பொழுது அவளுடைய குணச்சிறப்பில் ஈடுபட்டு, அவளது அகஅழகினைப் பலவாறாகப் பாராட்டி மகிழ்கின்றான். இதனை,

"குடிமுதற் சுற்றமும் குற்றிளை யோரும்
அடியோர் பாங்கும் ஆயமும் நீங்கி
நாணமும் மடனும் நல்லோ ரேத்தும்
பேணிய கற்பும் பெருந்துணை யாக
என்னொடு போந்தீங் கென்றுயர் களைந்த
பொன்னே கொடியே புனைபூங் கோதாய்
நாணின் பாவாய் நீணில விளக்கே
கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வி"[26]

என்று இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார்.

மதுரை ஆயர்பாடியில் கோவலன், கண்ணகி ஆகியோரின் ஒரு நாள் இல்லறம், கண்ணகியின் அன்புள்ளத்தினைக் கோவலன் நன்கு உணரவும், கோவலன் செய்த தவற்றினைக் கண்ணகி சுட்டவும், கோவலனும் கண்ணகியும் ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொள்ளவும் வழிவகை செய்துள்ளது எனலாம்.

மதுரை ஆயர்பாடியில் மாதரி இல்லத்தில், கண்ணகியோடு கூடி இன்புறும் கோவலன் நிலை, மரீசி முனிவரது ஆசிரமத்தில், சகுந்தலையை அடைந்து இன்புறும் துஷ்யந்தன் நிலையோடு ஒத்துள்ளது. கோவலனும், துஷ்யந்தனும் துன்பமான அனுபவத்தில் பண்பட்ட கனிவோடு, கண்ணகி மற்றும் சகுந்தலையின் அகத்தில் ஒளிரும் ஆத்மீக அழகைப் புரிந்து போற்றும் காதலர்களாக உயர்வு பெறுகின்றனர்.

"ஒரு சுவர்க்கத்தை இழக்கும் காதலர்,
வேறு ஒரு சுவர்க்கத்தை அடைகின்றனர்"[27]

என்று ஜெர்மானிய கவி கதே குறிப்பிடுவது போல கோவலனும், கண்ணகியும் புகாரில் இழந்த சுவர்க்க இன்பத்தை மதுரைப் புறஞ்சேரியில், மாதரி இல்லத்தில் மீண்டும் பெற்று மகிழ்ந்தனர் எனலாம்.

## 4. நிறைவு

- ❖ சிலம்பில் இருத்தல், ஆற்றுவித்தல், தலைவன் வரவு, இல்லற இன்பம் முதலான முல்லைக்கூறுகள் இடம்பெற்றுள்ளன.

- ❖ இருத்தல் குறித்த நிகழ்வுகளாக – புறத்தொழுக்கம் மேற்கொண்ட கோவலனைப் பிரிந்த கண்ணகி தவக்கோலம் பூண்டு, கோவலன் வருந்துணையும் ஆற்றியிருத்தல்; ஊழ்வினையால் கோவலனைப் பிரிந்த மாதவி பிரிவாற்றாது யாழ் இசைத்தல், மடல் வரைதல், தோழியைத் தூதுவிடல் முதலான முயற்சிகளில் தோல்வியுற்று, கோவலன் வரவு பார்த்து, கண்துயிலாது ஆற்றியிருத்தல்; புகாரில் தத்தம் காதலரைப் பிரிந்த பிறமகளிர் பிரிவாற்றாமல் துன்பக்கண்ணீர் வடித்து ஆற்றியிருத்தல் போன்றவை அமைந்துள்ளன.

- ❖ கோவலனைப் பிரிந்த கண்ணகியைத் தோழி தேவந்தி ஆற்றுவிக்க, தம் கால வழக்கான புண்ணிய துறைகள் மூழ்குதல், காமவேளை வழிபடல் முதலானவற்றை எடுத்துக்கூறி கோவலனை மீண்டும் பெற வழி கூறுகின்றாள்.

- ❖ மாதவியின்பால் புறத்தொழுக்கம் மேற்கொண்ட கோவலன், தன் செல்வமனைத்தையும் அவள்பால் இழந்து, வறுமையுற்று, அவள்மேல் ஐயங்கொண்டு, அவளைப் பிரிந்து, கண்ணகியை வந்தடைகின்றான்.

- ❖ மதுரை ஆயர்பாடியில் கோவலன் – கண்ணகி ஆகியோரின் ஒரு நாள் இல்லற இன்பம், அவர்கள் ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொள்ள, வழி வகுத்துள்ளது எனலாம்.

## குறிப்புகள்

1. கி. ராஜா, பண்டை கிரேக்க – தமிழ்ப் பாடல்களில் முல்லைக்கூறுகள், பக். 18–30
2. மு. வரதராசன், முல்லைத்திணை, ப. 15
3. தே. ஆண்டியப்பன், கருத்தும் காட்சியும், ப. 20
4. மு. வரதராசன், முல்லைத்திணை, ப. 7
5. மேலது., ப. 9
6. இளம்பூரணர், தொல்காப்பியம் – பொருளதிகாரம், ப. 16
7. நச்சினார்க்கினியர், தொல்காப்பியம் – பொருளதிகாரம், பக். 37, 38
8. மு. வரதராசன், முல்லைத்திணை, ப. 78
9. சிலப்பதிகாரம், அந்திமாலை சிறப்புச்செய் காதை, 47–57
10. சிலப்பதிகாரம், வேனிற் காதை, 111–118
11. சிலப்பதிகாரம், அந்திமாலை சிறப்புச்செய் காதை, 58–59
12. அகநானூறு, 34
13. சிலப்பதிகாரம், கொலைக்களக் காதை, 71–73
14. வி. ஆனிலெட்பாமி, சங்க அகப்பாடல்களின் அடிக்கருத்துக்கள், ப. 207
15. ஆ. இராமகிருஷ்ணன், அகப்பொருள் மாந்தர் – ஓர் ஆய்வு, ப. 91
16. சிலப்பதிகாரம், கனாத்திறமுரைத்த காதை, 57–63
17. முல்லைப்பாட்டு, 11–17
18. நற்றிணை, 42
19. ஐங்குறுநூறு, 492
20. சிலப்பதிகாரம், கனாத்திறமுரைத்த காதை, 69–73
21. ஐங்குறுநூறு, 401
22. குறுந்தொகை, 167
23. சிலப்பதிகாரம், அடைக்கலக் காதை, 120–124
24. சிலப்பதிகாரம், கொலைக்களக் காதை, 46–52
25. மேலது., 78–81

26. மேலது., 84–91

27. எஸ். இராமகிருஷ்ணன், இளங்கோவின் பாத்திரப்படைப்பு, பக். 105, 106

## துணை நூல்கள்


ஆண்டியப்பன், தே., கருத்தும் காட்சியும், வெற்றிவேல் வெளியீடு, மதுரை, 1975

ஆனிலெட்பாமி, வி., சங்க அகப்பாடல்களின் அடிக்கருத்துக்கள், பிஎச். டி., ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1992

இராசா, கி., களவியலும் உளவியலும், பார்த்திபன் பதிப்பகம், மதுரை, 1985

இராமகிருஷ்ணன், ஆ., அகத்திணை மாந்தர் – ஓர் ஆய்வு, சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, 1982

இராமகிருஷ்ணன், எஸ்., இளங்கோவின் பாத்திரப்படைப்பு, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1964

இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், கழக வெளியீடு, சென்னை, 1969

இளம்பூரணர், (உ. ஆ.), தொல்காப்பியம் – பொருளதிகாரம், கழக வெளியீடு, சென்னை, 1969

சோமசுந்தரனார்,பொ.வே., (உ. ஆ.), ஐங்குறுநூறு, கழகவெளியீடு, சென்னை, 1966

......................................................................................, குறுந்தொகை, கழகவெளியீடு, சென்னை 1978

நச்சினார்க்கினியர், (உ. ஆ.), தொல்காப்பியம் – பொருளதிகாரம் கழக வெளியீடு, சென்னை, 1971

நப்பூதனார், முல்லைப்பாட்டு, கழக வெளியீடு, சென்னை, 1970

நாராயாணசாமி, அ., (உ. ஆ.), நற்றிணை, கழக வெளியீடு, சென்னை, 1952

வரதராசன், மு., முல்லைத்திணை, பாரி நிலையம், சென்னை, 1952

வேங்கடசாமி நாட்டார், ந. மு., (உ. ஆ.), அகநானூறு, கழக வெளியீடு, சென்னை, 1944 ■

பரல்கள் 12, சனவரி 1999, பக். 53 – 60 Ⓟ தமிழ் ஆய்வாளர் மன்றம், மதுரை

# தண்டபாணி சுவாமிகளின் தனிநிலைக் கொள்கை *

கா. சந்தானலெட்சுமி
தமிழியற் புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை 625 021, இந்தியா

**ஆய்வுச்சுருக்கம்.** தண்பாணி சுவாமிகள் தனிநிலை குறித்த கொள்கையில் பிற இலக்கணிகளிலிருந்து வேறுபடுதல். சார்பெழுத்துக்களில் ஒன்றாகத் தனிநிலையைக் கூறாமல் தனியெழுத்தாகக் கூறுதல். இடையின மெய்களோடு ஒத்தாகத் தனிநிலையைக் குறிப்பிடுதல்.

**கருச்சொற்கள்.** இலக்கணம்; அறுவகை இலக்கணம்; ஆய்தம்.

## 1. அறிமுகம்

இறைப்பற்றையும், மொழிப்பற்றையும் தம்மிருக் கண்களாகக் கருதியவர் தண்டபாணி சுவாமிகள். முருகபக்தியில் திளைத்த இவர் தமிழ்மொழிக்கு வாழ்வும், வளமும் சேர்த்தவராவார். சந்தப் பாடல்களைச் சிறப்பாக இயற்றுவதில் இணையற்றவர். அதனாலே "வண்ணச்சரபம்" என்ற சிறப்புப் பெயரும் பெற்றார். பல புதிய இலக்கியங்களைத் தமிழுலகிற்கு ஆக்கித்தந்த அடிகள், புதுமை இலக்கணமாக புலமை இலக்கணத்தையும் இணைத்து அறுவகை இலக்கணத்தை இயற்றியுள்ளார். இவரின் காலம் 1839லிருந்து 1898

* தமிழ் ஆய்வாளர் மன்ற புதன் வட்டக் கருத்தரங்கில் (சனவரி 20, 1999) படிக்கப் பெற்றது.

வரையாகும். 19ஆம் நூற்றாண்டின் இணையற்ற இலக்கண நூலாக விளங்கும் அறுவகையிலக்கணத்தின் வழியாக, தண்டபாணி சுவாமிகளின் தனிநிலை பற்றிய கருத்துக்களை விளக்குவதாக இக்கட்டுரை அமைகிறது.

## 2. தனிநிலை பற்றிய விளக்கம்

ஒரு மொழியின் வரிவடிவ வளர்ச்சியினைக் கொண்டு அம்மொழியின் தொன்மையை – வன்மையை – வளமையை அறியலாம். கி.மு. இரண்டாம் நூற்றாண்டிலே இலக்கண நூலை உடைய தமிழ்மொழியின் எழுத்து வளர்ச்சி தனித்துவம் உடையது.

தமிழ் மொழியில் எழுத்துக்கள் தனித்தியங்கும் தன்மையின் அடிப்படையில் முதலெழுத்து எனவும், சார்பெழுத்து எனவும் வகைப் படுத்தியுள்ளனர். சார்பெழுத்து மூன்றெனக்கூறும் தொல்காப்பியர், அதனுள் ஆய்தத்தையும் ஒன்றாக்கி விளக்கியுள்ளார்.

இந்த ஆய்தத்தைத் 'தனிநிலை' என்றும், 'அக்கேனம்' என்றும் 'புள்ளியெழுத்து' என்றும், 'அடுப்பெழுத்து' என்றும் கூறுகின்றனர். இதனை,

> **"அக்கேனம் ஆய்தந் தனிநிலை புள்ளி**
> **ஒற்றிப் பால ஐந்தும் இதற்கே"[1]**

என்பதன் மூலம் நன்கறியமுடிகிறது. ஆய்தத்தைக் குறிக்க பல்வேறு பெயர்கள் இருப்பதைப் போல ஆய்தத்தின் வடிவம், பிறப்பு, ஓசை, இயக்கம் குறித்துப் பல்வேறு கருத்து வேறுபாடுகள் உள்ளன. அந்த வகையில் முந்தைய இலக்கண நூல்களிலிருந்து வேறுபட்டதாக அறுவகை இலக்கணம் கூறும் தனிநிலை பற்றிய கருத்துக்கள் உள்ளன.

## 3. அறுவகை இலக்கணமும், எழுவகை எழுத்தும்

> **"தமிழ் மொழியில் இலக்கணம் என்பது மொழியை மாத்திரம் ஆராய்வதாக அன்றி அம்மொழியினாலான இலக்கியம், அவ்விலக்கியத்தின் பொருள், வடிவம் ஆகியவற்றையெல்லாம் ஆராயும் ஒரு நெறியாக அமைந்தது" [2]**

என்ற கருத்து தமிழ்மொழியின் இலக்கணியல்பைச் சுட்டுகிறது. இதற்கேற்பவே அறுவகை இலக்கணம் அமைந்துள்ளது. எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், பொருளிலக்கணம், யாப்பிலக்கணம், அணியிலக்கணம், புலமையிலக்கணம் என்பவையே அறுவகை இலக்கணமாகும்

இவ்விலக்கண ஆசிரியர், தொல்காப்பியர் முதலான இலக்கண ஆசிரியர்கள் அமைத்துள்ள முதல், சார்பு என்னும் எழுத்துக்களின் பிரிவை ஏற்கவில்லை. பிற இலக்கணிகளிலிருந்து தனித்த வகையில் இவர் எழுத்துக்களை,

> **"உயிர் என்றும் ஆய்தம் என்று வுற்று என்று உயிர்மெய் என்று அலகு என்று கூட்டு என்று அறுவகை எழுத்தும் அன்றிக் குறிப்பு என்று அவை சில உளவே"[3]**

என ஏழாகப்பகுத்துள்ளார். எழுவகை எழுத்துக்கள் பின்வருமாறு.

- உயிரெழுத்து
- ஆய்தெழுத்து
- மெய்யெழுத்து
- அலகெழுத்து
- கூட்டெழுத்து
- குறிப்பெழுத்து
- உயிர்மெய் எழுத்து

இதில் ஆய்தஎழுத்தை உயிரெழுத்திற்கும், மெய்யெழுத்திற்கும் இடையில் வைப்பதால் முதலெழுத்துக்கள் முப்பத்தொன்று என வீரசோழியம் மற்றும் நேமிநாதம் கூறும் கருத்தினை ஒட்டி இவரின் எழுத்துக் கொள்கை அமைகிறது எனலாம்.

## 4. தனிநிலையின் வடிவமும் ஒலிப்பும்

எழுத்து என்பது தனக்கென ஒரு வரிவடிவத்தையும், ஓர் ஒலி வடிவத்தையும் உடையது ஆகும். எழுத்தின் வடிவங்களை அறியாது நூற்களைக் கற்று பயனடைதல் என்பது இயலாத ஒன்று. எனவேதான் எழுத்திலக்கணத்தின் வகைப்பகுதியில் தனிநிலையின் வடிவம் பற்றியும் ஒலிப்பு பற்றியும் தண்டபாணி சுவாமிகள் கூறுகிறார்.

> **"உயிர் எழுத்து உரைத்தனம் உரித்ததேங்காய்க்**
> **கண்போல் முச்சுழி கவினுறக் காட்டல்**
> **ஆய்தம் துணை இழந்து அலமரும் காக்கை**
> **குளறலில் மிடற்றில் குமுறொலி தருமே"[4]**

என்ற நூற்பாவின் மூலம் தேங்காயிற் காணப்படும் கண்களைப் போன்று மூன்று சுழிகளை வரைந்து காட்டுதல் ஆய்த எழுத்தின் வரிவடிவம் எனத் தெளிவுபடுத்தியுள்ளார். முப்பாற்புள்ளி என்பது குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்ற மூன்றிற்கும் உரியது என்ற பேராசிரியர் கருத்தோடு இவ்வாசிரியர் முரண்படுகிறார். முப்பாற்புள்ளி என்பது ஆய்தத்தினை மட்டும் குறிக்கிறது என்று கூறிய இளம்பூரணர், நச்சினார்க்கினியார் கருத்துக்களோடு இவர் உடன்பட்டே முச்சுழி என ஆய்தத்தைக் குறிப்பிடுகிறார்.

ஆய்தத்தின் ஒலிப்புப்பற்றிக் கூறும்பொழுது, அவ்வொலியானது தன் இணைப்பறவையைப் பிரிந்து வருந்தும் காகம் துன்புற்றுக் கரைதலைப் போன்று கழுத்தில் குமுறுகின்ற ஓசையை உடையது எனத் தண்டபாணிசுவாமிகள் கூறுகின்றார்.

ஆய்தத்தின் பிறப்பிடம் பற்றி இருவேறு கருத்துக்கள் உள்ளன. ஒன்று இளம்பூரணர் உரைவழியே,

> **"ஆய்தக்கு இடம் தலை அங்கா முயற்சி"** [5]

என்றுரைக்கும் பவணந்தியார் கருத்து. மற்றொன்று

> **"ஆய்தம் தனக்குப் பொருந்தின் நெஞ்சுவாரியால் பிறக்கும்"** [6]

என்ற நச்சினார்க்கினியார் கருத்து.

இவ்விரண்டிற்கும் மாறாக ஆய்தம் கழுத்தில் தோன்றும் என்றுரைக்கிறார் இவ்வாசிரியர். ஆய்தம் தன் பிறப்பாலும், தன்மையாலும் இடையின மெய்யெழுத்துக்களை ஒத்தது என்ற கொள்கையுடையவர். இடையின மெய்யெழுத்துக்கள் கழுத்தை பிறப்பிடமாகக் கொண்டு பிறப்பதால் ஆய்தமும் அவ்வாறே பிறக்கிறது என்கிறார்.

ஆய்தத்தின் மாத்திரை அளவு பற்றி,

> **"குறிலிற் பாதிபோலும் ஆய்தமும்**
> **ஒற்றும் தனித்தனி அரை மாத்திரையே"** [7]

என்று கூறுகிறார். பெறுகின்ற மாத்திரை அளவாலும், ஒலி எழுகின்ற முயற்சியாலும் இடையினத்தோடு ஆய்தத்தை இணைத்துப் பார்க்கின்ற தன்மையை அறியமுடிகிறது.

## 5. இடையினத்தின் இனவெழுத்து தனிநிலை

தனிநிலை மெய்யினை ஒப்பவே உயிரற்றது. ஆனால் அகரச் சார்புடையது என்கிறார். இனநிலை என்று நோக்கும் பொழுது இடையினமெய்களோடு ஓரினமாய் வைக்கப்படும் என்று தண்டபாணி சுவாமிகள் கூறுகிறார். இதனை,

**"ஆய்தம் இடையினத்து ஒற்றுப்போலுமே"[8]**

என்ற நூற்பா தெளிவாக்குகிறது.

உயிரோடு புணர்ந்த வல்லெழுத்துச் சார்பாக ஆய்தம் பிறக்கும் என்ற இளம்பூரனர் கருத்தோடு இவ்வாசிரியர் மாறுபடுவதைக் காண முடிகிறது. இதற்கான காரணங்களைப் பார்ப்போம்.

யாப்பருங்கல விருத்தியுரை அலகுபெறும் எழுத்துக்கள் பற்றிக் கூறும் பொழுது, அளபெடுக்காத, நிலையில் தனி நிலையும் ஒற்றும் அலகு பெறாது என்கிறது. அளபெடுக்கும் எழுத்துக்கள் பற்றிக் கூறும் அதன் மேற்கோட்சூத்திரம்,

**"ஙஞண நமன வயளல ஆய்தம் ஈரிடத்து**
**அளபெழும் ஓரோ வழியான"[9]**

என்றமைகிறது.

இதில் இடையின மெய்களை அடுத்தே ஆய்தம் கூறப்பட்டுள்ளது. ஒற்றெழுத்துப்போல ஆய்தமும் அளபெடுப்பதாலும், அப்பொழுது அது இடையின மெய்களை ஒத்து விளங்குவதாலும், அதனை இடையின ஒற்றுக்கு இணையாக்க் கூறலாம் என்ற கருத்துப் பெறப்படுகிறது.

மற்றொரு நிலையில் லகர, ளகர, ஈற்றுச்சொற்கள் தகர முதன் மொழியோடு புணரும்பொழுது லகர, ளகரங்கள் முறையே றகரமாகவும், டகரமாகவும் திரிதலே அன்றி ஆய்தமாகவும் திரிகின்றன.

**"தகரம் வரும் வழி ஆய்தம் நிலையிலும்**
**புகரின் றென்மனார் புலமையோரே"[10]**

எனத் தொல்காப்பியர் கூறுகிறார். சான்றாக,

கல் + தீது = கற்றீது / கஃறீது

முள் + தீது = முட்டீது / முஃடீது

இதனை ஒப்பவே அறுவகை இலக்கண ஆசிரியர்,

> **"பல் என்னும் மொழியோடு தலை எனல் புணர்கால்**
> **பஃறலை ஆதலும்"[11]**

என்றுரைத்தார். இதனோடு மட்டுமன்றி நிலைமொழியில் வகர ஈறு இருந்து வருமொழியில் வல்லினம் வந்தால் அல்வழிப் புணர்ச்சியில் வகரம் ஆய்தமாகத் திரிகிறது. சான்றாக,

அவ் + கடிய = அஃகடிய

இவ் + தீய = இஃதீய

உவ் + பெரிய = உஃபெரிய

மேற்கண்டவற்றிலிருந்து ல,ள,வ என்ற மூன்றும் ஆய்தமாகத் திரிவதைக் காணமுடிகிறது.




இதனால் ஆய்தம் இடையின மெய்களுக்கு இனம் என்ற கருத்துப் பெறப்படுகிறது.

ல,ள,வ என்ற ஒலியன்களின் திரிபே ஆய்தம் என்ற மொழியியலாளர் கருத்தோடு இக்கருத்தினை ஒப்பு நோக்கலாம்.

## 6. தனிநிலையின் வருகைநிலையும் தெய்வநிலையும்

ஒரு சொல்லில் இரண்டாவது எழுத்தாகத் தனிலை நிற்பின், அதனை அடுத்து வல்லினத்தைச் சேர்ந்த உயிர்மெய் மட்டுமே வரும். இதனைத் தண்டபாணி சுவாமிகள்,

> **"ஒரு பொறிப் பின்னே உறும் ஆய்தம் தன்பின்**
> **வல்லுயிர் மெய்யே வருமாறு நிற்கும்**
> **எஃகம் அஃது கஃது எனல் உதாரணம்"[12]**

என உதாரணத்தோடு உரைக்கின்றார்.

எழுத்துக்களைத் தெய்வங்களோடு தொடர்புப் படுத்தும் போக்கினைப் பாட்டியல் நூல்களிலிருந்து நன்கு காணலாம். பாட்டியல் நூல்கள் முதலான பிற இலக்கண நூல்கள் தெய்வத்தால்

பிறப்பிக்கப்பட்ட எழுத்துக்களைப் பற்றிக் கூறுகின்றன. ஆனால் அறுவகை இலக்கண நூலாசிரியர் தெய்வங்கள் எழுத்துக்களில் நிலை பெற்றிருப்பதாகக் கூறுகிறார்.

> "ஆய்தத்து அருக்கன் ஆதிமுச்சுடரும்
> பொலிதரு என்னப் புகலல் ஆகுமே"[13]

என்ற நூற்பாவில் தனிநிலையில் சூரியன், சந்திரன், தீக்கடவுள் ஆகிய மூன்று சுடர்தெய்வங்களும் விளங்குவர் என்கிறார்.

## 7. நிறைவு

❖ தனிநிலை முச்சுழி வடிவுடையது.

❖ கழுத்தினை இடமாகக் கொண்டு தனிநிலை பிறக்கிறது.

❖ இடையின மெய்களின் இனவெழுத்தாய் தனிநிலை அமைகிறது.

❖ புணர்ச்சி நிலையில் லகர, ளகர, வகரங்கள் திரிந்து தனி நிலையாக மாறுகின்றது.

❖ உயிரெழுத்துக்கும் மெய்யெழுத்துக்கும் இடையில் அமையும் தனியெழுத்துத்தாக தனிநிலையை ஆசிரியர் கூறுகிறார்.

## குறிப்புகள்

1. யாப்பருங்கல விருத்தி, ப. 27.
2. அ. சண்முகதாஸ், தமிழ்மொழி இலக்கண இயல்புகள், ப. 31.
3. தண்டபாணி சுவாமிகள், அறுவகை இலக்கணம், 2.
4. மேலது., 14.
5. பவணந்தி முனிவர், நன்னூல், 87.
6. நச்சினார்க்கினியர், தொல்காப்பியம், 101.
7. தண்டபாணி சுவாமிகள், அறுவகை இலக்கணம், 61.
8. மேலது., 92.
9. யாப்பருங்கல விருத்தி, ப. 36.
10. நச்சினார்க்கினியர், தொல்காப்பியம், 369.

11. தண்டபாணி சுவாமிகள், அறுவகை இலக்கணம், 165.

12. மேலது., 121.

13. மேலது., 98.

## துணை நூல்கள்


ஆறுமுக நாவலர், (ப. ஆ.), நன்னூற் காண்டிகையுரை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1984.

இளங்குமரன், (ப. ஆ.), யாப்பிருங்கால விருத்தி, கழக வெளியீடு, சென்னை, 1976.

சண்முகதாஸ், அ., தமிழ்மொழி இலக்கண இயல்புகள், பாரி நிலையம், சென்னை, 1972.

நச்சினார்க்கினியர், (உ. ஆ.), தொல்காப்பியம் – எழுத்ததிகாரம், கழக வெளியீடு, சென்னை, 1972.

நாகராசன், ப.வெ., (ப. ஆ.), அறுவகை இலக்கணம், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1991.

பேராசிரியர், (உ. ஆ.), தொல்காப்பியம் – பொருளதிகாரம், கழக வெளியீடு, சென்னை, 1975. ■

பரல்கள் 12, சனவரி 1999, பக். 65 – 77, © தமிழ் ஆய்வாளர் மன்றம், மதுரை

# இராஜம் கிருஷ்ணன் நாவலில் தொழிலாளர் சமுதாய மாற்றம் *

மெ. செந்தாமரை
*தமிழியற் புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை 625 021, இந்தியா*

***ஆய்வுச்சுருக்கம்.** அலைவாய்க் கரையில் நாவலில் மீனவத் தொழிலாளர் பிரச்சினை. விசைப்படகு வரவு. மீனவத் தொழிலாளர் பாதிப்பு; துவிகுத்தகைப் போராட்டம்; மீனவத் தொழிலாளர்கள் வெற்றி. கிறித்துவ சபை குருமார்கள் நசுக்குதலால், மீனவத்தொழிலாளர்கள் கிறித்துவ சமயத்திலிருந்து இந்து சமயத்திற்கு மாறுதல்.*

***கருச்சொற்கள்.** இக்கால இலக்கியம்; அலைவாய்க் கரையில்; பரதவர் போராட்டம்; சமுதாய மாறுதல்.*

## 1. அறிமுகம்

ஒரு நாட்டின் இயக்கத்திற்குத் தொழில்கள் இன்றியமையாதவை. எனவே, தொழிலாளர்கள் சமுதாயச்சிற்பிகள் என்றும், சமுதாய மாற்றத்திற்கான கிரியாஊக்கிகள் என்றும் அழைக்கப்படுகின்றனர். ஒரு நாட்டின் வாழ்விற்கும், வளத்திற்கும் அடிப்படையான தொழிலாளர் சமுதாயம், சமுதாயக் குழுக்களுள் சிறப்பிடம் பெற்று விளங்குகிறது. இத்தகைய தொழிலாளர்களின் சிக்கல்கள் பெரும்பாலும் பொருளாதாரம் சார்ந்தே காணப்படுகிறன. எனினும்,

* தமிழ் ஆய்வாளர் மன்ற புதன் வட்டக் கருத்தரங்கில் (செப்டம்பர் 23, 1998) படிக்கப் பெற்றது.

அவை இன்றைய உலக அரங்கில் இன்றியமையாத சிக்கல்களாக உருவெடுத்துள்ளன. இத்தொழிலாளர் சமுதாயத்தில் காணப்படும் சிக்கல்களையும், அத்தொழிலாளர்களிடம் தோன்றியுள்ள மாற்றங்களையும், இராஜம் கிருஷ்ணனின் அலைவாய்க் கரையில் என்ற நாவலில் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## 2. சமுதாய மாற்றம் (Social Change)

ஒரு குறிப்பிட்ட மக்கள் கூட்டத்தினரின் வாழ்க்கையமைப்பில் ஏற்படும் மாற்றங்களே சமுதாய மாற்றம் எனப்படும். மக்களின் வாழ்க்கை முறையானது பொருளாதார அமைப்பினாலும், அவ்வமைப்புக்கள் தோற்றுவிக்கும் உறவுகளினாலும் தீர்மானிக்கப்படுவதாகும். முந்தைய ஒரு பொருளாதார நிலையிலிருந்து, இன்னொரு பொருளாதார நிலைக்குப் போகும் பொழுது, வாழ்க்கையில் மாற்றம் ஏற்படுகிறது. இராஜம் கிருஷ்ணனின் நாவலான அலைவாய்க் கரையில் என்ற நாவல் மீன் பிடிப்பவர்களின் வாழ்க்கையில் ஏற்படும் பிரச்சினைகளையும், அம்மக்களிடம் நிகழ்ந்துள்ள மாற்றங்களையும் வடித்துக் காட்டுகின்றது. எங்கோ ஒரு மாளிகையில் இருந்து கொண்டு தன்னால் இலக்கியம் படைக்க இயலாது; மக்களின் வாழ்க்கைச் சந்தடிகளும், அவர்களுடன் உறவாடும் பண்பும் தேவை என்று கூறும் ஆசிரியர், தூத்துக்குடி, உவரி, மணப்பாடு, புன்னைக்காயல் போன்ற பல கடற்கரை ஊர்களில் தங்கி, அம்மக்களின் வாழ்வின் முன்னேற்றத்திற்கான நிச்சயமில்லாததோர் நிலைமையைக் காண முடிந்தது. இவர்களின் வாழ்வில் ஏமாற்றங்களும், நிராசைகளுமே அதிகம். இக்காட்சிகளைக் கண்ட பின்னர், இக்கதையைப் புனைந்துள்ளேன் என்கிறார். மேலும் இவர் உண்மை நிகழ்ச்சிகளின் ஆதாரம் கொண்டு, வாழ்வின் போக்குகளையும், சமூகச்சார்புகளையும் கணித்து, நிகழ்காலப் பிரச்சினைகளைப் பற்றிச் சிந்திப்பதும், ஆக்கப் பூர்வமான முடிவுகளை ஆராய்வதும் எனது இலக்கிய நோக்கம் என்கிறார்.

## 3. சமுதாய மாற்றக் கோட்பாடுகள்

இந்திய சமுதாயத்தின் மாற்றங்களை என். சீனிவாஸ், யோகேந்திரசிங் என்ற சமுதாயவியலறிஞர்கள் நான்கு வகையாக பிரிப்பர். அவை:

- **மேல்நிலை ஆக்கம்**
- **புதுமை ஆக்கம்**
- **தேசிய ஆக்கம்**
- **கீழ்நிலை ஆக்கம்**

### 3.1 மேல் நிலை ஆக்கம்

கீழ் சாதியினர் மேல் சாதியினரைப் பின்பற்றி, மேலே உயர்ந்து வர முயலுதல் என்ற நிலைக்கு மாற்றமடைதலே 'மேல் நிலை ஆக்கம்' எனப்படும்.

### 3.2 புதுமை ஆக்கம்

மேற்கத்திய நாட்டின் நேர்முக அல்லது மறைமுகத் தொடர்பால் ஏற்படும் மாற்றம் ஆகும். இது மேனாட்டு மக்களைப் போன்று உணவு, உடை, பழக்கவழக்கங்கள், பேச்சுமுறை, விளையாட்டு முறை போன்றவற்றைப் பின்பற்றுதல் ஆகும்.

### 3.3 தேசிய ஆக்கம்

பிரஞ்சுப் புரட்சிக்குப் பின்னர் எழுந்த ஓர் இயக்கமாகும். இந்தியாவில் ஆங்கில ஆட்சிக்கு எதிராகத் தோன்றிய இவ்வியக்கமானது ஆங்கில கல்வியினாலும், ஐரோப்பிய வரலாற்றாலும் தாக்கம் பெற்றது. எனவே தேசிய ஆக்கமானது மேற்கத்திய ஆக்கத்தோடு தொடர்புடையது. இத்தேசியம்,

- அரசியல் தேசியம்,
- பொருளியல் தேசியம்,
- காந்திய தேசியம்
- மாநிலவியல் தேசியம்

என நான்கு வகைப்படும்.

#### 3.3.1 அரசியல் தேசியம்

நாட்டு விடுதலைக்கான 'வெள்ளையனே வெளியேறு' போன்ற இயக்கங்கள் அரசியல் தேசியம் எனப்படும்.

#### 3.3.2 பொருளியல் தேசியம்

பொருளாதார அடிப்படையில் எல்லோருக்கும் சம உரிமை வேண்டும் என்ற உணர்வில் செயல்படுவது ஆகும்.

#### 3.3.3 காந்திய தேசியம்

தேசிய உணர்விலும், ஒருமைப்பாட்டிலும் காந்தியச் சிந்தனை இடம்பெறுதல்

#### 3.3.4 மாநிலவியல் தேசியம்

மாநிலம் மற்றும் மொழிப்பற்றை அடிப்படையாகக் கொண்ட இயக்கங்கள் பற்றிய கருத்து இதில் அடங்கும்.

### 3.4 கீழ்நிலை ஆக்கம்

*மேல் சாதிக்காரர்களின் பழக்கவழக்கங்களை முழுமையாகப் பின்பற்றாமல் அரைகுறையாக மேற்கொள்ளுதல்*

இவற்றுள் 'அலைவாய்க் கரையில்.......' என்ற நாவல் மீன்பிடித் தொழிலாளர்களின் பொருளாதார உரிமை நிலைநாட்டும் பொருளியல் தேசியத்தை மையப்பொருளாகக் கொண்டுள்ளது. நாகரீகம், தொழிலியம் போன்ற புதுமை ஆக்க மாற்றங்கள் இவர்களின் வாழ்க்கைப் போராட்டத்தினைக் கடுமையாக்குகின்றன. மீன்பிடித் தொழிலுக்கு வேண்டிய பொருள்கள் அனைத்தும், பல புதுமைகளைப் பெற்றுள்ளன. அவற்றின் விலைகளோ பன்மடங்கு அதிகம். இந்நிலையில், வறுமை நிலையில் வாழும் இம்மக்கள், ஆயிரக்கணக்கான ரூபாய் மதிப்பினைப் பெறும் துவியினைக் கோயிலுக்கு இனாமாக கொடுக்க மறுக்கின்றனர். இந்நிலையானது சமயத்திற்கு எதிரான செயல் அன்று. அது அம்மக்களின் வாழ்க்கையைப் பாதிக்கும் சிக்கலாகும். எனவே இது பொருளியல் அடிப்படையிலான போராட்டம் அகும்.

### 4. தொழிலாளர் இயக்கங்கள்

*தொழில் சார்புடைய குழு முறையிலான அமைப்புக்கள் தொன்று தொட்டு இயங்கி வந்துள்ளன*

> **"தொழிலாளர் சங்கங்களின் முன்னோடிகளாக கில்டு நிறுவனங்கள் கருதப் படுகின்றன. இக்கில்டு நிறுவனங்கள் முதலாளி, தொழிலாளி தகராறுகளைத் தீர்த்து வைக்கும் அமைப்புக்களாக செயல்பட்டது."**[1]

தொழிற்புரட்சியின் விளைவாகத் தொழிற்பெருக்கம் ஏற்பட்டது. அதனால் தொழிற்சாலைகள் பல தோன்றின. இவ்வாறு அதிகமாகத் தோன்றிய ஆலைத்தொழில்களில் தொழிலாளர்கள் மிகுதியான எண்ணிக்கையில் ஈடுபட்டனர். ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் ஒரே இடத்தில் வேலை செய்வதால் தொழிலாளர்கள் தினமும் ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொள்ளவும், அவர்களின் சிக்கல்களைப் பற்றி விவாதித்துக் கொள்ளவும், அவர்களுக்கிடையே கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ளவும், வாய்ப்பு ஏற்படுகிறது. இதன் விளைவு, அவர்கள் அரசியல்மயமாக்கப் படுகிறார்கள். அரசியல் அறிவு வளர வளர, தொழிலாளர்களின் உள்ளத்தில் முதலாளி சுரண்டும் வர்க்கம் என்றும், தொழிலாளிகள் சுரண்டப்படும் வர்க்கம் என்றும்

வர்க்க பேதம் (class consiousness) ஏற்படுகின்றது. வர்க்க பேதம் ஏற்பட்ட தொழிலாளர்கள், தொழிற் சங்கங்கள் (Trade Union) அமைத்து, அதன் மூலம் தங்களின் நிலையை வலுப்படுத்தியதும், வர்க்க விரோதிக்கு எதிராக வர்க்க போராட்டத்தைத் தொடங்குகிறார்கள்.

> "தொழிற்புரட்சி முதலில் தோன்றிய இங்கிலாந்தில் தொடக்கக் காலத்தில் தொழிலாளர் இயக்கங்களைத் தடை செய்யும் சட்டங்கள் இயற்றப்பட்டது. ஆனால் பிரான்ஸ் வலுவுள்ளதாக இயங்கின. பின்பு உலகளாவிய முறையில் விரிவடைந்தன. ரஷ்யாவில் தோன்றிய பொதுவுடைமைப் புரட்சியின் மூலம் ஆக்கம் பெற்றன."[2]

## 4.1 இந்தியாவில் தொழிலாளர் இயக்கங்கள்

19–நூற்றாண்டின் இடைப்பகுதியில் தொழிற்புரட்சி தோன்றியது. இதன் விளைவாகப் பம்பாய், கல்கத்தா போன்ற பெரு நகரங்களில் பருத்தி, சணல் ஆலைகள் தோன்றின. பின்னர் இவ்வாலைகளில் பணியாற்றிய தொழிலாளர்களுக்கென இயக்கங்கள் உருவாயின. இதனால்

> "1918ஆம் ஆண்டு வாடியாவால் தொடங்கப்பட்ட மெட்ராஸ் லேபர் யூனியன் நன்கு ஒழுங்கமைக்கப்பட்ட சங்கமாகக் குறிக்கப்படுகின்றது."[3]

தொழிலாளர் இயக்கம் என்பது தொழிலகங்களில் பணிபுரிவோர் என்ற அளவில் நின்று விடாமல், பெரும்பான்மையோர் ஈடுபட்டுள்ள உழவு முதலாகப் பிற தொழில் செய்வோர்களிடையேயும் வேரூன்ற வேண்டும் என்று வலியுறுத்தும் திரு.வி.க., தமிழகத்தில் தொழிலாளர் இயக்கங்களின் வளர்ச்சிக்குப் பெரும்பங்காற்றியவர் ஆவார்.

## 5. மீனவர்களின் நிலை

மனித இன வரலாற்றிலேயே மிகவும் தொன்மையுடையது மீன்பிடித் தொழிலாகும்.

> "மனிதன் மண்ணில் தானியம் விதைத்து உண்டு வாழ்வதற்கும், பழகுவதற்கும் முன்பே மீன் பிடித்தல் நடைமுறையிலிருந்திருக்க வேண்டும்."[4]

இத்தொழிலுக்குரிய களம் கடல். ஆகையால் இம்மீனவர்களின் வாழ்க்கையானது இயற்கையோடு போராடும் பெற்றியுடையது.

இவ்வாறு உயிருக்கு உறுதி இன்றிப் போராடிப் பெறும் உழைப்பினைத் தாமே அடைய முடியவில்லையே என்பது தான் இம்மக்களின் தலையாயச் சிக்கல் ஆகும். இவர்கள் ஆழ்கடலில் தன் குருதியைச் சிந்தி உழைக்கும் பயனைக் கோயில் வரி என்ற பெயரில் இனாமாகக் கிறிஸ்தவ சமயக்குருமார்கள் பறித்துக் கொள்கின்றனர். இவ்வாறு அலைகடலில் தம் உதிரத்தை வியர்வையாக்கிப் பாடுபடும் பரதவர்கள், அன்றாடம் சோற்றுப்பாட்டுக்கே தட்டுதலாக வாழும் நிலையில், அதிக விலை போகும் துவியைக் கோயிலுக்குக் கொடுப்பது குறித்து, மனத்தாங்கல் கொள்கின்றனர். அதனால் சபைக்குருமார்களுக்கு எதிராகப் போராட்டம் செய்கின்றனர்.

பொருள் உற்பத்திக்கு மூலப்பொருள்கள், உற்பத்திக் கருவிகள் உடல் உழைப்பாகிய மனித ஆற்றல் இம் மூன்றும் இன்றியமையாதன ஆகும். இதில் மூலப்பொருட்கள், உற்பத்திக் கருவிகள் சிறுபான்மையினருக்கே சொந்தமாக உள்ளன. மனித ஆற்றலைச் (உடல் உழைப்பு) சம்பளம் என்கிற பெயரில் பணம் கொடுத்து சிறுபான்மையினரால் வாங்கப்படுகிறது. பெரும்பான்மை உழைப்பாளிகள், உற்பத்தி சாதனங்கள் அற்ற வெறும் கூலிகளே. மீனவத் தொழிலாளருக்கு வலையும், வள்ளமும் சொந்தமில்லை. இதன் விளைவாக வள்ளங்கள் கரைக்கு வந்ததும் வராததுமாக வள்ளத்துச் சொந்தக்காரனுக்குப் பிடிபடும் மீனில் ஐந்தில் இரண்டு பங்கு தர வேண்டும். மாதா கோவில் வரி வேறு. கடன் தரும் வட்டிக்காரருக்கு அன்றாடம் வட்டியாக மீன் தரவேண்டும். இவையெல்லாம் போக எஞ்சியுள்ள உழைப்பின் பயன் இம்மீனவர்களின் வயிற்றுக்குப் போதாத நிலை.

> **"இவெ ஆத்தா பெத்திருக்கா மருந்து சரக்கு வாங்கக் கூடத் துட்டில்லை..... எல்லாக் காசையும் எல்லாரும் கொண்டு போய்ட்டாகளே! கஞ்சிக்கு அரிசியில்ல. ஆணம் வய்க்க ஒண்ணில்லை"**..[5]

என்ற புலம்பலே மிஞ்சுகிறது.

இந்நிலையில், இயந்திரமயமான விசைப்படகின் நுழைவு, இவர்கள் வாழ்வில் பெரும் சிக்கல்களைத் தோற்றுவித்துள்ளது.

> **"றால்தா இப்ப சோறு போடுது. அதுக்கும் ஆபத்து வருது. சர்க்காரில் ஆயிரமாயிரம் லாஞ்சிக்கு இந்தக் கரயில முன்பணம் கொடுத்திருக்காங்களாமே. மணப்பாட்டில் கடம் வாங்கி, ரெடிமேட்ல வள்ளம் கொண்டாந்து தொழில் செய்யிறவங்களையே இது பாதிக்கி."** [6]

என்று குமுறும் மீனவர்கள் போராட்டங்களுக்கு இடையிலேயே வாழ்கின்றார்கள். இத்துடன்,

> **"கூலியாகத் தொழில் செய்து, கூலிக்காசைக் கொண்டு குடிக்கச் செல்லும் ஆண்கள்; அறியாமையும் அழுக்கும் மூடநம்பிக்கைகளுமாகப் பெண்கள்; சீதனம் என்றக் கொடுமைப் பேயை விரட்டவழி தெரியாமலே கன்னித்தன்மையைப் பறிகொடுக்கும் இளம் பெண்கள்; கல்வி பயின்று முன்னேறி நல்வாழ்வு பெற வேண்டும் என்ற ஊக்க மலர்ச்சிக்கு இடம் தராத சூழலில் உருவாகும் ஆண்குழந்தைகள்"** [7]

என்றவாறு, மீனவர்களின் வாழ்க்கை நிலையானது கடலைப்போலவே கொந்தளிப்பும் குமுறலுமாக உள்ளது. ஓயாத கடல் அலைகளைப் போன்று கடல் தொழிலாளர்களிடம் வாழ்க்கைப் போராட்டங்களும் தொடர்ந்து கொண்டே இருக்கின்றன.

## 5.1 அரசின் செயற்பாடு

தொழிலாளர் நலச்சட்டங்களும், தொழிலாளர் இயக்கங்களும் சீர்த்திருத்தம் என்ற பெயரில் தொழிலாளர் சமுதாயத்தின் குறைகளைப் போக்குவதற்கு முயன்றுள்ளன. ஆனால் இச்சட்டங்கள் அனைத்தும் ஆலைத் தொழிலாளர்களுக்கே பயன்பட்டு வந்துள்ளன. உப்பளம், விவசாயம், தீப்பெட்டித் தொழில் போன்றவற்றில் அரசின் சட்ட சீர்த்திருத்தங்களால் சிறிதளவு மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. ஆனால் மீன்பிடிப்பதைத் தொழிலாகக் கொண்டுள்ள இத்தொழிலாளர்களுக்கு வேண்டிய சீர்திருத்தம் அரசின் கருத்தைக் கவராத நிலையிலேயே உள்ளது. மீன் பிடிக்கும் பொருள்கள் வாங்குவதற்கென்று அரசு அளிக்கும் நிதிக்கடன் உதவியினை, வசதியும் வாய்ப்பும் உள்ளவர்களே பயன்படுத்திக் கொண்டு, தம்மளவிலே சிலர் முன்னேறியுள்ளனர்

> **"ஒழுக்யான நிழல்ல குந்தி சொகம் அனுபவிக்கிறவ லாஞ்சி வாங்கிவுட்டு பணத்து மேல பணஞ்சேக்குற, தொழில் விருத்திக்கு வரணுண்ணா, சருக்காரு எல்லாரையும் ஒண்ணாப் பாக்கணமில்லை? எல்லா லாஞ்சித் தொழிலையும் சருக்காரு வச்சிக்கட்டும். பாட்டுக்குத் தக்கின கூலி கொடுக்கட்டும். மரத்தையும், வள்ளத்தையும் எடுத்துக்கட்டும். நமக்கு எல்லோரும் ஒரு போல சம்பளம் போட்டுக் குடுக்கட்டும்"** [8]

என்ற கருத்து பொருளாதார அடிப்படையில் அனைவருக்கும் சம உரிமை வேண்டும் என்ற பொருளியல் தேசியச் சிந்தனையைச் சுட்டி நிற்கின்றது.

## 5.2 புரட்சி வழி மாற்றங்கள்

இம்மீன்பிடித் தொழிலாளர்களுக்குச் சட்டங்கள் மூலமாகக் கிடைத்துள்ள மாற்றங்கள் மிகக்குறைவே. மறுமலர்ச்சியின் விளைவால் கிடைத்த மாற்றங்கள் அவர்களின் குறைகளை முழுவதுமாக போக்கி விடவில்லை. இவர்கள் தம் உரிமைகளைப் பெறுவதற்கே போராட வேண்டிய நிலையில் உள்ளனர். எனவே மேம்பாடு என்ற இலக்கினை அடைவதற்கே போராட வேண்டியுள்ள நிலையில் இருக்கும் இம்மீனவத் தொழிலாளர்கள், நடைமுறைகளை முழுவதுமாக மாற்றியமைக்கும் புரட்சி வழி மாற்றத்தினை மேற்கொள்கின்றனர். இம்மாற்றம் தனிமனிதன் என்ற அளவிலும் இயக்கம் என்ற அளவிலும் வெளிப்படுகின்றது.

## 5.3 இயக்கங்களின் வழி பயன்பெறுதல்

அறிவியல் வளர்ச்சியும், தொழிற்புரட்சியும் தொழிலாளர்களிடையே பல மாறுதல்களைத் தோற்றுவித்துள்ளன. காலத்திற்கேற்ற சிந்தனை தொழிலாளர்களின் செயல்களில் வெளிப்படுகின்றது. இதனால், இவர்கள் தங்களின் முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கும் சமயக்கட்டுக்களையும், உழைப்புச்சுரண்டலையும் எதிர்க்கும் மனப்பான்மை பெறுகின்றனர். இதில் தனித்து நின்று செயல்படுவதை விட, இயக்க ரீதியாக செயல்பட்டால் வெற்றி நிச்சயம் என்ற நம்பிக்கையில் ஆண், பெண் இருபாலரும் தொழிலாளர் இயக்கங்களில் ஈடுபாடு உடையவராக மாறுகின்றனர்.

## 5.4 துவிகுத்தகை எதிர்ப்புப் போராட்டம்

இந்துக்களாக இருந்த பரதவ மக்கள், போர்ச்சுகீசியரின் வரவிற்குப் பின்னால் கிறிஸ்தவர்களாக மாறினர். இவர்கள் அக்காலத்தில் சுறா மீன்களின் செதில்கள் – வால் பகுதிகளைத் துவி என்று அழைத்தனர். இத்துவிகளைக் கோவிலுக்கு வரியாகக் கொடுத்து விடும் வழக்கம் இருந்தது. இத்துவி ஜப்பான், மலேசியா போன்ற நாடுகளுக்கு ஏற்றுமதியாகி அந்நியச் செலாவணியை ஈட்டித் தரத் தொடங்கியது. அதனால் மீனைவிடக் கழிக்கப்பெற்ற துவிக்கு அதிக மதிப்பு உண்டாயிற்று. இது தவிர, பரதவர்கள் தமக்குக் கிடைக்கும் மீனின் ஒரு பகுதியினையும் கிறிஸ்தவக் கோயில்களின் வளர்ச்சிக்கென

வரியாகச் செலுத்தி வந்தனர். ஆனால் இன்று மீனும், மீனின் செதில்களும் அந்நியச் செலாவணியைக் கோடிக்கணக்கில் ஈட்டித்தந்ததால், புற உலக வளர்ச்சி எதுவும் எட்டாத நிலையில், வறுமையில் உழன்று கொண்டிருந்த மீனவர்கள் விழிப்புணர்ச்சி பெற்று, கோவில் வரியை எதிர்க்கத் தொடங்கினர். இதனால் போராட்டம் நிகழ்கிறது. இதன் பயனாக சில பரதவ மக்கள் கிறிஸ்தவ சமயக்குருமார்களின் கோபத்திற்கு ஆட்படுகின்றனர். இத்துவி நிறுத்தப் போராட்டத்தில் பங்கு பெறுபவர்கள் திருச்சபையிலிருந்து ஒதுக்கப்படுவார்கள் என்றும், அவர்களின் குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கிடையாது, கோயிலில் திருமணம் கிடையாது, செத்தால் மையவாடிகளில் புதைக்க இடமும் கிடையாது என்று சபைக்குரு அறிவித்தார். அதனால் தங்கள் வாழ்க்கையைக் கிறித்துவத்தோடு இணைத்துக் கொண்ட இருதயராஜ் போன்றோர் உடைந்து போகின்றனர். ஆனால் இளந்தலைமுறையைச் சேர்ந்த பெஞ்மின், எட்வின், மரியான் போன்றோர் போராட்டத்தைத் தொடர்ந்து திருச்சபையிலிருந்து வெளியேறி இந்துக்களாக மதம் மாறுகின்றனர்.

## 5.5 சமய மாற்றம்

துவி குத்தகை எதிர்ப்பாளர்களைக் கோயில் நிர்வாகம் சமயத்தின் பேரால் அச்சுறுத்தி, அவர்களின் வேண்டுகோளைப் புறக்கணிக்கின்றது. ஆனால் உரிமையுணர்வு பெற்ற மீனவர்கள் சிலர், துன்பப்படுபவர்களுக்காக முள் கிரீடம் அணிந்து சிலுவையைச் சுமந்தார் ஏசு என்ற சமயக் கதையையும், சமயக் கட்டுப்பாட்டையும் தகர்க்கின்றனர்.

- **ஏசுநாதர் கஷ்டப்படும் மனுசங்ககிட்ட இரக்கப்படனுமின்னுதான் சொல்லியிருக்கிறாரே ஒழிய, புள்ள குட்டி தவ தண்ணிக்கில்லாம பாடுவிழாம இருக்கையிலே நெஞ்சிலே ஈரமில்லாம கோயிலுக்குக் கட்டனுமின்னு சொல்லியிருக்கல**

என்ற உண்மையினை உணர்கின்றனர். சமயம் என்பது துன்பங்களில் இருந்து மீண்டு வழிகாட்டி வாழவைப்பதற்கே. அப்படி வாழ வைக்காத சமயத்திலிருந்து விடுபடுவதால் சமயத்துரோகம் எதுவும் இல்லை என்று கூறி கிறிஸ்தவர்களாக இருந்த பரதவர்கள், இந்துக்களாக சமயம் மாறுகின்றனர். மரியான் சுப்பிரமணியனாகவும், பெஞ்சமின் பஞ்சாட்சரமாகவும், ஆல்பர்ட் ஆதித்தனாகவும் பெயர் மாற்றம் பெறுகின்றனர். மாதா கோயிலுக்குப் போவதற்குப் பதிலாக பிள்ளையார் கோவிலுக்குப் போகின்றனர். சில நூற்றாண்டுகளுக்கு

முன்பு முஸ்லீம்களின் தொந்தரவிலிருந்து விடுபட, போர்ச்சுக்கீசியரின் உதவியால் மீனவ பரதவ மக்கள் கிறிஸ்தவர்களாக மாறினார்கள். பின்பு கிறிஸ்தவத்தால் பிழைப்பிற்கு இடையூறு நேர்ந்தபோது மீண்டும் இந்துக்களாகின்றனர்.

> **"மதங்கறது மனிதனுக்கு உலக வாழ்விலே ஒரு பிடிப்பு உண்டாக்கணுமிங்கறதுக்குத் தானே தவிர வேறொண்ணில்லை"** [9]

என்று பெஞ்சமின் சொல்வது இவர்களின் சமய வாழ்வில் உண்மையாகிறது.

தமக்குரிய உரிமைகளை உணர்ந்த இப்பரதவர்கள் அவற்றைப் பெறுவதற்கு, ஒருங்கிணைந்து செயலாற்ற வேண்டும் என்று முனைந்து முதல் முயற்சியாக "மீன்பிடிப்போர் கூட்டுறவுச்சங்கம்" ஒன்று அமைக்கின்றனர். இச்சங்கத்தில் பிற குடியிருப்புக்களைச் சேர்ந்த மீனவர்களையும் ஒன்று சேர்த்து கத்தோலிக்கக் கோயிலின் எதிரான போக்கினைத் தடுத்து நிறுத்துகின்றனர். இவ்வாறு போராட்டம் நடத்தியதால் அவர்களுடைய சமுதாயம் முழுவதுமே இந்த அநியாய மகமையிலிருந்து விடுபட்டிருக்கிறது என்ற ஆசிரியர் கூற்று, போராட்டமே புரட்சிக்கு வழி என்பது புலனாகிறது.

## 5.6 விசைப்படகுப் போராட்டம்

விசைப்படகின் வருகையால், கட்டுமரத்தின் மூலம் மீன் பிடித்துப் பிழைப்பு நடத்தி வந்த மீனவர்கள் அவதிக்குள்ளாயினர். விசைப்படகு செல்லும் பொழுது வலைகள் அறுபடுவதும், மீன்கள் கிடைக்காமல் போவதும் தொடர்கதையாயின.

> **"விசைப்படகுக்காரர்கள் வல்லக்காரர்களை முறியடித்துக் கடலை தமக்கே சொந்தமாக்கிக் கொள்கின்றனர். இயந்திர அரக்கன் இந்த ஏழைப் பிள்ளைகளுக்கு எதிரியாகிறான்"** [10]

என ஆசிரியரே விசைப்படகின் வரவால் வல்லக்காரர்கள் துயரத்திற்கு உள்ளாயினர் என்பதைக் கூறுகின்றார். விசைப்படகுகளைக் கொண்டு வருவதால் மீனவர் சங்கம் இதற்குப் பேசி முடிவு செய்ய முனைகிறது. இம்முயற்சியிலும் பயன்கிட்டாத பொழுது, மீனவ மக்கள் தங்கள் வாழ்க்கையிலும் உலை வைக்க வந்த விசைப்படகிற்கு எதிராகப் போராட்டம் நடத்துகின்றனர். "நம்ம வலையெல்லாம் கிளிச்சிப் போடுறானுவ. காத்தாடிய சுழலவிட்டு அறுக்கிறானுவ அந்த எரச்சல்ல

மீனெல்லாம் ஓடிப்போவுது" என்று விசைப்படகு தரும் துயரினைக் கருதும் இம்மக்கள்

> **"பஞ்சாயத்துளயும், சருக்காரிலும் இருப்பவனுக்குக் கடல் தொழிலப் பத்தி என்ன தெரியும். அவனுவகிட்ட ஞாயம் பொறக்காது. நாம் புரட்சி பண்ணித்தான் காட்டணும்"** [11]

என்று மீனவர்கள் அனைவரும் இயந்திரப் படகுகளை வெடி வைத்து தகர்க்கின்றனர்.

## 5.7 பயனில்லாத மாற்றங்கள்

இயந்திரவியமும், தொழிலாளர் இயக்கங்களின் செயற்பாடுகளும் இம்மீனவச் சமுதாயத்தில் பல எதிர் விளைவுகளைத் தோற்றுவித்துள்ளன.

அறிவியல் வளர்ச்சியினால் பல தொழில்கள் இயந்திர மயமாக்கப்பட்டுள்ளன. இதன் விளைவு மீன்பிடிப்பதற்கு விசைப்படகுகளைப் பயன்படுத்துவது ஆகும். ஆதலால் மீனவர்களிடையே அச்சமும், அமைதியின்மையும், கலகங்களும் உருவாகியுள்ளன. ரால்தா சோறு போடுது, அதுக்கு ஆபத்து வருது. சர்க்காரில் ஆயிரமாயிரம் லாஞ்சிக்கு இந்தக் கரயில முன் பணம் கொடுத்திருக்காங்களாமே. மணப்பாட்டில் கடம் வாங்கி ரெடி மேட்ல வள்ளம் கொண்டாந்து தொழில் செய்யிறவங்களையே இது பாதிக்கி.

> **"போன றால் சீசனிலேயே ஏராளமான பேரு அள்ளிட்டு போக வந்தானுவ, கரசமொரசலா சண்டை கூட வந்திருச்சி. அதுனால சருக்கார் நமக்குப் போட்டியா விசைப்படகுகளக் கொண்டாரக் கூடாதுன்னு வள்ளக்கார மரக்காரங்கல்லாம் சங்கம் கூடி ஏற்பாடு செய்யப் போறதா சொல்லிட்டிருக்கானுவ"** [12]

என்னும் கூற்று இக்கருத்தினை அரண் செய்யும்.

> **"தொழிற்சங்கங்கள் உரிமைக்குப் போராடாமல் வாரவட்டி, முன்பணம் வாங்கித்தரும் அலுவலகங் காளாகச் செயல்பட்டுத் தொழிலாளரை மேலும் அடிமை ஆக்கும் செயலைச் சங்கமின்னு எதைச் சொல்லுறிம்? மீனவர் முன்னேற்ற சங்கமின்னு கரய்க்குக் கரை எவனாலும் சொல்லி இவெ தலைவர் இவெ செயலாளர்னு சொல்லுதா அத்தோட சரி. முன்னே தெறிப்புக் குத்தவைக்காகப் போராடின காலத்தில் ஏதோ நடத்தினம் பொறவு ஒண்ணுமில்ல"** [13]

என்ற கூற்றுகள் பெயரளவிற்குச் செயற்படும் இச்சங்களின் செயலின்மையைக் குறிக்கின்றது.

## 6. நிறைவு

- மீனவத்தொழிலாளிகளின் பணிச்சூழ்நிலை மற்றத் தொழில்களைவிட வேறுபட்டது. இத்தொழிலாளர்கள் ஒழுங்கமைக்கப்படாத தொழிலைச் சார்ந்தவர்கள். இவர்களின் வாழ்க்கை முறையானது, இயற்கையோடு போராடும் பெற்றியையுடையது. புயல், மழை, முதலியவை சூழும் பொழுது இவர்களுக்கு மாற்றுத் தொழில் என்பதே இல்லை. ஆதலால் இவர்களின் வாழ்விற்கு வறுமையே வாழ்க்கையாகி போன நிலை. இவர்களின் பணிக்களமும், சூழலும் உயிருக்கும், உழைப்பிற்கும் உறுதியற்றவை. அதனால் அங்கு அச்சம் என்பது இயல்பானது ஆகும். இந்த அச்ச உணர்வைச் சமயம் பயன்படுத்திக் கொள்கிறது. சமய நம்பிக்கைவேறு சமயத்தின் பேரால் சுரண்டப்படுகிறது.
- மீனவர்களின் போராட்டம் என்பது சமயத்திற்கு எதிரானது அல்ல. கிறிஸ்துநாதர் அறிவுறுத்திய எத்தனையோ அறங்கள் செயல்படுத்தப் படாமலிருக்க, துவிதெறிப்பு கொடுப்பதை நிறுத்துவது மட்டும் சமயத் துரோகமாகாது என்ற சிந்தனை உணர்வு இத்தொழிலாளர்களிடம் தம் உரிமைகளைப் பெறத் துணை செய்கின்றது.
- வட்டக்காரர் போன்றவர்களுக்கு அடிமையாய் இருக்கும் நிலை மாற வேண்டுமாயின், மீனவர்கள் தன்னுரிமையுடன், தனிச்சையாய் தொழில் செய்து வருவாய்ப் பெருக்கும் நிலை வேண்டும்.
- விசைப்படகுகள் தம் வருவாயைப் பாதிக்கும் என்ற அச்சநிலை மாறிப் புதுமைகளை எதிர்நோக்கும் துணிவு பெற வேண்டும்.
- தொழிலாளர்களின் அனைத்து சிக்கல்களுக்கும் வறுமையே அடிப்படைக் காரணமாக அமைகின்றது. இதற்கு அரசு வறுமையைப் போக்கும் வகையில் தம் திட்டங்களை உருவாக்கி, உயர்வு தாழ்வினைப் போக்கி, உடலுழைப்பிற்கு மதிப்பு தரும் வகையில் சட்டங்கள் மாற்றப்பட்ட வேண்டும்.

## குறிப்புகள்

1. ச. நளினி தேவி, இராஜம் கிருஷ்ணன் நாவல்களில் சமுதாய மாற்றம், ப. 177
2. வாழ்வியற்களஞ்சியம், தொகுதி ஏழு, ப. 202
3. ச. நளினி தேவி, இராஜம் கிருஷ்ணன் நாவல்களில் சமுதாய மாற்றம், ப. 178
4. இராஜம் கிருஷ்ணன், அலைவாய்க் கரையில் ப. 1
5. மேலது., ப. 12
6. மேலது., ப. 249
7. மேலது., ப. 7
8. மேலது., ப. 309
9. மேலது., ப. 230
10. மேலது., ப. 290
11. மேலது., ப. 309
12. மேலது., ப. 249
13. மேலது., ப. 250

## துணை நூல்கள்


இராஜம் கிருஷ்ணன் — அலைவாய்க் கரையில், பாரி புத்தகப் பண்ணை, சென்னை, 1978

நளினி தேவி, ச., — இராஜம் கிருஷ்ணன் நாவல்களில் சமுதாய மாற்றம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1978

வாழ்வியற் களஞ்சியம் தொகுதி ஏழு, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1991 ■

பரல்கள் 12, சனவரி 1999, பக். 83 – 98, ⓟ தமிழ் ஆய்வாளர் மன்றம், மதுரை

# ஊடக நிறுவனம் ஒரு சமூக நிறுவனம் *

இரா. கவிதா
தமிழியற் புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை 625 021, இந்தியா

*ஆய்வுச்சுருக்கம். சமூக நிறுவனங்கள் போன்றே ஊடக நிறுவனங்களும் செயற்படல். ஊடக நிறுவனங்கள், சமூகப் பண்பாட்டுக் காரணிகள் மீது தாக்கத்தை ஏற்படுத்துதல். சமூக அமைப்பினைப் பராமரித்தல், சமூகவயமாக்கல், சமூக மாற்றம் முதலானவற்றை ஊடக நிறுவனங்களும் நிகழ்த்துதல்.*

*கருச்சொற்கள். தகவல் தொடர்பியல்; ஊடக நிறுவனம்; சமூக நிறுவனம்; சமூகவயமாக்கல்; சமூக மாற்றம்.*

## 1. அறிமுகம்

அரிஸ்டாட்டில் குறிப்பிடுவது போல் மனிதன் ஒரு சமூக விலங்கு. மனிதன் தனது தேவைகளைப் பூர்த்திச் செய்து கொள்ளவும், மனித வாழ்க்கைத் தொடர்ந்து இயங்கவும் சமூகம் என்ற அமைப்பு தேவைப்படுகிறது. இவ்வமைப்பைச் சங்கிலிப்பின்னல் போல் பிணைத்து இறுக்கம் கொள்ளச் செய்வது மனிதர்கள் ஒருவருக்கொருவர் கொள்கின்ற தொடர்பும், அதன்மூலம் உருவாகும் உறவுகளுமாகும். சமூக அங்கத்தினர்கள் தங்களது தேவைகளைப் பூர்த்திச் செய்து கொள்ளுமுகமாக ஏற்படுத்திக் கொள்கிற இருவர்

* தமிழ் ஆய்வாளர் மன்ற புதன் வட்டக் கருத்தரங்கில் (அக்டோபர் 7, 1998) படிக்கப் பெற்றது

தொடர்பியல் வலைப்பின்னலின் இறுக்கமே சமூக ஒருங்கிணைப்பிற்கு அடித்தளமாகும். அதனால் மானிடத் தொடர்புகளின் வலைப்பின்னலே சமூகம் என்பது பொருந்தும். "சமூகம் என்பது, குறிப்பிட்ட உறவுகளுடன் ஒருங்கிணைக்கப்பட்ட தனி நபர்கள் இணைந்த குழு என்றும், இக்குழுவினரின் நடத்தைமுறை பிற குழுவினரிடமிருந்து இனம்பிரித்துக் காட்டப்படும்" என்றும் குறிப்பிடுகிறார் மோரீஸ் ஜின்ஸ் பெர்க்[1].

மனித உறவுகளின் பிணைப்பாகத் திகழும் சமூகமானது காலந்தோறும் படிப்படியாக வளர்ச்சிப்பெற்று வந்துள்ளது. இச்சமூக வளர்ச்சிக்கு அடிப்படைக் காரணமாகத் திகழ்வது குழு மற்றும் வெகுஜனத் தொடர்பியல் அமைப்புகளாகும். ஒரு சமூகம் பிற குழுக்களுடன் தொடர்பு ஏற்படுத்திக்கொள்ள வேண்டிய சூழலிலும், சமூகம் தொழில்மய சமூகமாக மாறியச்சூழலிலும் தொடர்பியலின் பங்கு முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்பட்டது. இதைத் தொடர்ந்து நிகழ்ந்த அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி, ஊடகப் பெருக்கத்திற்கு வித்திட்டது. இதன் காரணமாக இன்று அதீதமான ஊடகச்சூழல் காணப்படுகிறது. இத்தகைய ஊடகப் பெருக்கத்தினால், தனிமனித மற்றும் குழு நடத்தையில் மிகுதியானத் தாக்கத்தை நிறுவனமயமாக்கப்பட்ட ஊடகங்கள் ஏற்படுத்தியுள்ளன. ஊடகச் சூழல் வருவதற்கு முன்னர் வரையறுத்துக் கொண்ட தனி மனிதன் மற்றும் குழு நடத்தைக்கு உருவம் கொடுத்த குடும்பம் முதலான சமூக நிறுவனங்கள் போன்று ஊடகச்சூழலில் நிறுவனமயமாக்கப் பட்ட ஊடக நிறுவனங்களும் தன் பங்கைச் செலுத்துகின்றன எனலாம்.

ஊடகத்தின் அடிக்கட்டுமானம், தொழில்நுட்பம், பொருளாதாரம் மற்றும் ஊடகத்தை இயக்குவோரின் அதிகாரத்தைப் பொறுத்து அமைவதுடன், ஊடகத்தின் வழியாகத் தரப்படும் கருத்துக்கள், தகவல்கள், பிம்பங்கள் போன்றவைப் பண்பாட்டுத் தளங்களில் சில விளைவுகளை ஏற்படுத்துகின்றன எனலாம்.

சமூகமும், பண்பாடும் ஒருங்கிணைந்துச் செல்லும் இயல்புடையன. இவைக் குறித்த ரோசன்கிரனின் கருத்து இங்குக் குறிப்பிடத்தக்கது. "சமூக அமைப்பு பண்பாட்டு நிலையில் தாக்கத்தை ஏற்படுத்துவதுபோல் பண்பாடும் சமூக அமைப்பின் மீது தாக்கத்தை ஏற்படுத்துகிறது என்கிறார்."[2] இக்கருத்தின் அடிப்படையில் ஒவ்வொரு சமூகமும், அதனதன் பண்பாட்டிற்கேற்ப, சமூக உறுப்பினர்களை உருவாக்குவது அந்தந்த சமூக நிறுவனங்களின் பணியாகும் என்பதை

*அறியலாம். சமூக நிறுவனங்களை அதிகார மற்றும் ஆளுமையின் கருத்தியல் நிறுவனங்களாக ஏற்று கொள்ளும்போது, அவற்றைப் போன்று சமூகத்தைப் பாதிக்கக்கூடிய ஊடக நிறுவனங்களையும் பண்பாட்டு கருத்தியல் நிறுவனமாகக் கொள்ள இடமுண்டு. இதனால் ஒரு சமுதாயத்தில் நிறுவனமயமாக்கப்பட்ட ஊடக நிறுவனம், அச்சமூகப் பண்பாட்டு நிறுவனமாகத் திகழுமா என்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.*

## 2. சமூகப் பண்பாட்டு நிறுவனங்கள்

*சமுதாயத்தில் மிகக் கவனமாகத் திட்டமிட்டு சீரான சமூக இயக்கத்திற்காக நிறுவப்பட்டிருக்கிற நிறுவனங்களைச் சமூகவியலார் சமூக நிறுவனங்கள் என்று குறிப்பிடுவது போல், பண்பாட்டியலார் பண்பாட்டு நிறுவனங்கள் என்றும், கருத்தியலார் கருத்தியல் நிறுவனங்கள் என்றும் குறிப்பிடுகின்றனர். சமூக நிறுவனங்கள் குறித்த அறிஞர்களின் கருத்துக்கள் இங்கு தொகுத்துரைக்கப்படுகின்றன.*

- **"குடும்பம், கல்வி, அரசியல், பொருளாதாரம் மற்றும் சமயம் முதலானவை சமூக நிறுவனங்கள்"** [3] *என்பார் ஜோன்.எம்.ஷெபர்ட்.*
- *இச்சமூக நிறுவனங்களை இரண்டாகப் பகுத்துக்காண்கிறார் சங்கர் ராவ்.* **"சமயம், குடும்பம், திருமணம், சொத்து, அரசியலமைப்பு போன்றவை முதன்மை நிறுவனங்கள் என்றும், கல்வி, தேர்வு, நீதிமன்றம், சட்டசபை, நாடாளுமன்றச் செயல்பாடு, வணிகம் முதலானவை இரண்டாம்நிலை நிறுவனங்கள் என்றும் வகைப்படுத்துகிறார்."** [4]
- **அல்தூசர் "மேற்குறிப்பிட்ட சமூக நிறுவனங்களுடன் தொடர்பியலையும் இணைத்துக் கருத்தியல் நிறுவனங்கள்"** [5] *என்கிறார்.*
- **"குடும்பம், தேவாலயம், கல்வி நிலையம் மற்றும் ஊடக நிறுவனம் என்ற நான்கும் பண்பாட்டு நிறுவனங்களாகத் திகழ்கின்றன"** [6] *என்கிறார் கே.எஸ். சீதாராம்.*

*மேற்கண்ட அறிஞர்களின் கூற்றுப்படி, சமூக நிறுவனங்களுடன் தொடர்பியல் நிறுவனங்களையும் சமூகப் பண்பாட்டு நிறுவனமாகக் கருத இடமுண்டு. இந்நிறுவனங்கள் தனி மனித மற்றும் சமூக நடத்தை*

உருவாக்கத்தில் தங்கள் பங்கைச் செலுத்துவதோடு, சீரான மற்றும் முறையான சமூக இயக்கத்திற்கு அடிப்படையாகின்றன. இதனால் நிறுவனம் குறித்த அறிஞர்களின் கருத்துக்கள்[7] இங்கு ஒப்பு நோக்கப்படுகின்றன.

- **"ஒரு குறிப்பிட்டச் சமுதாயத்திலுள்ள தனிமனித மற்றும் குழுக்களுக்கிடையே அறிமுகப்படுத்தப்பட்டு, அவர்களது ஒப்புதலுடனான அங்கீகாரத்தையும் பெற்று, நிலைநாட்டப்பட்ட வாழ்க்கை நடைமுறைகளை ஆளுமை செய்கின்ற செயல்பாடுகளே நிறுவனம்"** என்பார் கிங்ஸ் பெர்க்.

- **"முறையான பண்புகளைக் கொண்ட குழுவினரிடையே நிலைநாட்டப்பட்ட செயல்பாடுகள், வடிவங்கள் மற்றும் நிபந்தனைகளைச் செயல்படுத்தும் அமைப்பினை நிறுவனங்கள்"** என்கின்றனர் மேக் இவர் மற்றும் பேஜ் (Maclver and Page).

- கிங்ஸ்லே டேவிஸ் என்பவர் **"ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட பணிகளைச் சுற்றிக் கட்டமைக்கப்பட்ட குடிவழக்குகள் (Folkways), வழக்கடிபாடுகள் (Mores), சமூக விதிகள் (Laws) ஆகியவற்றால் பின்னப்பட்ட அமைப்பே நிறுவனம்"** என்கிறார்.

- **"தனிமனித மற்றும் குழுத்தேவைகளை நிறைவு செய்வதற்குத் தேவைப்படுகின்ற சமூகக் கட்டமைப்பு மற்றும் இயந்திரங்கள் மூலமாக ஒருங்கிணைந்த மனிதச் சமூகம் நிறுவனமயமாதல், வழி நடத்துதல், பராமரித்தல் முதலிய பணிகளை உள்ளடக்கியது"** என்பார் ஹெச். இ. பர்னஸ் (H.E.Barnes),

- சி. ஏ. எல். உட். **"மனிதன் ஒருவரோடு ஒருவர் இணைந்து சீராக வாழ்வதற்கு ஏற்ற பழக்க வழக்கங்களை உருவாக்கிக் கொடுக்கிற அமைப்பு நிறுவனம் என்றும், இந்நிறுவனங்களுடைய இச்செயல்பாடு இனக்குழுவின் மேலான்மையாளர்களால் அனுமதிக்கப்பட்டு, முறைப்படுத்தப்பட்டு நிலைநாட்டப்படுகின்றன"** என்கிறார்.

மேற்கண்ட அறிஞர்களது கருத்துக்களின் அடிப்படையில் சமூக நிறுவனம் என்பதற்குரிய விளக்கத்தினை வரையறை செய்து கொள்வது ஆய்விற்கு இன்றியமையாதது.

நிறுவனம் என்பது ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில் தனிமனித மற்றும் குழுவினரின் வாழ்க்கைத் தேவைகளை நிறைவு செய்வதுடன், அச்சமூக அங்கத்தினர்களை வழிநடத்திச் செல்கிறது. மேலும் அச்சமூகப் பாரம்பரியங்களையும், குடிவழக்குகளையும் பராமரிப்பதோடு அச்சமூக அங்கத்தினர் அவற்றைத் தொடர்ந்து பின்பற்றுமாறு தூண்டுகிறது. இத்தூண்டல் தொடர்ந்து நிகழ்வதற்காக அச்சமூக மேலாண்மையாளர்களால் முறைப்படுத்தப்பட்ட அமைப்பு எனலாம்.

இங்ஙனம் ஒவ்வொரு சமூக நிறுவனமும் நிறுவனம் என்ற வரையறையைப் பெறுவதற்குக் கீழ்க்கண்ட நிபந்தனைகளை முன் வைக்கிறார் சங்கர் ராவ்[8].

- **"ஒரு சமூகத்திலுள்ள பெரும்பான்மையான உறுப்பினர்கள், ஒரு சமூக நெறிமுறையை ஏற்றுக் கொள்ளல்.**
- **அந்தந்த நெறிமுறையை அச்சமூக உறுப்பினர்கள் முறையாகவும், முனைப்புடனும் பின்பற்றல்.**
- **அவ்வாறு பின்பற்றப்படும் நெறிமுறை, அச்சமூக உறுப்பினர்களுக்குத் தேவைப்படுகின்ற சூழலில் வழிகாட்டியாக அமைதல்" என்பனவாகும்.**

இவ்வாறு பல்வேறு வகையான சமூக அலகுகள் இணைந்து நிறுவனமயமாகின்றன எனலாம்.

## 3. சமூக நிறுவனங்களின் செயல்பாடுகள்

ஏற்கனவே சமூகவியலார், பண்பாட்டியலாளரால் கண்டறியப்பட்ட சமூக நிறுவனங்களின் செயற்பாடுகளுடன், இன்றைய தகவல் யுகத்தில் வெகுஜன ஊடக நிறுவனங்களும் சமூக நிறுவனமாகத் திகழுமா என்ற வினாவிற்கு விடைகாண இயலும். அதனால் குடும்பம் முதலான சமூக நிறுவனங்களின் செயல்பாடுகள் பின்வருமாறு வகைப்படுத்தப்படுகின்றன.

- சந்ததி உருவாக்கல்
- சமூகவயமாக்கல்
- சமூக உணர்வைப் பராமரித்தல்
- சமூக அமைப்பைப் பராமரித்தல்
- சமூக மாற்றம்

சமூக நிறுவனங்களுள் குடும்பத்தின் தலையாயப் பணியாகத் திகழ்வது சந்ததி உருவாக்கல் ஆகும். இன்றைய விஞ்ஞான வளர்ச்சியின் பயனாக சோதனைக்குழாய் குழந்தை (test tube baby), மற்றும் குளோனிங் சாத்தியமானாலும் தொழில் நுட்பத்தோடு தொடர்புடைய ஊடக நிறுவனங்களால் உயிரியல் அடிப்படையிலான சந்ததி உருவாக்கத்தில் ஈடுபட இயலாது. அதனால் சமூக நிறுவனங்களின் பணியான சந்ததி உருவாக்கல் இவ்வாய்விற்கு அப்பாற்பட்ட நிலையில் இருக்கின்ற காரணத்தால் அதை விடுத்துப் பிறப்பணிகளுடன் ஊடக நிறுவனங்களின் செயற்பாடுகள் ஒப்பு நோக்கப்படுகின்றன.

### 3.1 சமூகவயமாக்கல்

குடும்பம் முதலான அனைத்துச் சமூக நிறுவனங்களில் அடிப்படைப் பணியாகத் திகழ்வது சமூகவயமாக்கல் ஆகும். ஒவ்வொரு சமூகமும், அச்சமூகத்திற்கேற்ப அச்சமூக உறுப்பினைச் சமூகவயமாக்கல் நிகழ்வின் மூலமே உருவாக்குகிறது. இதனால் பல்வேறு துறையினரும் இச்சமூகவயமாக்கல் நிகழ்வு குறித்த ஆய்வுகளை மேற்கொண்டுள்ளனர். இவ்வறிஞர்களின் ஆய்வு முடிவுகள் சமூகவயமாக்கல் என்ற நிகழ்வினைத் தெளிவாக வரையறைச் செய்து கொள்ள பயன்படுமாதலால் அவ்வரையறைகள் இங்கு உற்று நோக்கப்படுகின்றன.

- **"சமூகவயமாக்கல் என்பது ஒரு குழுவினரின் நெறிமுறைகள் தனிமனிதரால் கற்றுக் கொள்ளப்படும் நிகழ்வு" என்றுரைக்கும் டபிள்யு எப். ஆக்பெர்ன் கருத்தும், பீட்டர் வொர்ஸ்லியின் "சமூகக் குழுக்களிடமிருந்து பண்பாடு, விதிகள், பழக்கவழக்கங்களைக் கற்றுக் கொள்ளும் நிகழ்வு" எனும் கருத்தும் குறிப்பிடத்தக்கது [9]. அத்துடன் "சமூக அமைப்பில் தன்னை நிலைநிறுத்திக் கொள்வதற்காக நேரடியாகப் பயன்படக்கூடியது" எனும் வொயிட்டிங் கருத்தும் சிந்தனைக்குரியது.[10]**

- "சமுதாயத்தின் நெறிமுறைகள், அன்றாட வாழ்வில் பின்பற்ற வேண்டிய பழக்கவழக்கங்கள், பொருளாதாரச் செயற்பாடுகள், சமய வாழ்வில் ஆற்ற வேண்டிய கடமைகள் போன்ற எண்ணற்ற வகையில் குடும்பம் அளிக்கும் பயிற்சியைச் சமுதாயவயமாக்கம் அல்லது பண்பாட்டுவயமாக்கம்" என்ற பக்தவச்சல பாரதியின் கூற்றும்,[11] "குடும்பம், கல்வி, சமயம் மற்றும் ஒப்பார் குழுக்கள் மூலம் நிகழும் பண்பாட்டுவயமாக்கலின் மூலம் ஒருவரின் அடிப்படை ஆளுமை அமைப்பு உருவாவதுடன், பெரும்பான்மையான பண்பாடுகளில் குழந்தைகள் அதன் பண்பாட்டு முறைகளின் பெரும்பகுதியை ஓர் உறுப்பினராகப் பங்கேற்று உற்று நோக்குவதன் மூலம் கற்றுக் கொள்கின்றன" என்ற மீடு, பெனிடிக்ட், கார்டினர் போன்ற உளவியல்சார் மானிடவியல் அறிஞர்களின் கருத்தும், பிராய்டு, ஆட்லர் போன்ற உளப்பகுப்பாய்வாளர்கள், "ஒருவன் குடும்பத்தில் எவ்வாறு உருப்பெறுகின்றானோ அவ்வாறே சமூகத்திலும் நடந்து கொள்வான்" என்ற கருத்தும் இவண் ஒப்பு நோக்கத்தக்கது.[12]

மேற்கூறிய அறிஞர்களின் விரிவான கருத்துக்களின் அடிப்படையில் சமூகவயமாக்கல் என்பது, மேலாண்மையாளர்களால் வரையறுக்கப்பட்ட நிகழ்காலச் சமூக கட்டமைப்பினை அதாவது ஒரு குழுவினரின் நெறிமுறைகள், பண்பாடு, விதிகள், பழக்கவழக்கங்கள் மற்றும் அன்றாட வாழ்வில் ஆற்ற வேண்டிய கடமைகள் முதலானவை அச்சமூக நிறுவனங்கள் மூலம் சமூக அங்கத்தினர் அனைவருக்கும் பயிற்றுவிக்கும் நிகழ்வு என ஒருவாறு சுருக்கியுரைக்கலாம்.

தனி மனிதனைச் சமூகக் கட்டமைப்போடு இணைக்கும் சமூகவயமாக்கல் நிகழ்வு அதிகார மையங்களாகத் திகழும் குடும்பம், கல்வி, சமயம் முதலான சமூக நிறுவனங்களின் வழி நிகழ்த்தப்படுகிறது. "கல்வி நிறுவனங்கள் முன்னோர்கள் வரையறுத்திருக்கும் மதிப்பீடுகளைக் குழந்தைகள் முறையாகப் பெறுவதற்குப் பயிற்சி அளிக்கின்றன" என்ற ராபர்ட் டிரிபென் கருத்தும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.[13] இந்நிறுவனங்கள் அந்தந்த சமூகத்திற்கேற்ப அச்சமூகம் உறுப்பினர்களுக்கு சமூக நெறிமுறைகள்,

பண்பாடு, விதிகள், பழக்கவழக்கங்கள், அரசியல், பொருளாதாரச் செயல்பாடுகள் மற்றும் அன்றாடக் கடமைகள் முதலானவற்றைப் போதிக்கின்றன. அத்துடன் அச்சமூக உறுப்பினர்களுக்குப் பாதுகாப்பினையும், சமூக அடையாளத்தையும் வழங்குவதோடு, அச்சமூகத்தில் தொடர்ந்து இயங்க வேண்டிய நிலைப்பாடுகளையும், அச்சமூக மரபினையும் அச்சமூக அங்கத்தினர்கள் வகை மாதிரியாக (Role Model) இருந்து கற்பிக்கின்றனர்.

சான்றாக உலகம் முழுமைக்கும் பொதுவான சமூகவயமாக்கல் நிகழ்வாகத் திகழ்வது மொழிப் பயிற்சியாகும். ஒரு மனிதன் தன் சக மனிதனுடன் தொடர்புக் கொள்ளப் பயன்படும் பிரதான வழி மொழியாகும். அத்தகைய மொழிப் பயிற்சியினை இச்சமூக நிறுவனங்கள் அளிக்கின்றன.

"சமூக நிறுவனங்கள் நிகழ்த்தும் சமூகவயமாக்கல் நிகழ்வில் இன்று ஊடகங்களும் தங்கள் பங்கைச் செலுத்துகின்றன. தொழில் மற்றும் நகரமயமான பண்பாட்டில் முன்பு கோயில்கள், பள்ளிகள் மற்றும் கல்லூரிகள் செய்த பணியினை இன்று ஊடகங்கள் செய்கின்றன" என்கின்றார் கே.எஸ்.சீதாராம்.[14] "ஊடகங்களின் முக்கியப் பணிகளுள் ஒன்றாகச் சமூகவயமாக்கலைக் குறிப்பிடுகிறார்" சீன்மேக் பிரைட்.[15] சார்லஸ் ரைட் என்பவர் "தொடர்புச் சாதனத்தின் முக்கியச் செயல்பாடுகளைப் பற்றிக் குறிப்பிடுகையில் மரப்பாண்மையைச் செலுத்துதல் என்பதையும் காட்டுகிறார்."[16] அத்துடன் அது குறித்து விளக்கும்பொழுது, "ஏதேனும் ஒரு தகவலுடன் அச்சமூகப் பார்வையாளர்களின் பண்பாட்டு விழுமியங்களையும் இணைத்து தருவதே மரபாண்மைச் செலுத்துதல்" என்கிறார்.

"ஊடகம் சமூகவயமாக்கலின் முகவர் (Agent) என்று குறிப்பிடும் ரோசன்கிரன், அது சில சமயம் பெற்றோர் மற்றும் கல்வி நிறுவனங்களின் செயல்பாட்டில் இடையீடு செய்வதாகவும், பிறிதொரு சமயம் அவற்றின் பதிலியாகவும் செயல்படுகிறது" என்கிறார்[17] இவ்வாறு ஊடகம் பதிலியாகச் செயல்படுதவதற்குக் காரணம் குழந்தைகள் ஊடகத்துடன் தொடர்புக் கொள்ளும் நேரம் மிகுதியாக இருப்பதுதான் எனலாம். இதனை வில்பர் ஷ்ரம், லைல் (Lyle) பர்கர் (Parker) முதலியோர் வட அமெரிக்க குழந்தைகளிடம் நடத்திய ஆய்வு முடிவுகளும், ப்ரு (Furu) என்பவர் ஜப்பானியக் குழந்தைகளிடம் நடத்திய ஆய்வு முடிவுகளும் உறுதி செய்கின்றன.[18]

ஊடகம் நிகழ்த்தும் சமூகவயமாக்கல் நிகழ்வு, பெற்றோர் மற்றும் குழந்தைகளுக்கிடையிலான உறவுப்பிணைப்பு பால், வயது, இனம், ஊடக நுகர்வுத்திறன் முதலானவற்றைப் பொறுத்து அமைகிறது. குழந்தைகள், இளைஞர்கள் மற்றும் முதியவர்களிடம் ஊடகம் நிகழ்த்தும் சமூகவயமாக்கல் நிகழ்வு வேறுபடுகிறது எனலாம். குழந்தைகள் மற்றும் இளைஞர்களை விரைந்து தன் வசப்படுத்தும் ஊடகம், முதியவர்களிடத்தில் தன் செல்வாக்கை எளிதில் செலுத்த இயலுவதில்லை. ஏனெனில் அவர்கள் விரும்பாத நெறிமுறைகளைப் பின்பற்றுவதில்லை. அதே சமயம் தங்களுக்குத் தேவைப்படும் புதிய விதிகள், மற்றும் நெறிமுறைகளைத் தாங்களாகவே விரும்பி ஏற்கும் நிலையில் ஊடகம் முதியவர்களிடம் தன் செல்வாக்கைப் பதிக்கிறது.[19]

ஊடகம் நிகழ்த்தும் சமூகவயமாக்கல் திறன் வேறுபட்டாலும், தான் உருவாக்கும் மைய நீரோட்டப் பண்பாட்டிற்கேற்ப, தன் பார்வையாளர்களைக் கருத்தேற்றம் செய்கிறது எனும் பண்பாட்டு ஆய்வாளர்களின் கருத்து இங்கு ஒப்புநோக்கத்தக்கது.[20] மேலும், தொலைக்காட்சியின் உள்ளடக்க ஆய்வுகள் இதனை வலியுறுத்துகின்றன எனலாம். தொலைக்காட்சி விளம்பரங்கள் குழந்தைகளிடம் ஏற்படுத்தியத் தாக்கத்தினைக் குறித்து ஆய்வு செய்த அறிஞர்கள் (Atkin ward wakman) குழந்தைகள் விளம்பரங்கள் மூலம் உற்பத்திப் பொருட்கள் பற்றியத் தகவல்களை அறிந்து கொள்வதுடன், அதற்கேற்றாற் போன்ற நடத்தையும், மனப்பான்மையையும், உருவாக்கி கொள்கின்றனர் என குறிப்பிடுகின்றனர்[21]. அதே சமயம் காம்ஸ்டாக் (Comstock), சஃபி (Chaffee) போன்ற அறிஞர்கள் மேற்கொண்ட ஆய்வில் தொலைக்காட்சியில் சித்தரிக்கப்படும் வன்முறைகள், குழந்தைகளின் மூர்க்கக் குணத்தை (Agressive behaviour) வளர்க்க உதவுகிறது என்றும் குறிப்பிட்டுள்ளனர்.[22]

இவ்வாறு ஊடகங்கள் சமூகத்தோடு இணைந்து செல்வதற்கேற்ப சமூகவயமாக்கல் நிகழ்வில் ஈடுபடுவதுடன், எதிர் சமூகச் செயல்பாடுகளுக்கும் காரணமாகின்றன எனலாம்.

## 3.2 சமூக உணர்வைப் பராமரித்தல்

குடும்பத்தின் மற்றொரு முக்கியப் பணியாக சமூக உணர்வைப் பராமரித்தல் என்பதனைக் குறிப்பிடுகிறார் மேயர் நிம்காப் (Meyer Nimkoff). குடும்பத்தில் வாழும் ஒவ்வொரு உறுப்பினரும் தனித்துவத்துடன் திகழ்கின்றனர். அந்த தனித்துவத்தைக் குடும்பம் அங்கீகரிப்பதோடு, சமூகத்தில் தொடர்பு கொள்வதற்கேற்ப பொதுமை

மனப்பான்மையை உருவாக்குகிறது. இங்ஙனம் குடும்பம் என்ற அலகு சமூக இயக்கத்திற்குக் காரணமாகின்றது. மேலும் குடும்பத்தினர் எத்தகைய நிபந்தனையுமின்றி தங்கள் குழந்தைகள் மீது பொழியும் அன்பாலும், ஆரோக்கியமான சூழலில் குழந்தைகள் வளரும் காரணத்தினாலும் அக்குழந்தைகள் அச்சமூகத்திற்கேற்ற வகையில் விரைவாகவும், எளிதாகவும் வார்த்தெடுக்கப்படுகின்றனர். மாறாக ஒருவன் சமூகத்திற்கு எதிரான பாதையில் சென்றாலும், குடும்பத்தினரின், குடும்ப அங்கத்தினர்களிடையே நிலவும் உறவுகளைத் தக்க வைத்துக் கொள்வதன் மூலமும் தான் தனது எனது சமூகம் என்ற உணர்வுகள் பராமரிக்கப்படுகின்றன. 'எந்த மனிதன் நேசிக்கப்படவில்லையோ அவனை மகிழ்ச்சியுடன் காண்பதரிது' எனும் சங்கர் ராவின் கூற்றும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

- **"சமூக உணர்வுகள் பராமரிக்கப்படுவதற்கு இருவர் தொடர்பியலே அடிப்படையாக அமைகின்றன. ஆனால் இன்றைய ஊடகச் சூழலில் தொலைக்காட்சி பயன்படுத்தும் நேரம் அதிகரித்து, இருவர் தொடர்பியலுக்கான வாய்ப்புக்கள் குறைந்து விட்டன. இத்தகைய சூழலில், தொலைக்காட்சி இருவர் தொடர்பியல் நிகழ்விற்கு பதிலியாக செயல்படுவதுடன், அதன் உள்ளடக்கங்கள் சமூகப் பண்பாட்டைப் பிரதிபலிக்கக் கூடியதாக இருக்கின்றன." [23]**
- **டோர் (Door) என்பவர் "சுய அனுபவம், வாழ்க்கையை உற்றுநோக்கல், கட்டமைக்கப்பட்ட உணர்வுகளை உற்றுநோக்கல், ஞாபகப்படுத்துதல் என்பவைகளின் அடிப்படையில் சமூக உணர்வு பராமரிக்கப்படுகிறது என்கிறார்." [24]**

டோர் குறிப்பிடும் கட்டமைக்கப்பட்ட உணர்வுகளை உற்றுநோக்கல் என்பது ஊடகம் வழியாக பெறப்படும் உணர்வுகளாகும். இங்ஙனம் இருவர் தொடர்பியல் மூலம் நிகழ்ந்த உணர்வுப் பரிமாற்றங்கள் இன்று தொலைக்காட்சியில் பிரதிபலிக்கும் பிம்பங்களின், உணர்வுகளின் மூலம் பெறப்படுகின்றன. ஊடகங்களின் மூலம் தொடர்ந்து பெறப்படும் உணர்வுகள் மூலம் சமூக உணர்வு பராமரிக்கப்படுகிறது எனலாம்.

### 3.3 சமூக அமைப்பைப் பராமரித்தல்

மனிதனின் வாழ்க்கை அமைப்பு எளிய நிலையிலிருந்து சிக்கலான அமைப்பிற்குள் வந்திருக்கிறது எனலாம். மனிதன் தோன்றிய சுமார்

ஐம்பதாயிரம் ஆண்டுகளில் கிட்டதட்ட முதல் 45,000 ஆண்டுகளைப் புராதனச் சமூகம் என்கின்றனர். அதிகாரமற்ற, ஏற்றத்தாழ்வற்ற சமூகம் சொத்துடமை இல்லாத சமூகமாக இருந்தது. தொழில், நம்பிக்கைகள், கலாச்சார நடவடிக்கைகள் எல்லாவற்றிலும் சமத்துவம், பாலியல் ஒடுக்குமுறை, தந்தைவழிச் சமூக மதிப்பீடுகள் கிடையாது. அரசு இல்லை, குடும்பம் இல்லை, பிள்ளைகளுக்குத் தந்தை பெயர் இல்லை என்பது ஆதிகாலச் சமூக அமைப்பு. இத்தகைய எளிய வாழ்க்கை நிலையிலிருந்து மனிதச் சமூகம் சிக்கல் நிறைந்த அமைப்பிற்குள் வருகிறது. தொழில்நுட்ப வளர்ச்சியின் காரணமக அரசு, தனிச்சொத்து, குடும்பம் என்ற நிறுவன அமைப்புக்கள் உருவாக்கப்படுகின்றன. இவ்வமைப்பினால் வர்க்க வேறுபாடுகளும், வாரிசுரிமையும் உருவாகின்றன.

இவ்வாறு முறைப்படுத்தப்பட்ட சமூக அமைப்பைக் குறித்து, பல்வேறு அறிஞர்கள் பல்வேறு விளக்கங்களைக் குறிப்பிட்டுள்ளனர். அவற்றை உற்றுநோக்குவதன் மூலம் சமூக அமைப்பைப் புரிந்து கொள்ள இயலும்.

- **"சமூக அமைப்பு என்பது நிறுவனங்களால் கட்டுப்படுத்தப்பட்ட அல்லது வரையறுக்கப்பட்ட உறவு நிலைகளின் வரிசைக்கிரமம்" என்கிறார் ராட்கிளிப் பிரௌவுன் (Red Cliffe).**
- **மோரீஸ் ஜின்ஸ் பெர்க் "சமூகத்தால் உருவாக்கப்பட்ட முரண்பட்ட பிரதான குழுவினரையும், நிறுவனங்களையும் உள்ளடக்கியது" என்று சுட்டுகிறார்.**
- **ஆக்பெர்ன் மற்றும் நிம்காப் (Meyer Nimkoff) "தனி நபர்கள் இணைந்த குழுவினரின் அமைப்பே சமூக அமைப்பு" என்று கருத்துரைக்கின்றனர்[25]**
- **இங்க்லெஸ் (Inkeles) என்பவர், "சமூக அமைப்பானது குறிப்பிட்ட இடத்தில் வாழும் மக்கள் தொகை, பொருளாதாரம், வருவாய் பகிர்வு, அரசியல் அல்லது அதிகார அமைப்பு, மற்றும் நிறுவன மையப்படுத்தப்பட்ட மதிப்பீடுகள் போன்றவற்றை உள்ளடக்கியது"[26] என்கிறார்.**

மேற்கூறிய அறிஞர்களின் கருத்துக்களின் அடிப்படையில் சமூக அமைப்பு என்பது அச்சமூகத்தின் மக்கள்தொகை, பிரதான குழுவினரின் பண்பாடு, பொருளாதாரம், வருவாய், அரசியல் அல்லது அதிகார அமைப்பு, நிறுவனமயப்படுத்தப்பட்ட மதிப்பீடுகள் மற்றும் வரையறுக்கப்பட்ட உறவுநிலைகளின் வரிசைக்கிரமம் முதலானவற்றை உள்ளடக்கியது என வரையறுக்கலாம்.

இத்தகைய சமூக அமைப்பைத் தொடர்ந்து பராமரிப்பதற்கு, இன்று ஊடக நிறுவனங்கள் உறுதுணைச் செய்கின்றன எனலாம். வெகுஜன ஊடகங்களின் பண்பே தனி மனிதப் பொறுப்பினையும் மழுங்கடிக்கச் செய்வதாகும். ஆனால் ஊடகம் உருவாக்கும் உள்ளடக்கங்கள் மிகவும் ஆழமாக ஊடுருவிச்சென்று சமூக முறைமைகளைத் தகர்த்து எறிந்து விடுகின்றன. அத்துடன் ஊடகம் உலகளாவியப் பண்பாட்டை உருவாக்க முற்படும்பொழுது, அச்சமூகத்தின்பால் பற்றுதல் கொண்டோர் எதிர்த்த தொடர்பியல் மரபுகளை உருவாக்குகின்றனர். இதனால் ஊடகங்களே தன்னின உயர்வு வாதத்திற்கும் (Ethno centrism) இடமளிக்கின்றன. இத்தகைய தன்னின உயர்வு வாதம் மூலம் சமூக அமைப்பு தொடர்ந்து பராமரிக்கப்படுகிறது எனலாம்.

### 3.4 சமூக மாற்றம்

சமூகத்தில் மாற்றம் என்பது தவிர்க்க இயலாதது. மாற்றமே உலகின் நியதியாகும். மாற்றமானது திடீரென சமூகத்தில் நிகழ்ந்து விடுவதில்லை. இந்நிகழ்வு தொடர்ந்து நிகழக்கூடிய நிகழ்வாகும். கிரேக்கத் தத்துவ அறிஞர் ஹெராக்கிறிட்டஸ் ஒரு மனிதன் ஆற்றில் இருமுறை ஒரே மாதிரியாக அடியெடுத்து வைக்கமாட்டான் என்று மாற்றம் குறித்துக் குறிப்பிட்டுள்ளார்.

சமூகமானது சமூக உறவுகளின் வலைப்பின்னலாகும். ஆகையால் சமூக மாற்றம் என்பது உறவு நிலைகளில் ஏற்படும் மாற்றமாகும். கிங்ஸ்லே டேவிஸ்,

- **"சமூக மாற்றம் என்பது, சமூக அமைப்புக்கள் அல்லது நிறுவனங்கள் மற்றும் செயல்பாட்டில் ஏற்படும் மாற்றம்"** என்கிறார்.
- **''மனித சமூகத்தில் புதிய வரவுகளும், பழமைக்கு மாற்றாகவோ அல்லது செப்பம் செய்யப்படுவதோ சமூக மாற்றமாகும்" என்கிறார் மஜீம்தார் (H.J.Majundar).**
- **மாற்றமானது பல நிலைகளில் நிகழ்கிறது என்கின்றனர் மேக் இவர் மற்றும் பேஜ். "மக்கள் உருவாக்கிய வாழ்க்கை நிபந்தனைகளிலோ, மக்களின் நடத்தை மற்றும் நம்பிக்கைகளிலோ உயிரியல் மற்றும் இயற்பியல் அமைப்பிலோ நிகழலாம் என்கின்றனர். சமூகத்தில் ஏற்படுகின்ற மாற்றங்களுடன் பண்பாட்டு நிலைகளில் ஏற்படும் மாற்றங்களும் சமூக மாற்றத்திற்கு காரணமாகின்றன"** [27] எனலாம்.

மேற்கண்ட அறிஞர்களின் கருத்துக்களின் அடிப்படையில் சமூக மாற்றம் இருநிலைகளில் நிகழ்கிறது எனலாம். ஒன்று சமூக உறுப்பினர்களுக்கிடையே நிகழும் நடத்தை மற்றும் நம்பிக்கையில் ஏற்படும் மாறுதல். மற்றொன்று அச்சமூகத்திற்கு வெளியே இருந்து வரும் புதிய பொருள் அல்லது பண்பாட்டு விழுமியம் அச்சமூக அங்கத்தினரால் ஏற்றுக் கொள்ளப்படும்பொழுது நிகழும் மாறுதல் என்பனவாகும்.

மனித அறிவு வளர்ச்சியின் பயனாக புதிய புதிய அறிவியல் தொழில் நுட்பங்கள் கண்டறியப்படுகின்றன. கண்டறியப்படுகின்ற தொழில் நுட்பங்கள் மானிட வளர்ச்சிக்குப் பயன்படுத்தப்படுகின்றன. இதனால் மானிட வளர்ச்சியும், தொழில் நுட்பங்களை அடிப்படையாகக் கொண்ட ஊடக வளர்ச்சியும் பரஸ்பரத் தொடர்புடையன. ஊடகங்களின் இத்தகையத் தொடர்பு சமூக மாற்றத்திற்கும் காரணமாகின்றன எனலாம்.

> **"ஊடகச் செயல்பாட்டைப் பற்றிக் குறிப்பிடும் சார்லஸ் ரைட் சமூக மாற்றத்தையும் முக்கியமானச் செயல்பாடாகக் குறிப்பிடுகிறார்."** [28]

ஆளும் வர்க்கத்தினர் மற்றும் மக்களுக்கிடையே நிலவும் உறவு நிலைகள் சமூக மாற்றத்திற்குக் காரணமாகின்றன. காரணம் ஊடகங்கள் தொழில்நுட்பம் மற்றும் உள்ளடக்கம் வாயிலாக முரண்பட்ட கருத்துக்களை இரு பிரிவினரிடையே உருவாக்கும்பொழுது சமூக மாற்றம் நிகழ்கிறது எனலாம். மேலும் ஊடகங்கள் தனி மனிதனிடத்தில் நடத்தை, நம்பிக்கைகள் போன்றவற்றில் மாற்றங்கள் ஏற்படுத்துவதன் மூலமும் சமூக மாற்றத்திற்கு வித்திடுகின்றன. மேலும் மரபு சார்ந்த, வளர்ச்சியடையாத நாடுகளில் புதுமையைப் புகுத்தவும், மக்களின் வாழ்க்கை முறைகளில் மாற்றங்கள் நிகழ்த்தவும் ஊடகங்கள் பயன்படுத்தப்படுகின்றன. அத்துடன் உலகை ஒரு கிராமமாக்கும் ஊடகங்கள் இன்று ஒற்றைப் பண்பாடு உருவாக வழி கோலுவதால் ஊடக உள்ளடக்கங்கள் உலகளாவிய சமூக மாற்றத்திற்கு வித்திடுகின்றன எனலாம்.

## 4. நிறைவு

- ❖ அதிகாரம் மற்றும் ஆளுமையின் கருத்தியல் நிறுவனங்களாகத் திகழும் சமூக நிறுவனங்கள் போன்று ஊடக நிறுவனங்களும் அதிகார அமைப்புக்களாகச் செயல்படுகின்றன.

- ❖ குடும்பம், கல்வி, சமயம், அரசியலமைப்பு, பொருளாதாரம் முதலானவற்றுடன் ஊடக நிறுவனத்தையும் கருத்தியல் நிறுவனமாகச் சுட்டுகிறார் அல்தூசர்.

- ❖ நிறுவனமயப்படுத்தப்பட்ட சமூக நிறுவனங்களின் செயல்பாடுகளாக சந்ததி உருவாக்கல், சமூகமயமாக்கல், சமூக உணர்வைப் பராமரித்தல், சமூக மாற்றம் என்பவைகள் சுட்டப்படுகின்றன.

- ❖ அனைத்து சமூக நிறுவனங்களின் அடிப்படை பணியாகத் திகழும் சமூகவயமாக்கல் என்பது ஒரு குறிப்பிட்ட சமூகத்தினரின் முன்னேற்றங்கள், பண்பாடு, பழக்கவழக்கங்கள் மற்றும் அன்றாட வாழ்வில் ஆற்ற வேண்டிய கடமைகள் முதலானவை அச்சமூக நிறுவனங்கள் மூலம் சமூக அங்கத்தினருக்குப் பயிற்றுவிக்கும் நிகழ்வாக அமைகிறது.

- ❖ சமூகத்திற்கேற்றவாறு சமூகவயமாக்கல் நிகழ்வில் ஈடுபடும் ஊடகங்கள், எதிர் சமூக நடத்தைக்கும் காரணமாகின்றன. இருவர் தொடர்பியல் வழி நிகழ்ந்த சமூக உணர்வு பரிமாற்றங்கள் இன்று ஊடகங்கள் வழி நிகழ்கின்றன.

- ❖ தன்னின உயர்வுவாதம் மூலம் ஊடகங்களின் வழி சமூக அமைப்பு பராமரிக்கப்படுகிறது. அத்துடன் உலகளாவிய சமூக மாற்றத்திற்கும் வழிகோலுகின்றது.

- ❖ மேற்கண்ட ஆய்வு முடிவுகளின்படி சமூக நிறுவனங்கள் ஆற்றுகின்ற பணியினை ஊடக நிறுவனம் நிகழ்த்துவதால் ஊடக நிறுவனத்தை ஒரு சமூக நிறுவனம் என்றும் கூறலாம்.

## குறிப்புகள்


1. Sankar Rao, Sociology, P. 95
2. Devis Mcquail, Mass Communication Theory, P. 62
3. Jon. M.Sheperad, Sociology, P. 240
4. Sankar Rao, Sociology, P. 107
5. Diane Macdonell, Theories of Discourse, P.17
6. K.S.Sitaram , Cultural and Communication, P. 65
7. Sankar Rao, Sociology, P. 106
8. Ibid., PP. 514, 515
9. Ibid., P. 241
10. Hand book of Communication Science, P. 420
11 பக்தவச்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 342
12. மேலது., ப. 343
13. Jon M.Shepered, Sociology, P. 298
14. K.S. Sitaram, Cultural and Communication, P. 78
15. Many voices one wolrd, P. 14
16. K.S. Sitaram, Cultural and Communication, P. 78
17. Hand book of Communication Science, P. 42
18. Hand book of Communication Science, P. 195
19. Hand book of Communication Science, P. 78
20. Communication Research, P. 79
21. Hand book of Communication Science, P. 427
22. Ibid., P. 428
23. T. Manonmani , Readings in Communication, P. 29
24. Hand book of Communication Science, P. 424
25. Sankar Rao, Sociology, P. 548
26. Hand book of Communication Science, P. 420
27. Sankar Rao, Sociology, P. 548
28. K.S. Sitaram, Cultural and Communication, P. 78

## துணை நூல்கள்

*பக்தவச்சல பாரதி, நீ.,* *பண்பாட்டு மானிடவியல், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1990*

*மாற்றங்களைத் தேடி, நிறப்பிரிகைத் தொகுப்பு, விடியல் பதிப்பகம், கோவை, 1992*

Sitaram K.S. Cultural and communication, Associated Printers, Mysore, 1991

Denis Mcquail Mass Communication Theory, Sage Publication, New Delhi, 1994

Diane Macdonell Theories of Discourse, Basil Balck Well Ltd., 1989

Manonmani T. Reading in Communication, Rama Publishing House, Madurai, 1997

Shepherd Jon.M. Sociology, University of Kentucky, West Publishing Company, Minnesta, 1981 ■

பரல்கள் 12, சனவரி 1999, பக். 103 – 120, (ப) தமிழ் ஆய்வாளர் மன்றம், மதுரை

# ஈகையும் ஜக்காத்தும் *

சை. வஹிதாகௌசியா
திருக்குறள் ஆய்வகம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை 625 021, இந்தியா

**ஆய்வுச்சுருக்கம்.** திருக்குறள்–ஈகை, திருக்குர்ஆன்–ஜக்காத் ஓர் ஒப்பாய்வு. ஈகை–விளக்கம்; சிறப்பு, ஜக்காத்–விளக்கம்; சிறப்பு. ஒப்புரவாளர்கள் தகுதி அறிந்து உதவுதல், ஜக்காத் பெறுபவர்கள், ஏற்ற பொருள்கள், பயன். ஈகை – ஜக்காத் ஒற்றுமை; வேற்றுமை.

**கருச்சொற்கள்.** ஒப்பிலக்கியம்; திருக்குறள்; திருக்குர்ஆன்; ஈகை; ஜக்காத்.

## 1. அறிமுகம்

அறம் என்பது வாழ்க்கை முறையினை வகுத்துக் கூறுவது ஆகும். இது நன்மை, நல்வினை, தூய்மை, கடமை, கட்டளை, புண்ணியம், ஒழுக்கம் என்ற பல்வேறு பொருள்களைக் கொண்டுள்ளது. அறவாழ்வு அமைப்பு முறை என்பது காலத்திற்குக் காலம் மாறுபடக் கூடியது அல்ல. அறவாழ்வு அமைப்பில் இடம்பெறும் அனைத்துப் பண்புகளும் எந்தச் சமூகத்திற்கும் ஏற்புடையதாக இருக்க வேண்டும். இந்த அறவாழ்வு முறையே மனிதனை மனிதனாக வாழ வழி வகுக்கின்றது. இத்தகைய அறவாழ்வு முறைக்கு அதிகமான

* தமிழ் ஆய்வாளர் மன்ற புதன் வட்டக் கருத்தரங்கில் (அக்டோபர் 21, 1998) படிக்கப் பெற்றது

முக்கியத்துவத்தை அளித்து திருக்குறளும், திருக்குர்ஆனும் அறம் தொடர்பான கருத்துக்கள் பலவற்றை மிக விரிவாக வகுத்துரைக்கின்றன. திருக்குறளில் அறம் என்பது இல்லறம், துறவறம் என்று இரண்டு நெறிகளாக வலியுறுத்தப்படுகிறது. இல்லறம் என்பது மனிதன் இல்வாழ்க்கையில் கடைபிடிக்க வேண்டிய நெறிமுறைகளையும், துறவறம் என்பது துறவு வாழ்க்கையில் ஒருவன் பின்பற்றக்கூடிய நெறிமுறைகளையும் வகுத்துத் தருகின்றன. இல்வாழ்க்கை மேற்கொள்பவனுக்கு ஈகை என்பது ஒரு கடமையாக, வள்ளுவரால் வகுத்துத் தரப்பட்டுள்ளது. மேலும் நல்குரவு என்னும் அதிகாரத்தின் வழியும் வள்ளுவர் ஈகையை வலியுறுத்துகிறார். இஸ்லாம் சமயத்தில் ஐந்து அடிப்படைத் தூண்களுள் ஒன்றாக ஜக்காத் கூறப்படுகிறது. ஈகைக்கு ஒப்பாக ஜக்காத் என்பது குறிப்பிடப்படுகின்றது. இக்கட்டுரையில் குறளில் காணப்படும் ஈகையும், இஸ்லாம் வலியுறுத்தும் ஜக்காத்தையும் ஒப்பிட்டு ஆராயலாம்.

## 2. ஈகை, ஜக்காத் விளக்கம்

திருக்குறளில் வள்ளுவர் ஒப்புரவு, ஈகை என்னும் அதிகாரங்களின் வழி ஒருவருக்கு ஒருவர் உதவி செய்து வாழும் வாழ்க்கையைப் பற்றியும் வறியவர்களுக்குப் பொருள்களைக் கொடுப்பது பற்றியும் கூறுகின்றார்.

- **"ஈகை என்பதற்கு கொடை"**[1] என்று பொருள் தருகின்றது கழகத் தமிழ் அகராதி.
- **"ஈகை என்பதற்கு கொடை"**[2] என்று கூறுகிறது தமிழ்மொழி அகராதி.
- **"ஈகை என்பது கொடை"**[3] என்று பொருள் தருகின்றது. தமிழ்ப் பேரகராதி.
- **"ஒப்புரவு என்பது உலக ஒழுக்கம், சமம், ஒற்றுமை"**[4] என்று கூறுகிறது கழகத் தமிழ் அகராதி.
- **"ஒப்புரவு என்பதற்கு ஒற்றுமை உபகாரம் சமம்"**[5] என்று பொருள் தருகிறது தமிழ் மொழி அகராதி.
- **"ஒற்றுமை (union), சமம் (evenness)"**[6] என்று பொருள் கூறுகின்றது தமிழ்ப் பேரகராதி.
- **"ஒப்புரவு என்பதற்கு உபகாரம் சமம்"**[7] என்று இலக்கியச் சொல்லகராதி பொருள் தருகின்றது.

இல்லற வாழ்வில் ஈடுபடுகின்ற மனிதன் சில கடமைகளைச் சீரிய முறையில் நிறைவேற்ற வேண்டும். அவற்றுள் மிகவும் முக்கியமானது ஈகை ஆகும். மனித வாழ்வில் மிக இன்றியமையாதது செல்வம் ஆகும். இந்தச் செல்வம் அனைவரிடமும் இருப்பதில்லை. சமூகத்தில் ஏழைப் பணக்காரர் என்ற ஏற்றத்தாழ்வுகள் உள்ளன. இதனைப் போக்க வேண்டும் என்றால் செல்வந்தர்கள் தன்னிடம் உள்ள பொருள்களைப் பொருள் இல்லாதவர்களுக்குக் கொடுக்க வேண்டும். இதனையே வள்ளுவர்,

**"வறியார்க்கொன் றீவதே ஈகைமற் றெல்லாங்**
**குறியெதிர்ப்பை நீர துடைத்து" (221)**

என்னும் குறளின் மூலம் விளக்குகின்றார்.

பொருள் என்பது மனிதனுக்கு அடிப்படையானதும், மிக அவசியமானதும் ஆகும் என்பதை இஸ்லாம் ஏற்றுக் கொள்கின்றது. இந்தப் பொருள் குறிப்பிட்டவர்களிடம் மட்டும் சேர்ந்து அவர்களுக்குப் பயனளிப்பதை தவிர்க்கும் வகையில், இஸ்லாம் எடுத்துக் கூறும் விதிமுறையே 'ஜக்காத்' ஆகும். இஸ்லாம் வலியுறுத்தும் ஐந்து கடமைகளை ஏக இறைவழிப்பாட்டை மெய்ப்பிக்கும் கலிமா, ஐந்து நேரத்தொழுகை, நோன்பு, ஜக்காத், ஹஜ் என்னும் புனிதப்பயணம் என்பனவற்றுள் நான்காவது கட்டாயக் கடமையாக 'ஜக்காத்' அமைந்துள்ளது. இதனைப் பொருளியல் சார்ந்த சமத்துவ அமைப்பிற்கான விதிமுறையாக கட்டாயமாக்கி உள்ளது இஸ்லாம். ஜக்காத் ஒழுங்காகக் கடைப்பிடித்தால் சமூகத்தில் மக்களிடையே அமைதியும், வளமையும் ஏற்பட வாய்ப்பு உண்டாகும். எனவே இது பொதுவுடைமை சமூகத்தினை நோக்கமாகக் கொண்டது எனலாம்.

'ஜக்காத்' என்பது 'தூய்மைப்படுத்துதல்', 'சுத்தப்படுத்துதல்' என்று பொருள்படும். ஒருவன் தனது செல்வத்திலிருந்து, ஒரு பகுதியைத் தனது தேவைகளைப் பூர்த்திச் செய்து கொள்ள முடியாத, பொருளாதார வசதியற்ற ஏழைகளுக்குக் கொடுப்பது ஜக்காத் எனப்படும். திருக்குர்ஆன் ஜக்காத் என்பதற்கு உண்மை, தருமம், வளர்ச்சி நிலை என்றுக் குறிக்கிறது. எனவே,

*"திருக்குர்ஆன் கருத்துப்படி ஒரு மனிதன் தாம் வாழ்ந்து கொண்டிருக்கும் மனித சமூகத்திற்கு உண்மையானவராக இருக்க வேண்டுமானால் அவர் வாழும் சமூகத்தில் உள்ள வறியோருக்கும், பொருள் தேவையுள்ளோருக்கும் தருமம் செய்பவராக இருக்க வேண்டும் என்ற உயர்ந்த கருத்தினடிப்படையில் ஜக்காத் ஒவ்வொருவருக்கும் கட்டாயக் கடமையாக்கப்பட்டுள்ளது. இன்னும் கூறுவோமானால் பொதுவுடைமைச் சமூக அமைப்பை நோக்கி அடியெடுத்துக் கொடுக்கும் முதல் நிலையாக இஸ்லாம் எடுத்துக் கூறும் இக்கடமையைச் சுட்டலாம்."*[8]

இறைவன் மனிதனுக்கு, அவனது தேவைக்கு அதிகமாகச் செல்வத்தைக் கொடுக்கின்றான். அதற்கு அவன் இறைவனுக்கு நன்றி செலுத்தும் விதமாக தனது தேவைக்குப்போக எஞ்சியுள்ள பொருளிலிருந்து ஜக்காத் கொடுப்பது கடமையாகும். ஜக்காத் செலுத்தவில்லை என்றால் மனிதன் நன்றி இல்லாதவனாய், தன்னலக்காரனாய், பொருளாசை உடையவனாய் மாறிவிடுகிறான். இதனால் அவனது பொருளும் தூய்மையற்றதாகி விடும் என்று இஸ்லாம் கூறுகின்றது. இதனைத் திருமறை,

*"நீங்கள் தொழுகையைக் கடைப்பிடித்து தொழுகுங்கள். ஜக்காத்தும் (மார்க்கவரி) கொடுத்து வாருங்கள். தொழுகையில் (ஒன்று சேர்ந்து குனிந்து) ரூகூவு செய்பவர்களுடன் (குனிந்து) ரூகூவு செய்யுங்கள்" (குர்ஆன் 2:43)*

என்று கூறுகிறது. இவை தொழுகைக்கு அடுத்த நிலையில் ஜக்காத்தினைக் கட்டாயக் கடமையாக்கி உள்ளது இஸ்லாம். மேலும்,

*"(நபியே) உமது பொருளில் பந்துக்களுக்குப் பாத்தியப்பட்டதை அவர்களுக்கு கொடு(த்துவாரு)ம் அவ்வாறே ஏழைக்கும், வழிப்போக்கர்களுக்கும் (அவர்களுடைய பாத்தியதையைக் கொடுத்து வாரும்) எவர்கள் அல்லாஹ்வுடைய திருப்பொருத்தை விரும்புகின்றார்களோ அவர்களுக்கு இதுவே மிக்க நன்றாகும் இத்தகையோர் தாம் சித்தி (வெற்றி) பெறக் கூடியவர்கள்" (3038)*

என்கிறது திருமறை.

இறையச்சம் உடையவர்கள், இறைவனை அடைய, விரும்புகின்றவர்கள் ஏழைகளுக்கும், வழிப்போக்கர்களுக்கும் உதவி செய்ய வேண்டும் என்று வலியுறுத்துகின்றது. மேலும் இஸ்லாமிய இறைத்தூதர்களின் காலத்திலும் ஜக்காத் என்பது காணப்படுகின்றது. இறைத்தூதர்களையும், அவர்களது கடமைகள் பற்றியும் திருமறை கூறும்போது,

> **''நாம் அவர்களை நம்முடைய கட்டளைப்படி வழிகாட்டுகின்ற தலைவர்களாகத் திகழச் செய்தோம். மேலும், இஸ்லாமிய இறைத்தூதர்களின் காலத்திலும் ஜக்காத் என்பது காணப்படுகின்றது. இறைத் தூதர்களையும், அவர்களது கடமைகள் பற்றியும் திருமறை கூறும்போது, மேலும் அவர்கள் நற்செயல் புரியும்படியும், தொழுகையை நிலைநாட்டும்படியும், ஜக்காத் கொடுத்து வரும்படியும் வஹியின் மூலம் அவர்களுக்கு நாம் வழி காட்டினோம். அவர்கள் நமக்கே அடிபணிபவர்களாய்த் திகழ்ந்தார்கள்" (273)**

என்று கூறுவதில் இருந்து இஸ்லாம் சமயம் முழுமைத்துவம் அடைவதற்கு முன்பே அதாவது இஸ்லாம் சமயத்தின் தொடக்கத்திலேயே ஜக்காத்தைக் கட்டாயக் கடமையாக்கி உள்ளது என்பதை அறியலாம்.

இவ்வாறு கடமையாக்கப்பட்டுள்ள ஜக்காத்தைத் தவிர பிற தர்மங்களையும் அதாவது ஸதகா, ஃபித்ரா, உஷ்ர் போன்ற தர்மங்களையும் இஸ்லாம் வலியுறுத்துகின்றது. ஸதகாவைப் பற்றிப் பெருமானார் (ஸல்) அவர்கள்,

> **"நிச்சயமாக அல்லாஹ் மக்களின் மீது ஸதகாவை (தான தர்மத்தை) கடமையாக்கியுள்ளான். அது அவர்களுக்குள் பொருள் வசதி படைத்தவர்களிடம் வழங்கப்பட்டு ஏழ்மையுள்ளவர்களிடம் திருப்பித் தரப்படும்" (புகாரி முஸ்லிம்)**

என்று கூறியுள்ளார்.

ஒரு முஸ்லிமிடம் ஒரு வருடத்திற்கு குறிப்பிட்ட அளவுக்கு மேல் பணம் இருந்தால், அந்தப் பணத்தில் நாற்பதில் ஒரு பங்கு என்ற விகிதத்தில் இறைவழியில் செலவழிப்பது கடமையாகும். இத்தகைய கடமையான தர்மம் ஜக்காத் எனப்படும்.

> "ஸதகா என்பது விரும்பி வழங்கும் ஏனைய தானதர்மம் ஆகும்."[9]

அது போன்றே நோன்பு காலங்களிலும் தானதர்மம் கொடுக்கப்படும்.

> "நோன்புப் பெருநாள் காலையில் நோன்பை முன்னிட்டுக் கட்டாயமாக வழங்க வேண்டுமென வலியுறுத்தப் பட்டுள்ள தர்மம் ஃபித்ரா எனப்படும்."[10]

ஃபித்ராவைப் பற்றி பெருமானார் (ஸல்) அவர்கள், ஃபித்ராவை உம்மத்தார் மீது கடமை (வாஜிபு) ஆக்கியுள்ளார்கள். ஏனென்றால், அது ஒரு நோன்பாளியிடமிருந்து வெளியாகும் வீணான – மானக்கேடான செயல் போன்ற குறைகளைக் களைவதற்கென பரிகாரம் (கஃப்பாரா) ஆகும் (ஆபூதாவுத்) என்று கூறுகின்றார்.

மேலும் இயற்கையிலே விளைந்த பொருள்களையும் உழைத்து அதாவது மனிதன் தனது சொந்த உழைப்பில் இருந்து விளைந்த பொருள்களைத் தானமாகத் தருவது 'உஷ்ர்' ஆகும். அதாவது

> "நீர்ப்பாசனமோ, பராமரிப்போ இன்றி விளைந்த பயிர்கள், பழங்கள் ஆகியவற்றிலிருந்து கட்டாயமாகச் செய்யப்படும் தர்மம் 'உஷ்ர்' எனப்படும்."[11]

உஷ்ர் என்பது பற்றி பெருமானார் (ஸல்) அவர்கள்,

> "மழை நீராலும், நீரூற்றுக்களாலும் நீர் பாய்ச்சப்படும் பூமியின் விளைப் பொருட்களில் பத்திலொரு பங்கு (உஷ்ர்) ஜகாத் நிறைவேற்றப்பட வேண்டும். உழைத்துத் தண்ணீர் பாய்ச்சப்பட்ட பூமிகளில் இருபதில் ஒரு பங்கு ஜக்காத் நிறைவேற்றப்பட வேண்டும்" (புகாரி)

என்று கூறியுள்ளார்கள்.

### 3. ஈகையின் சிறப்பும் குற்றமும்

பிறரிடம் இருந்து பெற்றுக் கொள்ளுதல் இழிவான செயல் ஆகும். ஒருவனுக்கு வானுலகமே இல்லை என்றாலும் பிறருக்கு ஈவதே சிறப்பு உடையதாகும் என்று ஈகையின் சிறப்பினை,

> "நல்லா(று) எனினும் கொளல்தீது மேலுலகம்
> இல்லெனினும் ஈதலே நன்று" (222)

என்ற குறளின் மூலம் கூறுகின்றார்.

மேலும் தான் ஏதுமற்ற வறியவன் என்று ஒருவன் கூறுவதற்கு முன்பே, அவனுக்கு ஈதல் உயர்ந்த குடியில் பிறந்தவனின் தன்மை ஆகும் என்கிறார் வள்ளுவர். மேலும் செல்வர்களிடம் வறியவர்கள் பொருள்களை வாங்கத் தயங்க வேண்டும். இது நடைபெற்றால் உலகம் நிலைபெறும். வள்ளுவர், பொருள் அல்லது உதவி வேண்டும் என்று கேட்டவர்கள் பொருளைப் பெற்று மகிழ்கின்ற நிலையைக் காணும் வரையிலும், இரத்தல் எவ்வளவு துன்பமானதோ அவ்வளவு துன்பமானது இரந்து கேட்கப்படுதலும் என்பதை,

**"இன்னா திரக்கப் படுதல் இரந்தவர்**
**இன்முகங் காணு மளவு" (224)**

என்கிறார்.

தவவலிமை உடைய பெரியோர்களது பெருவலிமை பசியைப் பொறுத்துக் கொள்வது ஆகும். ஆனால் பசி என்று தன்னிடம் வந்தவர்க்கு உணவு கொடுத்து அந்தப் பசியைப் போக்குகின்றவரின் ஆற்றல், அதனை விடவும் உயர்ந்தது என்று பசியைப் போக்குகின்றவர்களின் ஆற்றலினை,

**"ஆற்றுவா ராற்றல் பசியாற்றல் அப்பசியை**
**மாற்றுவா ராற்றலிற் பின்" (225)**

என்று வள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

மேலும் ஏழைகளின் பசியைப் போக்க வேண்டும். அதனால் ஏற்படும் நன்மை என்னவெனில் ஒருவன் தான் பெற்ற பொருள்களைத் தனக்கு உதவுகின்ற வகையில் சேர்த்து வைக்கின்ற இடம் என்பதை வலியுறுத்துமுகமாக,

**"அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்**
**பெற்றான் பொருள்வைப் புழி" (226)**

என்னும் குறளினைப் படைத்துள்ளார்.

இந்தப் பசி என்னும் கொடிய நோய் அணுகாத விதத்தினைக் கூற நினைத்த வள்ளுவர், அனைவருக்கும் பகிர்ந்து கொடுத்து உண்ணும் குணம் மிக்க ஒருவனைப் பசி என்கின்ற தீய நோய் அணுகாது என்கின்றார். இதனை,

**"பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்**
**தீப்பிணி தீண்டல் அரிது" (227)**

என்னும் குறள் மூலம் வலியுறுத்துகின்றார்.

ஏழைகளுக்குக் கொடுத்து அதனால் ஏற்படுகின்ற மகிழ்ச்சியைக் கருமிகள் அறியமாட்டார்கள். மேலும் ஒருவன் செல்வத்தைச் சேர்த்து வைப்பதற்காக பிறருக்கு வழங்காமல் தான் மட்டும் உண்பது இழிவான செயல் ஆகும். இதனை,

**"இரத்தலின் இன்னாது மன்ற நிரம்பிய**
**தாமே தமியர் உணல்"** *(229)*

என்று கூறுகிறார்.

இறப்பு என்பது துன்பமானது ஆகும். ஆனால் அந்த இறப்பைவிட மிகவும் துன்பமானது தன்னிடம் வந்து யாசிப்பவர்க்குக் கொடுக்க முடியாத சூழ்நிலை ஆகும். இத்தகைய ஈகையின் சிறப்பினை,

**"சாதலின் இன்னாத தில்லை இனித்தூஉம்**
**ஈதல் இயையாக் கடை"** *(230)*

என்றுக் கூறுகின்றார் புலவர்.

இவ்வாறு ஈகையின் சிறப்பினையும், ஈயாமையினால் ஏற்படும் குற்றத்தினையும் கூறிய வள்ளுவர், ஒருவனிடம் உள்ள பொருள்கள் எல்லாம் மற்றவர்களுக்கு கைம்மாறு கருதாமல் உதவிட வேண்டும் என்பதை ஒப்புரவு என்னும் அதிகாரத்தின் மூலம் விளக்குகின்றார்.

## 4. ஒப்புரவின் சிறப்பு

இவ்வுலகின் மக்கள் ஒரு குடும்பமாக வாழும் இயல்பு உடையவர்கள் ஆவர். தனி ஒருவனுக்கு எந்த அளவு அறிவும், ஆற்றலும் இருந்தாலும் கூட அவனிடம் கட்டுப்பாடும், திட்டமிட்ட வாழ்வும் இல்லை என்றால் அவன் சிறப்புடன் வாழ முடியாது. பிறரது உழைப்பு இல்லாமல் நாம் வாழ முடியாது என்று சிந்திக்காமல் சுயநலத்தைக் கொண்டு ஒருவன் வாழ்ந்தால் அவனால் உயரமுடியாது. அவனது வாழ்வுக்கு உயிர் நாடியாக இருப்பது ஒப்புரவு ஆகும்.

இல்லறம் சிறக்க ஒப்புரவு மிகவும் இன்றியமையாதது ஆகும். இல்லறத்தில் ஈடுபடும் கணவனும், மனைவியும் உயர்ந்த நிலையைப் பெற்று வாழ வேண்டும் என்றால் அவர்கள் ஒப்புரவாற்ற வேண்டும்.

ஒருவனுக்கு உதவி செய்வதால், அவனால் நமக்கு என்ன நன்மை கிடைக்கும் என்று யோசித்து, இலாபம் இருந்தால் உதவி செய்து, இலாபம் இல்லை என்றால் உதவி செய்யாமல் இருந்து விட்டோம் என்றால் நம்மிடம் ஒப்புரவு என்கின்ற அறம் இல்லாமல் போய்விடும்.

ஒப்புரவு என்பது ஒருவருக்கு ஒருவர் உதவி செய்து வாழும் வாழ்வு ஆகும். செல்வம் ஒருவனிடம் இருந்தால் அதனைத் தான் மட்டும் அனுபவிக்க வேண்டும் என்று எண்ணுதல் கூடாது. அதனைத் தனது சுற்றமும், பிறரும் அனுபவிக்க வேண்டும் என்று எண்ணுதல் வேண்டும்.

செல்வம் பெற்றவர்கள் வேண்டியவர், வேண்டாதவர் என்று பாகுபாடு பார்க்காது வறுமை, பிணி, அறியாமை ஆகியவற்றில் உழன்று வருந்துபவர்களுக்கு உதவிட வேண்டும். அவ்வாறு உதவவில்லை என்றால் அவன் இவ்வுலகில் இல்லாமல் மறுஉலகிலும் நன்மையை அடையமாட்டான். மேலும் ஒப்புரவாளர்கள் மழையைப் போன்றவர்கள் என்பதை,

**"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்**
**டென்னாற்றுங் கொல்லோ உலகு" (211)**

என்கிறார் வள்ளுவர். தகுதி அறிந்து உதவுதல்,

**"பாத்திரம் அறிந்து பிச்சையிடு"**

என்பது பழமொழி. ஒரு பொருளை ஒருவர்க்குக் கொடுக்க வேண்டும் என்றால் அப்பொருளினைத் தேவை உள்ளவர்களுக்குக் கொடுக்க வேண்டும். தேவை இல்லாதவர்களுக்குக் கொடுப்பதனால் எந்த பயனும் இல்லை.

உழைத்துச் சேர்த்த பொருட்கள் எல்லாம் பிறர் நலத்திற்காகத் தான் என்பதை,

**"தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு**
**வேளாண்மை செய்தற் பொருட்டு" (212)**

என்னும் குறள் மூலம் வள்ளுவர் கூறுகின்றார்.

மேலும் உதவி செய்தவன்தான் வாழ்ந்தவன் ஆவான். ஆனால் உதவி செய்து வாழாதவன் உயிருடன் இருந்தாலும் செத்தவனாகவே கருதப்படுவான் என்றும், ஒப்புரவு என்னும் நல்லெண்ணம் ஒருவனிடத்தில் அமையாவிட்டால் அவன் இவ்வுலகிலும், வேறுலகத்திலும் இன்பம் காண முடியாது என்றும் கூறுகின்றார் வள்ளுவர்.

## 4.1 ஒப்புரவாளர்கள்

ஒப்புரவாளர்களுக்கு ஊருணி நீர், பயன்மரம், மருந்துச் செடி ஆகியவற்றை உவமையாகக் கூறுகின்றார் வள்ளுவர். இதனை,

> **"ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்**
> **பேரறி வாளன் திரு" (215)**
>
> **"பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்**
> **நயனுடை யான்கண் படின்" (216)**
>
> **"மருந்தாகித் தப்பா மரத்தாற்றல் செல்வம்**
> **பெருந்தகை யான்கண் படின்" (217)**

என்னும் குறள்கள் மூலம் அறியலாம்.

ஊருணி தன்னிடம் தேங்கியுள்ள நீரினை நல்லவர், கெட்டவர், உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற பாகுபாடு பார்க்காமல் தருகின்றது. அதுபோன்று உலகில் எல்லோரும் நலமுடன் வாழ வேண்டும் என்று விரும்புகின்றவர்களிடம் சேருகின்ற செல்வமானது, ஊர்மக்கள் எடுக்க எடுக்க குறையாமல் இருக்கும் குளத்தைப் போன்றது ஆகும். மேலும், அத்தகைய ஒப்புரவாளர்களிடம் செல்வம் சேருவது பயன் மிகுந்த மரம் ஊரின் நடுவில் நன்கு பழுத்து நிற்பது போன்றதாகும் என்று கூறுகின்றார். அதாவது பயன்தரும் மரம் ஊரின் நடுவில் இருக்கும் என்றால் அதனை ஊர்மக்கள் அனைவரும் பயன்படுத்துவார்கள். அதுபோல் நற்பண்பு உடையவர்களிடம் செல்வம் சேரும் என்றால் அதனை உலகத்தில் உள்ளவர்கள் போற்றுவார்கள். ஒப்புரவாளர்களிடம் செல்வம் சேருமானால் அதைப் பார்த்து பிறர் மனம் நோகமாட்டார்கள்.

மேலும் ஒப்புரவாளர்களை வள்ளுவர், மருந்துச் செடிக்கு ஒப்பிடுகின்றார். மருந்துச் செடி தன் இலை, வேர், காய், பழம் ஆகிய அனைத்தையும் பிறருக்குத் தந்து உதவும். அது தான் அழிந்து போனாலும் பிறரை அழிக்காது. காக்கும் தன்மை உடையது ஆகும். அதுபோலவே ஒப்புரவாளர்களின் செல்வமும் ஆகும் என்கின்றார் வள்ளுவர்.

## 4.2 வறுமை ஒப்புரவினை அழிக்காது

ஒப்புரவு செய்வதைத் தனது கடமை என்று கொண்டவர்கள் தனது செல்வம் குறைந்து வறுமையை அடைந்த நேரத்திலும் ஒப்புரவு செய்வதை நிறுத்த மாட்டார்கள். மேலும் பிறருக்கு உதவும் குணம்

உடையவன் வறுமையை அடைதல் என்பது அவன் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யாமல் இருப்பது போன்றதாகும்.

"இடனில் பருவத்தும் ஒப்புரவிற் கொல்கார
கடனறி காட்சி யவர்" (218)

"நயனுடையார் நல்கூர்ந்தா றாதல் செயுநீர
செய்யா தலைமகலா வாறு" (219)

என்னும் குறள்கள் மூலம் வலியுறுத்துகின்றார்.

## 4.3 வறுமையினால் கேடு வராது

ஒப்புரவு செய்வதால் வறுமையே ஏற்பட்டாலும், அந்த வறுமையைத் தன்னை விற்றாவது வாங்கிக் கொள்வான் என்பதை,

"ஒப்புரவி னால்வருங் கோடனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து" (220)

என்று கூறுகின்றார் வள்ளுவர்.

## 5. ஜக்காத் கொடுப்பதற்கு ஏற்றவர்களும், ஏற்ற பொருள்களும்

ஜக்காத் பெறுவதற்கு ஏற்றவர்கள் யார் யார் என்பதை இஸ்லாம் கூறுகின்றது.

- ஏழைகள், அடிப்படைத் தேவைகள் பூர்த்தியாகாதவர்கள்.
- ஜக்காத்தை வசூலிப்பதற்காக நியமிக்கப்பட்டவர்கள்.
- இஸ்லாத்தைப் புதிதாகத் தழுவியவர்கள்.
- அடிமைகளை விடுதலை செய்வதற்கு.
- கடன் பட்டவர்கள்.
- பயணத்தில் இருப்பவர்களுக்கு ஏதேனும் தேவை ஏற்பட்டால் அதற்கு உதவுவதற்காகச் செலவழித்தல்

என்று ஜக்காத் கொடுப்பதற்கு ஏற்றவர்களை இஸ்லாம் கூறுகின்றது. இதனைத் திருமறை,

"(ஜக்காத் எனும்) தானங்களெல்லாம் தரித்திரர்களுக்கும், ஏழைகளுக்கும், தானத்தை வசூலிப்பவர்களுக்கும், புதிதாக இஸ்லாத்தைத் தழுவியோருக்கும், அடிமைகளை விடுதலை செய்வதற்கும், கடனில் மூழ்கியவர்களுக்கும் வழிப்போக்கர்களுக்கும் (உரித்தானதாக) அல்லாஹ்

"ஏற்படுத்திய கடமையாகும். அல்லாஹ் (யாவற்றையும்) மிக்க அறிந்தோனும் ஞானமுடையோனுமாக இருக்கின்றான்" (குர்ஆன் 9:60)

என இயம்புகிறது.

ஒருவன் தானம் தரும் பொருள்கள் நல்ல பொருள்களாக இருக்க வேண்டும். கெட்ட பொருள்களாக இருக்கக் கூடாது. கெட்டவற்றைக் கொடுத்து, தானம் கொடுக்கக் கூடிய பொருள்களின் பலன்களை வீணாக்கி விடாதீர்கள் என்று இஸ்லாம் வலியுறுத்துகின்றது. திருமறையில்,

"விசுவாசிகளே! (தருமம் செய்யக் கருதினால்) நீங்கள் சம்பாதித்தவைகளிலிருந்து, நாம் உங்களுக்கு பூமியிலிருந்து வெளிப்படுத்திய (தானியம், கனிவர்க்கம் முதலிய)வைகளிலிருந்தும், நல்லவைகளையே (தானமாக) செலவு செய்யுங்கள். அவைகளில் கெட்டவைகளைக் கொடுக்க விரும்பாதீர்கள். (ஏனெனில் கெட்டுப்போன பொருளை உங்களுக்கு ஒருவர் கொடுத்தால்) அவைகளை நீங்கள் (வெறுப்புடன்) கண்மூடினவர்களே அன்றி எடுக்க மாட்டீர்கள்!" (குர்ஆன் 2:27)

என்றும்,

"விசுவாசிகளே! அல்லாஹ்வையும், இறுதிநாளையும் விசுவாசம் கொள்ளாது (தானே தர்மவான் என்பதைப் பிற) மனிதர்களுக்கு அறிவிக்கும் பொருட்டுத் தன் பொருளைச் செலவு செய்து (வீணாக்கி) விட்டவனைப் போல் நீங்கள் உங்களுடைய தானங்களைப் (பெற்றவனுக்கு) இகழ்ச்சியையும், துன்பத்தையும் (செய்து) கொண்டு அதன் பலனை வீணாக்கி விடாதீர்கள்" (குர்ஆன் 2:264)

என்னும் வசனங்கள் மூலம் உணர்த்துகின்றது.

மேலும் இறைவனுக்கு அளிக்கும் பங்கை ஏழைகளுக்கு கொடுக்கும்படி திருமறை,

"அறுவடை செய்யும் நாளில் (இறைவனுக்கு நன்றி செலுத்தும் பொருட்டு) அதில் அவனுடைய பாகத்தை (ஏழைகளுக்கு) கொடுத்து விடுங்கள்" (குர்ஆன் 6:14)

என்னும் வசனத்தின் மூலம் வலியுறுத்துகின்றது. ஒருவன் தன்னுடைய செல்வத்தில் இறைவனுக்குச் சேரக்கூடிய பங்கினை ஏழைகளுக்கு வழங்கிட வேண்டும். மேலும் உறவினர்களுக்கு உரியதை உறவினர்களுக்கு வழங்கிட வேண்டும். ஏனென்றால் இவ்வாறு பிறருக்கு உதவுபவன், சொர்க்கத்தினை அடைவான் என்று கூறுகிறது இஸ்லாம். இதனை அல்லாஹ்,

> **"அல்லாஹ் உமது பொருளில் பந்துக்களுக்கும் பாத்தியப்பட்டதை அவர்களுக்கு கொடு(த்து வாரு)ம் (அவ்வாறே) ஏழைகளுக்கும், வழிப்போக்கர்களுக்கும் (அவர்களுடைய பாத்தியதைக் கொடுத்து வாரும்) எவர்கள் அல்லாஹ்வுடைய திருப்பொருத்தத்தை விரும்புகின்றீர்களோ, அவர்களுக்கு இதுவே மிக்க நன்றாகும். இத்தகையோர் தாம் சித்தி (வெற்றி) பெறக் கூடியவர்கள்" (குர்ஆன் 17:26)**

என்னும் வசனத்தின் மூலம் வலியுறுத்துகின்றான்.

மேலும் ஒரு உதவியை ஒருவருக்கு நாம் செய்கிறோம் என்றால், அந்த உதவி தேவைப்பட்டவருக்குச் செய்தால் நன்மை தேவையற்றவர்களுக்குச் செய்வதனால் அந்த உதவி பயனற்றதாகி விடும். உதவி பெறுவதற்கும் முன்னுரிமை உடையவர்கள் யார் யார் என்பதை திருமறை,

> **"நபியே! (பொருளில்) எதைச் செலவு செய்வது? (யாருக்குக் கொடுப்பது) என்று உம்மிடம் கேட்கின்றனர். (அதற்கு) நீர் கூறும் (நன்மையைக் கருதி) நீங்கள் எத்தகைய பொருளைச் செலவு செய்த போதிலும் (அதனைப்) பெற்றோர், சுற்றத்தார், அநாதைகள், ஏழைகள், வழிப்போக்கர்கள் ஆகியோருக்குக் கொடுங்கள்" (குர்ஆன் 2:215)**

என்று கூறுகின்றது.

இயற்கையில் ஏற்றத்தாழ்வுகளை இறைவன் உருவாக்கினான். அதுபோலவே மனிதர்களுக்கிடையிலும் செல்வம் படைத்தவன், வறுமையுடையவன் என்னும் வேறுபாட்டைப் படைத்துள்ளான். ஆனால் இயற்கையில் ஏற்றத்தாழ்வுகள் இருக்கலாம். மனிதன் மனதில் இருக்கக் கூடாது. செல்வந்தர்கள் தம்மைத்தேடி வருகின்றவர்களுக்கு தன்னால் முடிந்தவரை உதவி செய்ய வேண்டும். இறைவன் தமக்குக்

கொடுத்துள்ள செல்வம் ஏழைகளுக்கு உதவுவதற்காகவே என்று நினைக்க வேண்டும். இதனை,

> **"நீங்கள் விரும்புகிற பொருள்களில் (சிலதை) தர்மம் செய்யாதவரை நன்றியுடைய மக்களாக மாட்டீர்கள். மேலும் நீங்கள் எப்பொருளைத் தர்மம் செய்தாலும் நிச்சயமாக இறைவன், அதனை நன்கு அறிகிறான்" (ஹதீஸ்)**

என்பதிலிருந்து அறியலாம்.

ஒருவன் குடிக்க கூழ் இல்லாமல் பசியால் வாடுவதைப் பார்த்த பிறகும், தான் மட்டும் அறுசுவை உணவை உண்டு வாழ்வதற்கு மட்டும் தன்னுடைய செல்வத்தைப் பயன்படுத்துவது சிறந்த செயல் அல்ல. ஒவ்வொருவனும் இம்மையில் செலவு செய்வதைப் பற்றி மறுமையில் அல்லாஹ்விடம் பதில் சொல்ல வேண்டும் என்றே,

> **"ஒவ்வொரு மனிதனும் தன் செயலுக்கு (பதில் சொல்லவும் அதற்குள்ள கூலியைப் பெறவும்) பொறுப்பாளியாக்கப் படுகிறான்" (குர்ஆன் 41:8)**

என்றும் திருமறை வலியுறுத்துகின்றது.

மேலும் மனிதன் பொருள்மீது உள்ள பற்றினால் அதனைச் செலவு செய்யாமல் கஞ்சத்தனத்துடன் இருக்கக் கூடாது. அதேபோல் தன்னிடம் உள்ள அனைத்தையும் பிறருக்குக் கொடுக்க வேண்டும் என்பதும் கூடாது. தன் சுயதேவைக்கும், தனது குடும்பத்திற்கும் போக எஞ்சியுள்ள செல்வத்தை இறைவனுக்கு கொடுக்க வேண்டும். இதனை,

> **"உங்களுடைய தேவைக்குப் போக மீதமுள்ளதைச் செலவு செய்யுங்கள்" (குர்ஆன் 2:219)**

என்று கூறுகின்றது. மேலும்,

> **"எவர்கள் உலோபித்தனம் செய்வதுடன், இதர மக்களையும் உலோபித்தனம் செய்யும்படி தூண்டுதல் செய்து, அல்லாஹுத் ஆலா தன் அருட்கொடையிலிருந்து அவர்களுக்குக் கொடுத்ததையும் மறைத்துக் கொள்கிறார்களோ, அத்தகைய நன்றி கெட்டோருக்கு இழிவு படுத்தும் வேதனையை நாம் சித்தப்படுத்தி உள்ளோம்" (ஹதீஸ்)**

என்றும்,

"உனக்கு தர்மம் கொடுக்க சக்தி இருந்தும் கொடாமல் இருந்து விடாதே. ஏனெனில் பிறரால் இழிவாகக் கருதப்படுவாய். (என்றாலும்) அப்பொருள் அனைத்தையும் ஒரேயடியாக தர்மம் செய்துவிட்டு ஒன்றுமில்லாதவனாகியும் விடாதே" (ஹதீஸ்)

என்றும்,

"அல்லாஹ்வின் பாதையில் செலவு செய்யுங்கள். இன்னும் உங்கள் கைகளை அபாயத்தின் பக்கம் ஆக்காதீர்கள். மேலும் உபகாரம் செய்யுங்கள். நிச்சயமாக அல்லாஹ் உபகாரம் செய்கிறவர்களை நேசிக்கின்றான்" (ஹதீஸ்)

என்று நாயகம் (ஸல்) கூறுதில் இருந்தும் அறியலாம்.

## 5.1 ஜக்காத்தின் பயன்

- நரகில் இருந்து பாதுகாப்பளிக்கும்,
- இறைவனின் கோபத்தில் இருந்து தப்பிக்க உதவும்,
- நோய்களை நீக்கும்,
- உலக ஆபத்துக்களை விட்டும் காவல் தரும்,
- இறுதித் தீர்ப்பு நாளில் உள்ள வேதனையில் இருந்து பாதுகாப்பளிக்கும்

என்று ஜக்காத்தை வழங்குவதால் ஏற்படும் பயன்களைக் கூறலாம். இதனை,

- "இரகசியமாக தர்மம் செய்வதானது இறைவனது கோபத்தைத் தட்டிவிடும். நரகத்தை விட்டும் பாதுகாக்கும்" (ஹதீஸ்)
- "தர்மமானது எழுபது வகையான பிணிகளை நீக்கிவிடும்" (ஹதீஸ்)
- "மூமின்களின் தர்மமானது உலக ஆபத்துக்களையும், கப்ருடைய அமளிகளையும், கியாமத் நாளுடைய வேதனைகளையும் தட்டிவிடும்" (ஹதீஸ்)
- "எவர் யாசிப்போரை கடிந்து பேசி விரட்டுகிறாரோ, அவரை கியாமத்து நாளில் மலக்குகள் கடிந்து பேசி விரட்டுவார்கள்" (ஹதீஸ்)

என்னும் நபிமொழிகள் மூலமாக அறியலாம்.

## 52 ஜக்காத் கொடுக்கும் பொருள்கள்

ஜக்காத் கொடுப்பதற்கு எந்தப் பொருள்களைப் பயன்படுத்தலாம் என்பதை மிகத் தெளிவாக எடுத்து இயம்புகிறது திருமறை. இதனை,

> "இறை நம்பிக்கைக் கொண்டவர்களே! நீங்கள் சம்பாதித்த பொருள்களிலிருந்தும், பூமியிலிருந்து நாம் உங்களுக்கு வெளிப்படுத்தி தந்தவற்றிலிருந்தும் சிறந்தவற்றை (இறைவழியில்) செலவு செய்யுங்கள்" (227)

என்னும் வசனத்தின் மூலம் வலியுறுத்துக்கின்றது.

பூமியில் தானே விளையும் விறகு, புல், மூங்கில் இவற்றையும், கீரை, கனி வகைகள் ஆகியவற்றிலும், நாம் உழைத்து சம்பாதித்த பொருள்களிலிருந்தும் இறைவனுக்கு உரிய பங்கைத் தானமாக வழங்க வேண்டும். நம்முடைய சுய தேவைகள், நம்மைச் சார்ந்தவர்களின் தேவைகள் ஆகிய அனைத்திற்கும் போக மீதமுள்ளதை ஜக்காத் கொடுக்க வேண்டும்.

மேலும் தங்கம், வெள்ளி, பவுண்டு, கரன்சி, வசூலாகும் கடன் தொகை, வியாபாரப் பொருட்கள், பூமியில் விளையும் பொருட்கள், கால்நடைகள் ஆகியவற்றைத் தானமாகக் கொடுக்க வேண்டும்.

ஒருவனிடம் தங்கம் 87 கிராமுக்கு அதிகமாக இருப்பினும், வெள்ளி 617 கிராமுக்கு அதிகமாக இருப்பினும் அவற்றை ஜக்காத்தாகக் கொடுக்க வேண்டும். தன்னிடம் அதிகமாக இருப்பதில் இருந்து 2½ சதவீதத்தை ஜக்காத்தாகக் கொடுக்க வேண்டும் என்று இஸ்லாம் வலியுறுத்துகின்றது.

## 6. ஒப்பீடு

வறியவர்களுக்கு கொடுப்பதே ஈகை என்று திருக்குறள் வலியுறுத்துகின்றது. இஸ்லாம் ஜக்காத்தை கட்டாயக் கடமை ஆக்கியுள்ளது. திருக்குறளில், மனிதன் கடைப்பிடிக்க வேண்டிய நெறிகளில் ஒப்புரவும், ஈகையும் சிறந்தவை என்று வலியுறுத்துகின்றது. ஏழைகளின் பசியைப் போக்குவது தவ வலிமை உடைய சான்றோர்களின் வலிமையை விடப் பெரியது. மேலும் தான் பெற்ற பொருள்கள் தனக்கு உதவும் வகையில் சேர்த்து வைக்கும் இடம்

பிறரது பசியைப் போக்குவது ஆகும். பிறருக்கு கொடுத்து உண்ணும் ஒருவனைப் பசி என்னும் கொடிய நோய் அணுகாது என்றும் திருக்குறள் கூறுகின்றது. ஜக்காத் செய்வதால் நோய்கள் அணுகாது என்பதில் இருந்து பசிப்பிணியும் அணுகாது என்று கொள்ளலாம். மேலும், நரகத்தில் இருந்தும், இறைவனின் கோபத்தில் இருந்தும் தப்பலாம் என்று வலியுறுத்துகின்றது இஸ்லாம்.

தகுதி அறிந்து பிறருக்கு உதவ வேண்டும் என்று திருக்குறளும் இஸ்லாமும் வலியுறுத்துகின்றன. திருவள்ளுவர் ஒப்புரவாளர்களை மழை, மருந்துச்செடி, பயன்மரம் ஆகியவற்றிற்கு ஒப்பிட்டு, அவை தன்னிடம் உள்ள அனைத்தையும் வழங்குவது போல ஒப்புரவாளர்களும் அனைத்தையும் வழங்குவர் என்று கூறுகின்றார். இஸ்லாம் தன்னிடம் உள்ளவற்றில் தனது தேவைக்குப் போக அதிகமாக உள்ளதைத் தானமாக வழங்க வேண்டும் என்றும் கூறுகின்றது. இஸ்லாம் ஜக்காத் வழங்குவதற்கு அளவு நிர்ணயம் செய்து உள்ளது. திருக்குறளில் இந்த நிர்ணயம் இல்லை.

## 7. நிறைவு

- ❖ ஈகையும், ஜக்காத்தும் மனிதனிடம் உள்ள கஞ்சத்தனத்தைப் போக்கும். அவர்களை உயர்ந்த நிலைக்கு கொண்டுவர வழி வகை செய்யும். இவற்றை மேற்கொள்வதால் சமூகத்தில் உள்ள பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் நீங்கி சமநிலை உருவாகும்.
- ❖ வள்ளுவர் ஈகையினை வலியுறுத்தினாலும், யாசிப்பதின் இழிவைக் கூறுவதில் இருந்து, அவர் அடிப்படையில் யாசிப்பதினை ஏற்றுக் கொள்ளவில்லை என்று அறியலாம்.
- ❖ இன்றைய நடைமுறை சமூகத்தில் இருக்கும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளையும், அவற்றைச் சீர்செய்யும் முறைகளையும் திருக்குறளும் இஸ்லாமும் மிக அழகாகக் கூறுகின்றன எனலாம்.

## குறிப்புகள்

1. கழகத் தமிழ் அகராதி, ப. 141
2. தமிழ் மொழி அகராதி, ப. 251
3. தமிழ்ப் பேரகராதி, தொகுதி 1, ப. 374
4. கழகத் தமிழ் அகராதி, ப. 232
5. தமிழ் மொழி அகராதி, தொகுதி 1, ப. 596
6. தமிழ்ப் பேரகராதி, தொகுதி 1, ப. 596
7. இலக்கியச் சொல்லகராதி, ப. 42
8. பீ.மு. அஜ்மல்கான், இஸ்லாம் வரலாறும், தத்துவமும், ப. 126
9. மௌலானா ஜலீல், அண்ணல் நபிகளார் வாழ்வினிலே, ப. 65
10. மேலது., ப. 65
11. மேலது., ப. 65

## துணை நூல்கள்


அஜ்மல்கான், பீ.மு., இஸ்லாம் வரலாறும் தத்துவமும்
அரசி பதிப்பகம்,
திண்டுக்கல், 1995

கழகப் புலவர் குழுவினர் கழகத் தமிழ் அகராதி,
கழக வெளியீடு,
சென்னை, 1969

ஹாஜி முகம்மது, திருக்குர்ஆன் மூலமும் தமிழுரையும்,
ஜான் லிட்டரரி சாரிடபிள் ட்ரஸ்ட்,
சென்னை, 1993

பரிமேலழகர், உ. ஆ., திருக்குறள்,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை, 1991

மௌலானா ஜலீல் அஹ்ஸன் நத்வீ அண்ணல் நபிகளார் வாழ்வினிலே,
இஸ்லாமிய நிறுவனம் ட்ரஸ்ட்,
சென்னை, 1994

Vaiyapuri Pillai. S. Tamil Lexicon, Vol. III, Part-II,
University of Madras,
Nacmillan Indian Press,
Madras, 1982 ■

பரல்கள் 12, சனவரி 1999, பக். 123 – 136, ⓟ தமிழ் ஆய்வாளர் மன்றம், மதுரை

# திருவள்ளுவர் மார்க்க அரேலியர் அறக்கோட்பாடு ஒப்பீடு *

சீ. காயத்ரிதேவி

திருக்குறள் ஆய்வகம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை 625 021, இந்தியா

**ஆய்வுச்சுருக்கம்.** திருவள்ளுவர், மார்க்க அரேலியர் ஆகியோரின் அறக்கருத்துக்கள், இறைக்கொள்கை, இல்லறம், அறன் வலியுறுத்தல், தீவினையச்சம், ஒழுக்கம், இன்பதுன்பம், மனத்தூய்மை, பகைவனுக்கு அருளல் ஆகியவை ஒப்பு நோக்குதல்.

**கருச்சொற்கள்.** ஒப்பிலக்கியம்; திருக்குறள்; சிந்தனைகள்; அறக்கோட்பாடு.

## 1. அறிமுகம்

திருவள்ளுவர், கௌடில்யர், சாக்ரட்டீஸ், பிளேட்டோ, அரிஸ்டாட்டில், கன்பூசியஸ் போன்ற சிந்தனை ஆற்றல்மிக்க பெரியோர்கள் வரிசையில் சேர்த்து மதிக்கத்தக்க பெருமையுடையவர் உரோமபுரிச் சக்கரவர்த்தி மார்க்க அரேலியர். இவர் 1800 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர். பெரும் சிந்தனையாளர். திருவள்ளுவரோடு ஒப்பிட்டுக்கூறும் வகையில் முதன்மையாகக்

* தமிழ் ஆய்வாளர் மன்ற புதன் வட்டக் கருத்தரங்கில் (நவம்பர் 4, 1998) படிக்கப் பெற்றது

கொள்ளப்பட வேண்டியவர். திருக்குறள் மனித சமுதாயத்திற்கான அடிப்படை அறங்களைக் கூறுவதுபோல், மார்க்க அரேலியரின் 'சிந்தனைகள்' (Meditations) என்ற நூலின் கருத்துக்களும் உலக மனித சமுதாயம் மேன்மையுறத் தேவையான சீரிய அறப்பண்புகளைக் கூறுகின்றது. திருவள்ளுவரின் அறக்கோட்பாடு, திருக்குறளின் பல அதிகாரங்களில் பரந்து விரிந்து காணப்படுகின்றன. வள்ளுவர் காட்டும் 'உலகப் பொதுமறை'யையும், மார்க்க அரேலியரின் 'சிந்தனை'களையும் ஒப்பிட்டுக்காண்பது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## 2. "சிந்தனைகள்" (MEDITATIONS) ஓர் அறிமுகம்

மார்க்க அரேலியரின் 'சிந்தனைகள்' நாட்குறிப்பு வடிவில், உரைநடையில் அமைந்தது. இந்த நூலின் முதற்பகுதி 17 அதிகாரங்களையும், இரண்டாம் பகுதி 42 அதிகாரங்களையும் கொண்டது. இந்நூலை ஆங்கிலத்தில் 'ஜார்ஜ் லாங்' (George Long) என்பவர் மொழி பெயர்த்துள்ளார். இதனை வழி நூலாகக் கொள்ளலாம். மூதறிஞர் இராஜாஜி அவர்கள், 'ஆத்ம சிந்தனைகள்' என்ற பெயரில் தமிழில் இதனை மொழி பெயர்த்துள்ளார். இதில் மார்க்க அரேலியரின் சிந்தனைக் கருத்துக்கள் 180 பகுப்புகளாக உள்ளன.

> **"மார்க்க அரேலியர் இத்தாலி நாட்டை ஆண்ட ரோமப் பேரரசராக இருந்தபோதும், அவரது நூலான 'சிந்தனைகளை' கிரேக்க மொழியில் எழுதியுள்ளார்."[1]**

தமிழறிஞர் பொ. திருகூடசுந்தரம், மார்க்க அரேலியரின் 'சிந்தனைகள்' – 'இதய உணர்ச்சி' என்ற தலைப்பில் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். இந்நூலுக்கு வ.வே.சு. ஐயர் எழுதியுள்ள முகவுரையில்

> **"இந்நூலிற்கு உலகத்தின் அறநூல்களில் சிலவற்றைத்தான் இணையாகக் கூறமுடியும். எல்லாவற்றையும் யோசித்துப் பார்த்தால் திருவள்ளுவ தேவரின் திருக்குறளின் யோக்கியதை இந்நூலுக்கு உளது என்று சொல்லலாகும். ஆனால் இதனுள் இன்னொரு விசேஷமிருக்கிறது. திருக்குறள் எழுதியவர் இல்வாழ்க்கையினராக இருந்த போதிலும், உலக விவகாரங்களில் கொஞ்சமேனும் சிக்கிக் கொள்ளாமல், அவற்றிற்குப் புறம்பாகவே நின்று, அவற்றை ஒரு சாட்சியைப் போல் பார்த்தறிந்து எழுதினவராவார். மார்க்க அரேலியனோ ஒரு**

சக்கரவர்த்தி. சுமார் பதினைந்து லட்ச சதுர மைல் விஸ்தீரணமுள்ள ஓர் ஏகாதிபத்தியத்தை 'வறிஞன் ஓம்பும் ஓர் செய் எனக் காத்து' ரட்சித்து வந்த அரசர்க்கரசன். அவனுடைய ஆத்ம விசாரணை போர்க்களத் தினிடையிலும், மந்திரி சபை கூட்டங்களின் மத்தியிலும், நீதி செலுத்தும் மன்றங்களிலும், சூழ்ச்சிக்காரர்களுடைய சூழ்ச்சியைக் குலைக்கச் செய்யும் முயற்சிகளுக்கிடையிலும் நிகழ்ந்ததாகும்" [2]

என்று குறிப்பிட்டுள்ளார்.

Willam Ebstein எழுதிய The Great Political Thinkers என்ற நூலில் மார்க்க அரேலியரின் வாழ்க்கை வரலாறு, தத்துவம், 'சிந்தனைகள்' ஆகியவை பற்றி விரிவாகக் கூறப்பட்டுள்ளது. உலகில் தோன்றிய சிறந்த அறநெறி நூல்களில் ஒன்றாகக் கருதப்படும் 'சிந்தனைகள்', வள்ளுவரின் குறளுக்கு இணையாக வைத்துப் போற்றத்தக்கது. இந்நூல் உலகின் பலமொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

"அசோகன், ஹர்சன், குலசேகரன், சேரமான் பெருமாள் நாயனார் ஆகிய அரசர்களைத்தான் மார்க்க அரேலியருடன் ஒப்பிட்டுச் சொல்ல முடியும்." [3]

"மார்க்க அரேலியர் கோல் வழுவாக் கொற்றவராக இருந்ததோடு, தலைசிறந்த சான்றோராகவும் விளங்கினார். அவர் அன்பையும் அறத்தையுமே முதன்மையாகக் கொண்டு அரசியல் நடத்தி வந்தார். அவர் தாம் தமது பொறுமையினாலும், இரக்கத்தினாலும், அறிவினாலும் கண்டறிந்த உண்மைகளையெல்லாம் உணர்ச்சியினா லெழுந்த அருள்மொழியாகத் திரட்டி வைத்திருக்கின்றார். எனக்கு மனச்சோர்வு நிகழும் காலங்களிலெல்லாம் இம்மணிமொழிகள் ஊக்கமும், உற்சாகமும் அளித்து உதவி செய்து வருகின்றது" [4]

என்று இசையரசு தண்டபாணி தேசிகர் கூறுகிறார்.

## 3. வரலாறு

மார்க்க அரேலியரின் அறக்கோட்பாட்டின் சிறப்பைக் கணிப்பதற்கு, அவரது வாழ்க்கை வரலாறு, அரசியல் வரலாறு ஆகியவற்றைத் தெரிந்து கொள்வது மிக இன்றியமையாதது. சுமார் 1800

ஆண்டுகளுக்கு முன் கி. பி. முதலாம், இரண்டாம் நூற்றாண்டுகளில் இத்தாலி நாட்டை ஆண்ட மன்னர்களின் உரோமாபுரிப் பேரரசு (Roman Empire) மிக உயர்ந்த நிலையில் இருந்தது.

> **"உரோமப்பேரரசை ஆண்ட ஐந்து சிறந்த மன்னர்களுள் மார்க்க அரேலியர் முதன்மையாக வைத்துப் போற்றப்படுகிறார்."[6]**

இப்பரந்த நாட்டை ஆண்ட மார்க்க அரேலியர் (கி.பி. 121 முதல் – கி.பி. 180 வரை) மிகச் சிறந்த அரசரும், நிர்வாகியும், சிந்தனையாளரும் ஆவார்.

> **"தமது இளம் வயதிலேயே அறவியல் தத்துவங்களால் ஈர்க்கப்பட்டு, பிற்காலத்தில் பிளேட்டோ கண்ட தத்துவ அரசனாக (Philosopher king) விளங்கியவர்."[7]**

சிறந்த அரசனாக மட்டுமின்றி, அவர் தமது 'சிந்தனைகள்' என்ற நூலில் கூறியுள்ள அறக்கோட்பாட்டின்படி வாழ்ந்தும் காட்டியவர். அரேலியர் கால ரோமானியர்கள் வீரத்திலும், பண்பிலும், நீதியிலும் சிறந்து விளங்கினார்கள்.

> **"இவர்களோடு அக்காலத்தில் தமிழ் நாட்டிலிருந்த மன்னர்களும், மக்களும் பல விதத்தில் வாணிபத் தொடர்பு கொண்டு நட்புடன் வாழ்ந்து வந்தனர்."[8]**

மார்க்க அரேலியர் உயர்ந்த ஸ்பானியக் குடும்பத்தில் உரோமபுரியில் கி.பி.121ஆம் வருடம் ஏப்ரல் மாதம் இருப்பத்தாறாந்தேதி பிறந்தான். சிறுவயதிலேயே இவரிடமிருந்த அறிவுத் திறமையையும், வீரத்தையும், மனித நேயத்தையும் மெச்சி அதனால் கவரப்பட்ட ஹாட்ரியன் (Hadrian) சக்கரவர்த்தி மார்க்கனை அரச வாரிசாக ஏற்கும்படி, தனக்குப்பின் அரசனாகப் போகும் அண்ட்டோனினஸ் பையஸ் என்பவரிடம் உறுதி பெற்றான். 'அண்ட்டோனினஸ் மார்க்க அரேலியரின் மாமன். அவர் உரோமாபுரி அரசரானவுடன் மார்க்கனை வாரிசாக எடுத்துக் கொண்டு சிறந்த கல்வியைக் கற்க ஏற்பாடு செய்தார். மார்க்க அரேலியருக்குக் கல்வி, போதித்த இருபது ஆசிரியர்களும் மிகச் சிறந்த அறிஞர்கள்.

> **"இத்தகைய சிறந்த மாணவனையும், இவ்வளவு சிறந்த ஆசிரியர்களையும் காண்பது அரிது என்று மேலை நாட்டு அறவியில் அறிஞர்கள் கூறுகின்றனர்."[9]**

மார்க்க அரேலியரின் இருப்பத்தைந்தாவது வயதில் அண்ட்டோனினஸ் அரசன் அவரை இளவரசனாக்கி, தனது மகள் பவுஸ்ட்டினாவை அரேலியருக்கு மணம் முடித்து வைத்தான். அத்துடன், அரச நிர்வாகத்தில் பொறுப்புகளைக் கொடுத்து, நேரடியாகப் பங்கேற்க வைத்தான் அண்ட்டோனினஸ் அரசனின் மரணத்திற்குப் பின், கி. பி. 161 இல் மார்க்க அரேலியர் உரோமாபுரிப் பேரரசன் ஆனார். அண்ட்டோனினஸ் அரசனின் மற்றொரு தத்துப்பிள்ளை 'வோரஸ்' என்பவன். தனது மைத்துனான வோரசையும் சேர்த்து ரோமாபுரி அரசனாக்கினால் மட்டுமே தான் அரசப்பொறுப்பை ஏற்றுக் கொள்ள இயலும் என்று மார்க்க அரேலியர் உறுதியோடு இருந்தார். அவரின் கருத்தை மந்திரி சபையார் ஏற்றுக் கொண்டனர். வோரசையும் தன்னோடு சேர்த்து அரசனாக்கினார்.

> **"உலக அரசியல் வரலாற்றில், அரசாட்சி பகிர்ந்தளிக்கப் பட்டது முதன் முறையானதும், ஒரு புதுமையானதும் ஆகும். இது மார்க்க அரேலியரின் பெருந்தன்மைக்கு எடுத்துக்காட்டு"** [10]

என்று கூறப்படுகிறது.

கி. பி. 161 இல் அரசனானது முதல் தம் ஆயுட்காலம் வரை அரேலியர் உரோமாபுரி வரலாற்றிலேயே இல்லாத மிகப்பெரும் நாட்டைக் கட்டிக்காக்க வேண்டியிருந்ததால், தம் விருப்பத்திற்கு மாறாக தனது காலத்தைப் போர்களிலேயே கழிக்கும்படி நேர்ந்தது. அவ்வரது ஆயுட்காலம் முழுவதும் நடந்த போர்களிலெல்லாம் மார்க்க அரேலியர் வெற்றி வாகையே சூடினார். கி. பி. 175 ஆம் வருடம் போர் நிமித்தம் வெளியூர் சென்றிருந்த போது, தம் அருமை மனைவியை அவர் இழந்தார். அவர் தம் மனைவி பவுஸ்ட்டினாவிடம் மிக அதிகமான அன்பை வைத்திருந்தார்.

> **"பணிவுடையாள், ஆடம்பரமற்றவள், அன்புடையாள்" என்று தன் மனைவியைப் பற்றிப் புகழ்ந்துரைக்கிறார். "தன் மனைவியின் நினைவாக வெள்ளியால் சிலை செய்து நிறுவினார்."** [11]

தனது அறுபதாவது வயதில் போர்ப்பாசறையில் மார்க்க அரேலியர் இறந்தார்.

"அவருடைய உடல் ரோமாபுரிக்குக் கொண்டு செல்லப்பட்டு, அதுவரை சரித்திரம் கண்டிராத அளவிற்கு வெகு விமரிசையாக அடக்கம் செய்யப்பட்டது."[12]

மார்க்க அரேலியர் தமது சிந்தனைத் திறத்தால், நாட்டை வழிநடத்தி, மக்கள் மகிழ்வுடன் வாழ வழிவகுத்தார். தனது செய்கைகளில் மனிதத் தன்மையைக் காட்டியதால் எல்லாவற்றிலும் வெற்றியும் பெற்றார்.

"ஏழ்மைத்தனமும், அடிமைத்தனமும் ஒரு பக்கம் முணுமுணுத்துக் கொண்டிருந்த நிலையை அரேலியர் ஓரளவு அகற்றினார். அவரது ஆட்சியில் உரோமாபுரியில் பொன்னும், பொருளும் ஏராளமாகக் குவிந்தன. இவர் காலத்திலிருந்துதான், அரசுக்கு 'வாரிசு முறை' உருவாக்கப்பட்டது"[13].

"எந்த நாட்டினராக, சமயத்தினராக இருந்தாலும் எல்லோருக்கும் சம உரிமை என்ற நிலைமை இவரது ஆட்சிக் காலத்தில் கொண்டு வரப்பட்டது. வறிய மக்களுக்கு மனிதநேய அடிப்படையில் பல உதவிகள் செய்யப்பட்டன. சிறுபான்மையினரின் உரிமைகள் பாதுகாக்கப்பட்டன. மக்கள் செலுத்தும் வரிகள் குறைக்கப்பட்டன"[14].

மார்க்க அரேலியரின் ஆட்சியில் ரோமப்பேரரசு மிக விரிவடைந்தது. மக்கட்தொகை மிகப்பெருகியது. வாழ்வு செழிப்புற்றது. அவரது ரோமப்பேரரசு ஐரோப்பா, வட ஆப்பிரிக்கா, ஆசியா ஆகியவற்றில் உள்ள மாகாணங்களில் ஒற்றுமைப்பட்ட கூட்டாட்சியாக விளங்கியது. இந்த அடிப்படையே இன்றைய உலக நாடுகளின் கூட்டமைப்பு என்ற கருத்திற்கு அடிகோலியது எனலாம். கல்வி, கலாச்சாரம், நாகரிக வாழ்க்கை ஆகியவை இவரது ஆட்சியில் மேம்பாடு அடைந்தது. நாகரிகம் உச்சநிலையை அடைந்தது. எனவே,

"மார்க்க அரேலியரின் ஆட்சியை ரோமப்பேரரசின் பொற்காலம்"[15] என்று போற்றப்படுகிறது.

"அரச கடமைகளைச் செய்யும் விஷயத்தில் மார்க்கஸுக்கு ஓய்வென்பதே தெரியாது. இரவு பகலென்று பார்க்கமாட்டான். அரண்மனையிலிருந்தாலும், போர்க்களத்திலிருந்தாலும் அரச காரியங்களை உடனுக்குடன் செய்து முடிப்பான். ஆனால் எந்த ஒரு

காரியத்திலும் நன்றாக யோசித்த பின்னரே ஒரு முடிவுக்கு வருவான். லட்சக்கணக்கான தனது பிரஜைகளின் உயிருக்கும், பொருளுக்கும் தான் பொறுப்பாளி என்பதை இவன் நன்குணர்ந்திருந்தான். தனது சொந்த வாழ்க்கையைப் பொறுத்தமட்டில் எளிய முறையையே கடைப்பிடித்தான். போகம், பகட்டு முதலியவற்றைக் கண்ணெடுத்தும் பார்த்தானில்லை. இங்ஙனம் அரசர்களிலே வாழ்ந்துவிட்டு, இந்நிலவுலகினின்று மறைந்து போனான் மார்க்கஸ். கி. பி. 180 ம் வருஷம் மார்ச்சு மாதம் பதினேழாம் தேதி."[16]

சுருக்கமாகக் கூறினால் வள்ளுவர் கூறும் சீரிய அறப்பண்புகளை உள்ளடக்கிய மனிதனாகவும், குறள் கூறும் அரச நெறிகளைப் பின்பற்றிய மகா அரசனாகவும், குறள் காட்டும் சிறந்த இல்லறத்தானாகவும் மார்க்க அரேலியர் விளங்கினார் எனலாம். திருக்குறள் காட்டும் சிறந்த அறப்பண்புகளைக் கொண்ட தனி மனிதனாக மார்க்க அரேலியரைச் சுட்டிக் காட்டலாம். இத்தகைய சிறப்புமிக்க மார்க்க அரேலியரின் அறக்கருத்துக்கள், திருக்குறளின் அறக்கருத்துக்களுக்கு இணையாகக் கொள்ளப்படுவதில் வியப்பில்லை. இத்தகைய சிறப்புமிக்க அரேலியரின் அறக்கோட்பாட்டைக் குறளுடன் ஒப்பிட்டுக் காண்பதே இவ்வாய்வின் அடிப்படை நோக்கமாகிறது.

## 4. அறக்கருத்துக்கள்

திருக்குறள் ஒரே சமயத்தில் தனி மனிதனுக்கும், சமுதாயத்துக்கும் இன்றியமையாத அறநெறிகளை வகுத்துக் கூறுகிறு. திருவள்ளுவர் கி. மு. 31 இல் விண்ணுலகு அடைந்தார் எனும் மரபுவழிச் செய்தியினை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்ப் பேரறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு, திருவள்ளுவராண்டு கணக்கிடப்பட்டு வருகிறது. இப்போதைய திருவள்ளுவராண்டு 2030 ஆகும். திருவள்ளுவர் காலமாகிய கி.மு. முதல் நூற்றாண்டுக்குச் சுமார் 200 ஆண்டுகளுக்குப் பின் வாழ்ந்தவர் மார்க்க அரேலியர். திருவள்ளுவரின் திருக்குறள் பற்றித் தெரிந்திருக்க மார்க்க அரேலியருக்கு வாய்ப்பு இருந்திருக்குமோ என்று எண்ணுமளவிற்கு, இருவரின் அறக்கருத்துக்களும் ஒற்றுமைப்பட்டுள்ளன. திருவள்ளுவர் குறளில் அவரே கூறிய அறவாழ்வை, இல்லறவாழ்வை மேற்கொண்டவர் என்பதும், அவர் கால மன்னருக்கு நெருக்கமானவராக வாழ்ந்து, அரசியல் அனுபவம் பெற்றவர் என்பதும், சிறந்த கல்விமான் என்பதும், மிகுந்த பண்பு நலன்கள் கொண்டவராக வாழ்ந்தார் என்பதும், மரபுவழிச் செய்தியாக

ஏற்றுக்கொள்ளப்பட்டவை. இவையெல்லாம் மார்க்க அரேலியருக்கும் இருந்தது. ஒரே ஒரு வேறுபாடு மார்க்க அரேலியர் ஒரு பேரரசர். திருவள்ளுவரோ அவர் கால அரசியலில் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த ஒரு குடிமகன். உலகப் பொது நோக்கில் தம் சிந்தனைகளை அளித்துள்ளார். வாழ்க்கை நிகழ்ச்சிகளை எந்தவித எதிர்பார்ப்புமின்றி பொறுமையோடு ஏற்றுக் கொள்வதையும், இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதுவதையும் வள்ளுவரும், அரேலியரும் ஒருமித்த குரலில் போற்றுகின்றனர். எனவே ஒரு சில குறிப்பிட்ட கருத்துக்கள் மட்டும் இங்கு ஒப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

## 4.1 இறைக் கொள்கை

திருவள்ளுவர் இறையைப் பற்றி கூறும்போது பகவன், வாலறிவன், மலர்மிசை ஏகினான், வேண்டுதல் வேண்டாமை இலானடி சேரா இறைவன், பொறிவாயில் ஐந்தவித்தான், தனக்குவமை இல்லாதான், அறவாழி அந்தணன், எண்குணத்தான் என்றெல்லாம் குறிப்பிடுகிறார்.

அரேலியர் இறையைப் பற்றிக் கூறும்போது,

- "**கடவுளை எப்போதும் மனதில் நினைத்துப் பிறருக்கு உபகாரமாக வாழ். உனக்கு இன்பம் தருவதும், அமைதியை உண்டாக்குவதும் இது ஒன்றே" (ஆத்ம சிந்தனை, ப. 60)** என்றும்,
- "**பிரபஞ்சத்தில் ஒன்றைக் கொடுப்பதும், அதை மறுபடி வாங்கிக் கொள்வதும் இறைவனே, சகலமும் தெய்வாதீனமே. அதற்கு மாறாக ஓர் அணுவும் அசையாது" (ஆத்ம சிந்தனை, ப. 144)** என்றும்,
- "**உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களும் முழுமுதற் காரணத்திலிருந்து உண்டானவை" (ஆத்ம சிந்தனை ப. 71)** என்றும்,
- "**ஒருவருக்கொருவர் உபகாரம் செய்து வாழுமாறு கடவுள் நம்மைப் படைத்திருக்கிறார்" (ஆத்ம சிந்தனை, ப. 124)** என்றும் குறிப்பிடுகிறார்.

அறக்கடலாகிய இறைவனைச் சரணடைந்தோர், வாழ்வில் இன்பம் எய்தி, அமைதி பெற்று, மேலான வீடுபேற்றை அடைவர் என்பதை இவ்விருவரின் கருத்துக்கள் விளக்குகின்றன.

## 4.2 இல்லறம்

'அறவழியில் இல்வாழ்க்கை நடத்துபவன், தவத்தினால் பெறும் பயன் எதுவும் இல்லை' என்றும், 'இல்லறம், துறவறம் எனும் இரண்டிலும் சிறந்தது இல்லறமே ஆகும். அதிலும் துறவறம் பிறரால் பழிக்கப்படாது நடத்தப்பட்டால் இல்லறத்துடன் ஒத்த சிறப்பு பெறும்' என்றும், 'இல்லறத்தோடு கூடி வாழ்பவன் நிலவுலகத்தவனாயினும் தேவர்களுள் ஒருவனாக மதிக்கப்படுவான்' என்றும் வள்ளுவர் இல்வாழ்க்கையின் சிறப்பைக் கூறுகிறார்.

> **"அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்**
> **போஒய்ப் பெறுவ தென்" – (குறள் 46)**
>
> **"அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்**
> **பிறன்பழிப்ப தில்லாயின் நன்று" – (குறள் 49)**
>
> **"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
> **தெய்வத்துள் வைக்கப் படும்" – (குறள் 50)**

வள்ளுவரின் அறம் தனிமனிதனின் அற வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டது. ஒவ்வொரு தனிமனிதனின் குடும்ப வாழ்வு அறப்பண்புகளோடு சிறப்புற அமைந்தால், அது சீரிய பண்புகளைக் கொண்ட மனித சமுதாயத்திற்கு அடிப்படையாகும் என்பது வள்ளுவரின் குறிக்கோள். மார்க்க அரேலியரும் இக்கருத்தை வலியுறுத்துகையில்,

- **"உலக சம்சார வாழ்க்கையில் திருப்தி பெறாமல் அதைவிட்டு அகல்பவனும், அந்த வாழ்க்கைக்கு ஏலாதன ·செய்பவனும் உடலினின்று வெட்டி எறியப்பட்டதோர் உறுப்புப் போலாவான்" (ஆத்ம சிந்தனை, ப.71)** என்றும்,
- **"வாழ்வைக் காப்பது விவேகம்" (ஆத்ம சிந்தனை ப.176)** என்றும் கூறுகிறார்.

## 4.3 அறன் வலியுறுத்தல்

'ஒருவன் மனதில் குற்றமில்லாமல் இருப்பதே அறமாகும்' என்றும், 'பொறாமை, ஆசை, கோபம், கடுஞ்சொல் ஆகிய நான்கு தீக்குணங்களை வெறுத்து அவற்றை நீக்கிச் செய்வதே அறமாகும்' என்றும், 'பின்னால் பார்த்துக் கொள்ளலாம் என்று எண்ணாமல் நாள்தோறும் அறஞ்செய்க' என்றும் வள்ளுவர் அறன் வலியுறுத்தல் பற்றிக் குறிப்பிடுகிறார்.

"மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற" (குறள் 34)

"அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்ற தறம்" (குறள் 35)

"அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை" (குறள் 36)

குறள்களின் கருத்துக்களை ஒப்பிடும் வகையில் மார்க்க அரேலியர்,

- "அறவழியில் நீ நின்று உன் எண்ணமும், செயலும் ஒழுங்கு தவறாமல் இருந்தால் உன் வழி எளிதேயாகும்" (ஆத்ம சிந்தனை ப.56) என்றும்,
- "ஒப்புரவு, அடக்கம், பொறுமை, சினங்காத்தல்" (ஆத்ம சிந்தனை ப.101) ஆகியவையும், 'பதினாயிரம் ஆண்டுகள் வாழ்ந்திருக்கப் போவதைப்போல் வாழ்க்கையை நடத்த வேண்டாம். உயிருள்ளபோதே, அவகாசமிருக்கும் போதே உள்ளத்தைச் சுத்தப்படுத்திக்கொள்" (ஆத்ம சிந்தனை, ப.28) என்றும் அரேலியர் அறிவுறுத்துகிறார்.

## 4.4 தீவினையச்சம்

தீவினை பற்றி வள்ளுவர் கூறுகையில்,

- "தனக்கு இன்பம் தரும் என்று எண்ணி ஒருவன் செய்யும் தீய செயல்கள் பின் தீமையே தருவதால் அத்தகைய தீய செயல்கள் நெருப்பைக் காட்டிலும் கொடியன என்று அஞ்சி, அவற்றை விலக்க் வேண்டும்" என்று வள்ளுவர் கூறுவதற்கு இணையாக அரேலியரும் "செயல்கள் எதிலும் தீமை என்பது எதுவும் இல்லை. எச்செயல் ஆனாலும் தனக்கும், பிறருக்கும் எக்காலத்திலும் துன்பம் எழாதபடி பார்த்துக் கொண்டால் அதுவே அறவழியாகும்" என்கிறார்.
- "தீங்கிழைத்தவரிடமும் அன்பு பாராட்டுதலையே நல்லறம்" (குறள் 314) என்று வள்ளுவர் கூறுவதற்கு இணையாக அரேலியரும், "பிறர் செய்த தீமைக்குத் தகுந்த பிரதி அவரைப் போல் நாமும் தீமை செய்யாதிருத்தலே" (ஆத்ம சிந்தனை, ப.59) என்று கூறும் அரேலியர், "தீங்கிழைத்தவனிடமும் அன்பு செய்வது உன்தர்மம்" (ஆத்ம சிந்தனை ப.92) என்றும் கூறுகிறார்.

## 4.5 ஒழுக்கம்

ஒழுக்கம் பற்றி வள்ளுவர் கூறுகையில்,

- "ஒழுக்கத்தை உயிரினும் மேலானதாகக் கருதி, அதை ஒவ்வொரு மனிதனும் கடைப்பிடிப்பதே அறமாகும் (கு. 131) என்றும், 'நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்' (கு. 138) என்றும் வள்ளுவர் ஒழுக்கத்தின் மேன்மையை வலியுறுத்துகிறார்.
- "கொழுந்து விட்டெரியும் நெருப்பைப் போல் உன் மனத்தை வைத்துக்கொள்" (ஆத்ம சிந்தனை, ப.19) என்றும், "உன் பேச்சுக்களில் தைரியமும், சத்தியமும் பொருந்தி இருக்க வேண்டும். அப்போதுதான் சுகமாக இருப்பாய்" (ஆத்ம சிந்தனை, ப.17) என்றும் அரேலியர் ஒழுக்கத்தின் உயர்வைச் சுட்டிக் காட்டுகிறார்.

நல்லொழுக்கமும், நேர்மையுமே வாழ்க்கையில் மக்களின் குறிக்கோளாக இருக்க வேண்டும் என்று மார்க்க அரேலியர் தம் நூலில் பல இடங்களில் சுட்டிக் காட்டுகிறார்.

## 4.6 இன்ப துன்பம்

வள்ளுவரும், மார்க்க அரேலியரும் இன்ப துன்பங்களைச் சமமாக கருதுதல் வேண்டும் என்று கூறுகின்றனர்.

- "துன்பம் வரும்போது அதற்காகக் கலங்காமல் ஏற்றுக்கொள்ள வேண்டும்" (கு. 621) என்றும், "இன்பம் வந்த காலத்தில் அந்த இன்பத்தைப் பெரிதாக மதித்துப் போற்றாதவனுக்கு, துன்பம் வந்த காலத்தில் அத்துன்பத்தால் பாதிக்கப்படுவதில்லை" (கு. 629) என்றும், "ஒருவன் துன்பத்தையே தனக்கு இன்பமாகக் கருதிச் செய்வானானால் அவனுடைய பகைவரும் மதிக்கத்தக்க சிறப்பு உண்டாகும்" (கு. 630) என்றும் வள்ளுவர் கூறுகிறார்.
- "நேரும் சுகம் துக்கம் இரண்டையும் வருத்தமின்றி ஒப்புக்கொள்வதே ஞானம்" (ஆத்ம சிந்தனை, ப.10) என்றும், "இன்பம்–துன்பம், பிறப்பு–இறப்பு, புகழ்ச்சி–இகழ்ச்சி ஆகிய இந்தத் தத்துவங்களைச் சம உணர்ச்சியுடன் கருதுபவன் உயர்ந்தோன்" ஆவான். (ஆத்ம சிந்தனை, ப. 125) என்றும், "இன்பமும் துன்பமும் உன் மனத்துக்குள், உன் வசத்திலேயே இருக்கின்றன" (ஆத்ம சிந்தனை, ப. 74) என்றும் அரேலியர் கூறுகிறார்.

## 4.7 மனத்தூய்மை

வள்ளுவரின், **'மனம் மாசற்று இருத்தல் வேண்டும்"** (கு. 34) என்ற கொள்கையை அடியொற்றியே அரேலியரின் கருத்தும் அமைந்துள்ளது.

> **"உள்ளத்தைப் பரிசுத்தமாக்கிப் பயன்படுத்துவதே பெருமை. அதில்தான் சகல நற்பயனும் உண்டு, மற்றவை அனைத்தும் நிலையற்றவை, வெறும் புகையாய்ப் போகும்"** (ஆத்ம சிந்தனை ப. 179)

என்றும் அவர் அறிவுறுத்துகின்றார்.

## 4.8 பகைவனுக்கு அருளல்

கி.பி. 175ஆம் வருடத்தில் ஆசியாவில் ரோமத் தளபதியாக இருந்த 'கான்சியன்' என்பவன் அங்கு ஆட்சிக்கு எதிராகக் கலகம் செய்ததால் அவனை அரசனின் அதிகாரிகள் கொன்று விட்டனர். இதனை பின்னர் அறிந்த மார்க்க அரேலியர் மிகவும் வருந்தினார். "அவனை மன்னிப்பதால் வரக்கூடிய ஆனந்தம் கைநழுவிப் போய்விட்டதே என வருந்துகிறேன்" என்று சொன்னார். இத்தகைய நல்லெண்ணத்தோடு மாத்திரம் இல்லாமல் அத்தளபதியின் குடும்பத்தாரையும், நண்பர்களையும் மிகவும் அன்பாகவே நடத்தி தன் அருளுடைமையை விளக்கினார். இவருடைய 'சிந்தனைகள்' என்ற நூலில் பகைவனுக்கு அருள்வாய் நன்னஞ்சே எனப்படும் சீரிய கருத்துக்கள் மனித சமுதாயத்துக்கு எடுத்துச் சொல்லப்படுகின்றன.

> **"இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண**
> **நன்னயம் செய்து விடல்"** (கு. 314)

என்று வள்ளுவர் கூறும் பகைவனுக்கருளும் சிறப்பை, அரேலியர் வாழ்ந்து காட்டினார் என்பதை அவரின் 'சிந்தனைகள்' மூலம் அறிந்து கொள்ளலாம்.

## 5. நிறைவு

- ❖ 'வாழ்க்கை நெறியினை எந்தவித எதிர்பார்ப்பும் இல்லாமல் பொறுமையோடு ஏற்றுக் கொள்வதையும், இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதுவதையும் வள்ளுவரும் மார்க்க அரேலியரும் ஒரே கருத்துடன் வலியுறுத்திக் கூறுகின்றனர்.
- ❖ திருவள்ளுவரின் அறக்கோட்பாட்டைப் போலவே அரேலியரின் கருத்துக்கள் உயர்ந்த எண்ணங்களைக் கொண்டு அறிவையும், ஒழுக்கத்தையும், மனிதவள மேம்பாட்டையும் அடைய வலியுறுத்துகின்றன.
- ❖ மனிதன் தன்னைத்தானே உணர்ந்து, அந்த உணர்ச்சிகளின் அடிப்படையில் செயல்பட்டால், உலக ஒற்றுமை ஏற்படும் என்பதும், அப்போது ஒவ்வொருவரும் அறத்தின் சிறப்பை அறிந்து வாழ்க்கையில் இன்புறுவர் என்பதும் மார்க்க அரேலியரின் ஆழ்ந்த நம்பிக்கை.
- ❖ அரசனாய் அளவற்ற செல்வமும், மிகப் பரந்த நாடும், அவற்றால் கிடைக்கும் சுக அனுபவங்களும் தனக்கிருந்தும் அவைகளில் பற்றின்றி, தாமரை இலைத்தண்ணீர் போல் வாழ்ந்த அரேலியர் வாழ்வும், அவரது 'சிந்தனை'களின் சீரிய கொள்கைகளும் திருவள்ளுவரின் அறக்கோட்பாட்டிற்குள் முற்றும் அடங்கியவை.

## குறிப்புகள்


1. William Ebstein, Great Political Thinkers, P. 138
2. பொ. திருகூடசுந்தரம், இதய உணர்ச்சி, ப. 56
3. மேலது., ப. 6
4. மேலது., ப. 9
5. The Encyclopedia Americana, Volume-18, P.307
6. William Ebstein, Great Political Thinkers, P.138
7. Ibid., P.138
8. பொ. திருகூடசுந்தரம், இதய உணர்ச்சி, ப. 11
9. வெ. சாமிநாத சர்மா, சமுதாய சிற்பிகள், ப. 64

10. பொ. திருகூடசுந்தரம், இதய உணர்ச்சி, ப. 14
11. William G.Sinnigen, A History of Rome, P.319
12. William Ebstein, Great Political Thinkers, P. 141
13. The New Illustrated Columbia Encyclopedia, Volume-14, P.4208
14. Grolier Academic Encyclopedia, Volume-13, P.147
15. Compton's Encyclopedia, Volume-15, P.106
16. வெ. சாமிநாத சர்மா, சமுதாய சிற்பிகள், பக். 71, 72

## துணை நூல்கள்


| | |
|---|---|
| சாமிநாத சர்மா, வெ., | சமுதாய சிற்பிகள்,<br>மணிவாசகர் நூலகம்,<br>சிதம்பரம், 1980 |
| திருகூடசுந்தரம், பொ., | இதய உணர்ச்சி,<br>காந்தி நிலையம்,<br>சென்னை, 1951 |
| William Ebstein<br>Plato to the Present | Great Political Thinkers,<br>Oxford and IBH Publising Company,<br>Calcutta, 1966 |
| William G.Sinningen | A History of Rome A.D. 565,<br>Collier Maxmillan Publishers,<br>London, 1978 |
| Compton's Encyclopedia | Volume-15,<br>The University of Chicago, 1980 |
| Grolieer Academic Encyclopedia | Volume-13,<br>Grolier International, 1983 |
| The Encyclopedia Americana | Volume-18, Grolier Incorporated<br>International Headquarters,<br>Danbury, 1984 |
| The New Illustrated Columbia Encyclopedia | Volume-14,<br>Rockville House,<br>Publishers, Columbia,<br>New York, 1979 |


■

# கிறிஸ்தவ இறைக்கோட்பாட்டில் தந்தை பண்புருவாக்கம் *

பு. தங்கமாரியம்மாள்
இஸ்லாமியத் தமிழியல் துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை 625 021, இந்தியா

**ஆய்வுச்சுருக்கம்.** கிறிஸ்தவ சமயத்தின் தனித்தன்மை. தந்தையின் பண்புருவாக்கம் – மன்னித்தல், பாரபட்சமில்லாத நீதிபரர், பரிசுத்தத்தை விரும்பும் தூய நிலை, உலக இயக்கங்களுக்கு அப்பாற்பட்ட நிலை, அனைவரையும் பாதுகாத்து வழி நடத்துதல்.

**கருச்சொற்கள்.** கிறிஸ்தவ இலக்கியம்; திருவிவிலியம்; பரிசுத்தம்; நீதி; உலக இயக்கத்திற்கு அப்பாற்படல்; ஆசீர்வதித்தல்.

## 1. அறிமுகம்

சமயம் என்பது மெய்ப்பிக்கப்படாமல் ஏற்றுக் கொள்ளப்பட்ட நம்பிக்கைகளை அடிப்படையாகக் கொண்டது. மனிதன் தோன்றிய அன்றே சமயமும் தோன்றிவிட்டது. சமயத்தையும், மனிதனையும் என்றும் பிரிக்க இயலாது. மனிதனிடம் அறிந்தோ, அறியாமலோ ஊறிப்போன ஒரு நிலை என்று கூடச் சொல்லலாம். சமயம் என்ற சொல் 'சமைதல்' என்னும் அடிச்சொல்லிலிருந்து வந்தது. இதற்கு அமைதல் என்று பொருள். இந்த அடிப்படையில் நோக்கும் பொழுது,

* தமிழ் ஆய்வாளர் மன்ற புதன் வட்டக் கருத்தரங்கில் (நவம்பர் 25, 1998) படிக்கப் பெற்றது

சமயம் என்பதற்கு அமைப்பு என்ற பொருள் பொருந்தும். மக்களுடைய வழிபாடு, நெறிமுறைகள் முதலான அனைத்தையும் கொண்ட அமைப்பே சமயம் எனப்படுகிறது. உலக சமயங்கள் அனைத்தும் பொதுப்பண்புகளையும், சிறப்புப்பண்புகளையும் கொண்டுள்ளன. முதல் பண்பு இறைவன். பின் பொதுப்பண்புகளாக திருமறை, சமயம் சார்ந்த வரலாற்றுப் பின்னணிக்குரிய சமயக்குரவர்கள் இடம்பெறுவர். திருமறையும், திருச்சபையும் அவரைச் சார்ந்து அமைகிறது. எனவே கிறிஸ்தவ சமயம் இயேசுகிறிஸ்துவை முதன்மையாகக் கொண்டு தோன்றி, வளர்ந்து வாழுகின்ற சமயமாகும். கிறிஸ்தவ சமயத்தின் எல்லை விரிவானது. எனவே, கிறஸ்தவ இறைக்கோட்டில் தந்தையின் பண்புருவாக்கம் மட்டும் இக்கட்டுரையில் இடம் பெற்றுள்ளது.

இக்கட்டுரையின் செய்திகள் கிறிஸ்தவ சமயத்தின் திருமறை வேதமான திருவிவிலியத்தை அடிப்படை ஆதாரமாகக் கொண்டுள்ளது. திருவிவிலியத்தில் இடம் பெற்றள்ள திருமறை வசனங்கள் ஒவ்வொன்றும் ஏதாவது ஒரு விதத்தில், இறைப் பண்புகளுடன் தொடர்புற்று இருப்பதை அறியமுடிகிறது. இறைவனது பண்புகளைப் பல்வேறான நிலைகளில் விவரித்துக் காட்டும் திருவிவிலியத்தில் சில குறிப்பிட பண்புகளுக்கு முதன்மை நிலையிலும், முக்கியத்துவத்தையும் அளிப்பதைப் பார்க்க முடிகிறது. இவ்வகையில் திருவிவிலியத்தில் இடம் பெற்றுள்ள இறைப் பண்புகளுள், கிறிஸ்தவ சமயம் காட்டும் இறைவனது தனிப் பண்புகளாகச் சுட்டப்படும் தந்தையின் பண்புருவாக்கம் மட்டும் இக்கட்டுரையில் அமைந்துள்ளது. இக்கட்டுரையின் செய்திகள் பின் வரும் துணைத்தலைப்புகளில் தரப்பட்டுள்ளது. அவை,

- பரிசுத்தர்
- உலக இயக்க நிலைக்கு அப்பாற்பட்ட பண்பு,
- நீதிபரர்
- அருளும் ஆசியும் வழங்கும் பண்பு

என்பவை ஆகும்.

தந்தை என்பவர் குடும்பத்தின் தலைவராக மதிக்கப்படுபவர். குடும்பப் பொருப்புகள் அனைத்தையும் ஏற்றுக் கொண்டு, வழி நடத்துபவர் அவரே. அந்த வகையில் கிறிஸ்தவ சமயத்தின் தந்தையாக விளங்கும் இறைவன், தம் மக்களுக்கு வழி நடத்துகின்றவராகவும், அவர்களைக் காக்க கூடியவராகவும், பிள்ளைகள் தவறுகின்ற போது மன்னித்து ஏற்றுக் கொள்பவராகவும், எரிச்சலை உண்டாக்குகின்ற

போது தண்டிக்கிறவராகவும், இன்னான் இனியான் அதாவது, தன் பிள்ளைகளுக்குள் பாரபட்சமில்லால் காக்கின்ற தலைவராகவும், நீதி வழங்கும் இறைவனாகவும் இருக்கும் இறைப்பண்பு சுட்டப்படுகிறது. மேலும், அவர் பரிசுத்தத்தை விரும்பும் தூயவராகவும், இவை எல்லாவற்றிக்கும் மேலாக உலக இயக்கத்திற்கு அப்பாற்பட்ட பண்புடையவர். ஆசியும், அருளும் வழங்குகின்ற இரக்கமுள்ளவர். இதுபோன்ற இறைப்பண்புகள் இக்கட்டுரையில் விளக்கப்பட்டுள்ளது.

## 2. பரிசுத்தர்

பரிசுத்தம் என்பது தூய்மையைக் குறிக்கும் சொல்லாகும். பூரணமான சுத்தம் என்பதே இதன் பொருளாகும். அசுத்த நிலை இருக்கும் போதுதான் தூய்மை பற்றிய பேச்சு எழும். தவறுகள் நிகழாத, உயர்ந்த பண்பைத்தான் இறைப்பண்பாக கொள்ள முடியும். எந்தப் பண்பும் காரணமில்லாமல் சமயத்தில் இடம் பெறாது. இறைவன் தூய்மையானவன். தூயவராதலால், அவர் மனிதனின்றும், வேறு உலக இயக்கத்தினின்றும் அப்பாற்பட்டவராய் இருக்கிறார். (தூய்மை பற்றி) பரிசுத்தம் பற்றிய பண்பு எல்லாச் சமயங்களிலும் காணப்பட்டாலும், தூய்மை கிறிஸ்துவ சமயத்தின் இறைப்பண்பாக அமைந்து அதிக முக்கியத்துவத்தைப் பெறுகிறது. மக்கள் தான்தோன்றித்தனமாக அலைந்தமையால் தவறுகள் மலிந்திருந்த காலமானதால், மக்கள் இறைவன் வார்த்தைக்குக் கீழ்ப்படியாமல் இருந்தமையால், கடவுள் தன்னிடம் வருவதற்கும், தனது அருளைப் பெறுவதற்கும் தூய்மையை வலியுறுத்துகிறார்.

- **"எனக்கெனத் தூயவர்களாக இருப்பீர்களாக! ஏனெனில் ஆண்டவராகிய நான் தூயவராயிருந்து, நீங்கள் என்னுடையவர்களாக இருக்கும்படி உங்களைப் பாவங்களினின்று பிரித்தெடுத்தேன்."[1]**

- **"நான் உங்கள் ஆண்டவராகிய கடவுள், உங்களைத் தூய்மைப்படுத்தித் தூயவராயிருங்கள். ஏனெனில் நான் தூயவர்."[2]** மேலும் **"உங்களைத் தூய்மைப்படுத்திக் கொள்ளுங்கள்."[3]**

இவ்வாறாக அமைந்துள்ள இறைவசனத்தின் மூலம், இறைவன் பரிசுத்தத்தைக் கட்டாயப்படுத்துவதன் அவசியம் அக்காலத்தில் மக்கள் ஒழுக்கக் கேடுடையவர்களாய், இறைவார்த்தையை ஏற்றுக் கொண்டபோதிலும், அவற்றிக்குக் கீழ்ப்படியாதவர்களாய் தங்கள் மனம் போல் வாழ்க்கை நடத்தினர். எனவே இப்படிப்பட்டவர்களைக் கடவுள் நிராகரித்தார்.

> "எட்டி நில். என் அருகில் வராதே. நான் உன்னைவிட தூய்மையானவன்"[4]

என்கின்ற திருவசனம் தான் தூயவராக இருப்பதால் மனிதரிடம் தூய்மையை எதிர்ப்பார்க்கிறார்.

> "உன் கடவுளாகிய ஆண்டவர் நானே. இஸ்ரயேலின் தூயவரும், உன்னை விடுவிப்பவரும் நானே"[5]

என்றும் கூறுவதன் மூலம் பரிசுத்தத்தின் பண்புருவாக்கம் பெற்ற இறைவன், தூய்மையை மக்களிடம் வலியுறுத்துவதன் அவசியம் ஒழுக்கக்கேடு நிறைந்துள்ள சமூகத்தில் ஒழுக்கநிலை உருவாக வேண்டும் என்பதற்காகவே. தூய்மை மனித வாழ்க்கையை நல்வழிப்படுத்தும். இதனால் சமூகம் நலம் பெறும் என்று பயன்பாடு கருதி தூய்மை வலியுறுத்தப்படுகிறது. எனவே தந்தையாகிய தேவன் தூயவராய் இருப்பதால் மக்களையும் தூயவராக இருக்க வேண்டும் என்கிறார். அசுத்தம் களையத்தானே தூய்மை தேவைப்படுகிறது. சமூகத்தில் அசுத்தமாகிய தீயசெயல்கள், மலிந்துள்ள ஒழுக்கக்கேடுகள் களைவதற்கு 'தூய்மை' தந்தையின் உயர் பண்பாக போற்றப்படுகிறது.

## 3. நீதிபரர்

நீதி என்பது ஒருவர் சாராது, பாரபட்சமில்லாமல் துலாக்கோல் போன்று நடுநிலையில் தீர்ப்பு வழங்குவதாகும். தந்தையாகிய இறைவனும் அப்படிப்பட்டவரே. பரிசுத்தமாகிய பண்புருவாக்கம் பெற்ற இறைவனே நீதிபதியாகவும் இருப்பார். நீதிபதியாக பரிபாலனம் செய்கின்ற தகுதி தந்தைக்கு உரியது. தந்தை ஒரு பிள்ளைக்கு நல்லதையும், ஒரு பிள்ளைக்குக் கெட்டதையும் கொடுக்கமாட்டார். ஏனெனில் அவர் நீதிபரர். பட்சபாதமில்லாமல் நடத்துகின்ற பண்பு தந்தையுடையது. கடவுளுக்கும், மனிதனுக்குமுள்ள தொடர்புகளுக்கு நீதியே அடிப்படைக் காரணமாகிறது. அவரவர் செயல்களுக்குத் தக்க நீதியளிப்பதும் இறைவனே.

- "கடவுள் நீதிக்குக் காரணர்."[6]
- அவர் "நீதிபரர். எப்பொழுதும் நீதியாய் நடப்பவர்."[7]
- "யார்யாருக்குப் பரிவுகாட்ட விரும்புகிறேனோ, அவர்களுக்குப் பரிவு காட்டுவேன். யார் யாருக்கு இரக்கம் காட்ட விரும்புகிறேனோ, அவர்களுக்கு இரக்கம் காட்டுவேன்."[8]

மனிதனுடைய ஒவ்வொரு செயலும் அவனுடைய நிலையை எடுத்துரைக்கும். அதற்குரிய பலனை அடைவர்.

**"தினை விதைப்பவன் தினை அறுப்பான்",**
**"வினை விதைப்பவன் வினை அறுப்பான்."[9]**

நற்செயல் புரிந்தால் நற்பயனை அடைவர். அவரவர் நற்கிரியைகளின் நிமித்தம் நீதிபரராகிய கடவுளின் பரிவையும், இரக்கத்தையும் பெறுவர். எனவே ஒவ்வொருவரும் எண்ணங்களிலும், செயல்களிலும், தூய்மையுடையவராய் விளங்க வேண்டும். எண்ணங்கள் சரியாக இருக்குமாயின் செயல்களில் தவறு இருக்காது. இதனால் ஒருவனது செயல் பிறரைப் பாதிக்காது. மற்றவரைத் தீயவராய் எண்ணாது. பிறருக்குத் தீமை விளைவிக்காது. கடவுளுக்குரிய நேரான, நீதியுள்ள பாதையில் வழிநடத்தும். ஆகவே,

**"தீமையை உங்களிடமிருந்து கருவறுங்கள்."[9] "நியாயாதிபதி அவரே ஏனெனில் கடவுளிடமிருந்தே தீர்ப்பு வரும்."[10]**

தீமையை விட்டு விலகுங்கள் என்றும், நீதிபரராகவே காட்டப்படுவதன் காரணம் அக்கால மக்களிடம் மனித நேயமில்லை. கண்ணுக்குக் கண்; பல்லுக்குப் பல் என்று ஒருவரோடொருவர் சண்டையிட்டும், ஒரு இனத்தவர் மற்றொரு இனத்தாரை அடிமைப்படுத்தியும் வாழ்ந்தனர். எனவே இவையெல்லாம் இறைவனுக்குப் பிடிக்காத காரியமாகக் கருதினார். மனிதர்களுக்குள் வேறுபாடு தீமையை உருவாக்கும்வதற்கு வழிவகுக்கும். இதனால் மனித நேயம் மறையும். இதனால் ஒருவனது செயல் மற்றவனுக்கு பிடிக்காத போதும் சுமூகமான உறவு பாதிப்புடையும். தீயவனாக உருவாகக் கூடிய நிலையையும் ஏற்படுத்தும். எனவே பிறர் செய்ததை நாமும் திரும்பச் செய்தல் கூடாது. காரணம்,

- **"நான் உங்கள் நடுவே உலவுவேன். நானே உங்கள் கடவுள்! நீங்கள் என் மக்கள்!"[12]** மேலும்,
- **"ஆண்டவர் நீதியுள்ள நடுவராய் அரியணையில் வீற்றிருக்கின்றார். உலகிற்கு அவர் நீதியான தீர்ப்பு வழங்குவார்."[13]**

இறைவனுக்குரியது தீர்ப்பு வழங்குவது, அதை விடுத்து மனிதன் பதிலுக்குப் பதில் செய்தால் அதற்குரிய பலனை அவன்தான் அடைய வேண்டும்.

## 4. உலக இயக்க நிலைக்கு அப்பாற்பட்ட பண்பு

மக்களிடம் நம்பிக்கை பெற தன்னைப் பரிசுத்தமாக்கிக் கொள்கிறார். நம்பிக்கையூட்டிய இறைவன், மனிதன் தவறு செய்யும்போது அதை கண்டிக்கிறார். இதன் காரணமாக நீதிபரராக விளங்குகிறார். அப்படிப்பட்ட இறைவன் மனிதன் கண்டு, உணர்ந்து, அறிந்து கொள்ளக்கூடிய நிலையிலிருப்பானாயின் இறைவனும் தன் எல்லைக்குள் இருப்பதாகக் கருதி, அவரையும் தம் வசப்படுத்த மனிதன் முயற்சிப்பான். ஆகவே இறைவனாகிய தந்தை, உலக இயக்க நிலைக்கு அப்பாற்பட்டவனாக கிறித்தவம் காட்டுகிறது. பிள்ளைகளுக்குத் தேவையானவற்றைச் செய்து தரக்கூடிய ஆற்றல் தந்தையிடமே இருக்கிறது. கண்ணுக்குப் புலப்படாதவற்றை, உணர்வுகளுக்கெல்லாம் அப்பாற்பட்டதை இறைவனாகவும், இறை ஆற்றலாகவும் கொள்கிறோம். பரிசுத்தம், நீதி இவை இறைப்பண்பாயினும் இயக்கத்திற்கு அப்பாற்பட்ட சக்தியும் உள்ளது என நம்புகிறோம். இறைவனது எந்தப் பண்பும் காரணமில்லாமல் சமயத்தில் இடம் பெறாது.

கடவுள் அனைத்து ஆற்றலுமுடையவர். அவரது ஆற்றலுக்கு எல்லையில்லை. படைப்புகளுக்கெல்லாம் தனிப்பட்டவர். மக்களின் அறிவுக்கு எட்டாதவர். அவரை யாரும் இதுவரை கண்டதில்லை. காணப்போவதுமில்லை. மேலும், இறைவன் தன்னைப் பற்றிய திருவசனத்தில்,

> **"என் முகத்தையோ உன்னால் பார்க்க இயலாது. ஏனெனில் என்னைப் பார்த்த எவரும் உயிரோடிருக்க முடியாது"[14]**

என்கிறார். ஏனெனில் கடவுளைப் பற்றி மெய்ப்பிக்கப் படாமல் ஏற்றுக் கொள்ளப்பட்ட நம்பிக்கை தானே தவிர, அவரைக் கண்டவரில்லை. ஆக இறைவனின் தன்மைகளை உணரலாமே தவிர காண இயலாது. மனித ஆற்றலுக்கு அகப்படாதவர். மனிதனின் கைக்குள் அகப்பட்டு விட்டால் இறைவனுக்கு வரைமுறை தந்து, வரையறைபடுத்தி விடுவான். ஆகவே இன்றும் இறைவன் பற்றிய செய்திகள் மர்மம் பொதிந்ததாகவே இருக்கிறது. தந்தையாகிய

இறைவன், தான் தெரிந்து கொண்ட மக்களை வழிநடத்துகையில் உலக இயக்கத்திற்கு அப்பாற்பட்ட செயலைச் செய்கிறார்.

> **"அஞ்சாதீர்கள். நிலை குலையாதீர்கள். ஆண்டவர் தாமே உங்களுக்காற்றும் விடுதலைச் செயலைப் பாருங்கள்."[15]**

ஆண்டவர் கீழைக்காற்றை இரவு முழுவதும் வன்மையாக வீசச் செய்து, கடலை பின்வாங்க வைத்து, உலர்ந்த தரையாக்கினார். வலப்பக்கத்திலும், இடப்பக்கத்திலும் உள்ள நீர்த்திரங்கள், அவர்களுக்குச் சுவராக விளங்க, இஸ்ரேயல் மக்கள் கடல் நடுவே உலர்ந்த தரையில் நடந்து சென்றனர்.

> **"அவர்களை வழிநடத்த பகலில் மேகத்தூணும், இரவில் நெருப்புத்தூணும் மக்களை விட்டு அகலவே இல்லை."[16]**

இவ்வாறான நம்ப இயலாத இயற்கை கடந்த நிகழ்ச்சியை, இறைவன் ஒருவனால்தான் செய்ய இயலும். மனிதனால் இது ஆகாது. எனவே மனிதன் தன்னை மீறிய ஒரு இறைசக்தி உண்டென நம்புகிறான். இருப்பினும் மனிதன் இறைவனை மீண்டும் மீண்டும் சோதிப்பதில் ஒரு மகிழ்ச்சி கொள்கிறான். இறைவனின் தீர்ப்பையும் பெற்றுக் கொள்வான்.

இறைவன் தனக்கு எதிரான காரியங்களைச் செய்யும் போது தண்டனையையும் தருகிறார். இறைவனது ஆற்றலை அறிந்திருந்தும், மக்கள் அவரைக் கண்டும் மீண்டும் சோதித்தனர். எதிரியிடமிருந்து அவர், அவர்களை விடுவித்த நாளையும் மறந்தனர்.

> **"வேறினத்தார் அவரது மாட்சியைக் கண்டு மருள்வார்"[17]**

அப்படியெல்லாம் காத்து வந்த கடவுளின் நன்மையை மறந்து, அவருக்கு எதிராக பாவம் செய்தனர்.

> **"ஆண்டவருக்கு எதிராக முறுமுறுத்தனர். உங்கள் முறுமுறுப்புகள் ஆண்டவருக்கு எதிரான உலகத்தையே இயக்குவிக்கும் பண்புடைய இறைவன் தந்தை நிலையில், தன் பிள்ளைகள் தவறுகின்ற நிலையில் ஆறுதல் அளித்து ஏற்றுக்கொள்கிறார்."[18]**

மக்கள் அனைத்து நலன்களைப் பெற்றிருந்தாலும், தங்களுக்கு குறை ஏற்படும்போது கடவுளை எதிர்க்கின்றனர். தன் தேவைகள் நிறைவேறாமல் இருப்பதால் இறைவன் மீது கோபம் கொண்டு, இறை நம்பிக்கையைப் பிறர்மீது செலுத்துகின்றனர். அப்போது இறைவன் எதிரியாகிறார். மக்களைப் புறக்கணிக்கிறார்.

## 5. ஆசியும் அருளும் வழங்கும் பண்பு

தன் பிள்ளைகள் என்றும் நன்றாக இருக்க வேண்டும் என்பதற்காக ஒரு தந்தை ஆசியையும், அருளையும் வழங்குவார். உலக வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களையும், இன்ன பிற தேவைகளையும் தம் குழந்தைகளுக்காக நிறைவேற்றித் தருவார். அது போன்றே இறைவனாகிய தந்தை, தம் பிள்ளைகளென ஏற்று கொண்ட மக்களுக்கு இரக்கமுடையவராய் ஆசியும், அருளும் வழங்கி கருணையாளனாய் விளங்குவார். தவறு செய்தாலும் தந்தை தன் பிள்ளையை ஏற்றுக் கொண்டு அருள் செய்வார். ஆசீர் வழங்குதல் தந்தைக்குரிய பண்பு.

> **"பாவஞ்செய்யாத மனிதர் ஒருவருமில்லை."[19] இருப்பினும், "மனம் மாறி நாங்கள் பாவம் செய்தோம், நெறி தவறினோம், தீய வழியில் நடந்தோம் என்று விண்ணப்பம் செய்தால் தவறுகளை மன்னித்துக் கருணை காட்டுபவர்."[20]**

இவ்வாறு தந்தை தன் பிள்ளை மீது இரக்கம் காட்டுகிறார், அவர் மன்னிக்கும் பண்புடையவர். விண்ணையும், மண்ணையும் உண்டாக்கிய இறைவன், மிகுந்த இரக்கமுள்ளவர், நல்லவர். அவரை, கடவுளாக வழிபடுபவர்க்கு அவர் ஆசி வழங்குவார்.

> **"விண்ணையும், மண்ணையும் உண்டாக்கிய ஆண்டவர் உங்களுக்கு ஆசி வழங்குவார்."[21]**

உலகமக்களை, தாய், தந்தை. மறந்தாலும் இறைவன் மறக்க மாட்டார். தந்தை தன் பிள்ளைமீது இரக்கம் காட்டாதிருப்பாரோ? அவர்கள் உன்னை மறந்தாலும் நான் உன்னை மறப்பதில்லை. உலக வாழ்க்கையில், மனித சமுதாயத்தில் கெட்ட செயல்களும், பாவச்செயல்களும், இருக்கத்தான் செய்யும். அதையே கடைபிடிக்க கூடாது. அத்தவறை எண்ணி மனம் வருந்தி, இறைவனிடம் முறையிடும்போது தவறுகள் மன்னிக்கப்படும்; இறையருள் கிட்டும். தவறுகளுக்காக வருந்த வேண்டும். அப்பொழுதுதான் மன்னிப்பு பெற முடியும் என்பது மக்களின் சமூக நலனிற்காக, தவறுதல் மனித இயல்பு எனினும் தவறு செய்வதையே நோக்கமாகக் கொண்டு பாவம் செய்தாலும் அதற்காக மனம் வருந்தி இனி செய்யாதிருக்க முயற்சிக்கும் போதும் இறை ஆசியையும், அருளையும் பெறலாம்.

இறைவார்த்தைக்குப் பயந்து நடப்பவர்களிடத்து இறை ஆசி எப்பொழுதும் நிலைத்திருக்கிறது. அவர்களைத் தம் மக்களெனக் கொள்கிறார். அவர்களுக்கு செழுமையான வாழ்க்கையைத் தந்து சிறப்புச் செய்கிறார்.

> **"நிலத்தில் விதைத்துள்ள விதை மீது ஆண்டவர் மழைபொழிவார். நிலத்தின் விளைவான உணவு செழுமையாகவும், முழுமையாகவும் இருக்கும்."**[22]

தன்னை இறைவனாக ஏற்றுக்கொண்டு தனக்கு கீழ்படிந்தவர்களுக்கு மழையைப் போன்று, மழை எவ்வாறு பயிர்களுக்குச் செழுமையைத் தருமோ அத்தகைய செழுமையான வாழ்க்கையைக் கட்டளையிடுகிறார்.

## 6. நிறைவு

- ❖ தந்தையாகிய ஆண்டவர் நீதிபரராகவும், நீதியுள்ள நியாதிபதியாகவும், நடுவராகவும், எதிரிகளுக்கு பட்சிக்கிற அக்னியாகவும், பாவத்திற்கு எதிரானவராகவும் விளங்குகின்றார்.

- ❖ தூய்மையை விரும்பி ஏற்றுக்கொண்ட இறைவன், தூய்மை மக்கள் வாழ்க்கைக்கு அவசியம் என தூய்மையை வலியுறுத்துபவராகவும் விளங்குகின்றார்.

- ❖ தனக்குக் கீழ்ப்படிந்தவர்களுக்கு, செழுமையைக் கட்டளையிடுபவராகவும் விளங்குகின்றார்.

## குறிப்புகள்

1. திருவிவிலியம், லேவி, 20:21
2. மேலது., 12:44
3. எண், 11:18
4. ஏசா, 65:5
5. மேலது., 43:3

பு. தங்கமாரியம்மாள்

6. யோபு, 37:23
7. சாப், 11:7, 89:14
8. விடு.ப., 33:19
9. இணை, 13:5
10. திரு. பா, 75:7
11. லேவி, 26:12
12. திரு. பா, 9:7
13. விடு. ப., 33:21
14. விடு. ப., 14:13
15. விடு. ப., 14:21, 22
16. விடு. ப., 13:22
17. திரு. பா., 102:16
18. விடு. ப., 16:8
19. அர., 8:46, 47, 49
20. திரு. பா., 134:3
21. ஏசா., 49:15
22. ஏசா., 30:23

## துணை நூல்கள்


பால் இம்மானுவேல், கிறிஸ்து நெறி மீட்புக் கொள்கை, தமிழ் இறையியல் நூலோர் குழு, மதுரை, 1985

மனுவேல், ஆ. தே., சிலுவையின் நிழலில், தமிழ் இறையியல் நூலோர் குழு, மதுரை, 1987

பரிசுத்த வேதாகமம், இந்திய வேதாகமச் சங்கம், பெங்களூர், 1965

பரல்கள் 12, சனவரி 1999, பக். 153 – 162, ⓟ தமிழ் ஆய்வாளர் மன்றம், மதுரை

# திருக்குர்ஆனில் வரலாற்று நிகழ்ச்சிகள் *

ச. ஆமினாபர்வின்
இஸ்லாமியத் தமிழியல் துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை 625 021, இந்தியா

ஆய்வுச்சுருக்கம். திருக்குர்ஆனில் வரலாற்று நிகழ்ச்சிகள். திருக்குர்ஆன் காலத்திற்கு முந்தைய கால சமூகத்தவர். அவர்களுக்கு இறக்கப்பட்ட இறை வேதங்கள்; இறை தூதர்கள் பற்றிய வரலாற்று நிகழ்ச்சிகள். இதன்வழி தவறான மனிதர்களை எச்சரித்தல்.

கருச்சொற்கள். இஸ்லாமிய இலக்கியம்; திருக்குர்ஆன்; வேதம் இறக்கப்பட்ட, இறக்கப்படாத நபிமார்கள்; இறை வேதங்கள்.

## 1. அறிமுகம்

திருக்குர்ஆன் ஏறத்தாழ 1500 ஆண்டுகளுக்கு முன் அரேபியா தேசத்தில் இறைவனால் முகம்மது நபி (ஸல்) அவர்களுக்கு, வானவர் தலைவர் ஜிப்ரயீல் மூலமாக இறக்கப்பட்ட இஸ்லாமிய மறை வேதமாகும். இத்திருக்குர்ஆன் வசனங்கள் 6666ம் மனிதனுக்கு நன்மை தரும் செயல்களைச் சுட்டிக்காட்டுவதாகவே உள்ளன. திருக்குர்ஆன் உரையாடல் பாணியில் அமைந்துள்ள வேதமாகும். இதன் வசனங்கள் ஏக இறைக்கொள்கையை வலியுறுத்துவதாக அமைந்துள்ளன. இவ்வசனங்கள் நேரடியாக மனிதர்களுக்கு விசயத்தைக் கூறாமல், சில

* தமிழ் ஆய்வாளர் மன்ற புதன் வட்டக் கருத்தரங்கில் (டிசம்பர் 16, 1998) படிக்கப் பெற்றது

எடுத்துக்காட்டுகளைக் கூறி, அதன் மூலம் மனிதர்களுக்கு நற்செய்திகளை உணர்த்தத் தலைப்படுகின்றது. இது இறுதி வேதமாகும். இதில் திருக்குர்ஆன் பூரணத்துவம் பெறுவதற்கு முன்பு, பல்வேறான காலகட்டங்களில் இறையாணைகள், பல்வேறான இறை தூதுவர்களுக்கு இறக்கப்பட்டுள்ளது. இவை அனைத்தும் இஸ்லாம் சமய வரலாற்றில் முக்கியத்துவம் வாய்ந்த வரலாற்று நிகழ்ச்சிகளாக குறிக்கப்படுகின்றன. இஸ்லாம் சமயம் பூரணத்துவம் பெறுவதற்கு முந்தைய காலகட்டங்களில் நடைபெற்ற இத்தகு வரலாற்று நிகழ்ச்சிகள் பல்வேறான உண்மைகளை, அந்தந்த காலகட்டத்து மக்களுக்கு உணர்த்துவதற்காக அருளப்பட்டுள்ளன. இவை 'ஸீஹீபுகள்' (வேதத்திற்கு முன் இறக்கப்பட்ட இறை அறிவிப்புகளின் தொகுப்பு) என அழைக்கப்படுகின்றன. இவற்றின் முக்கியத்துவம் கருதி, இவை பற்றிய பல செய்திகள் அந்தந்த காலத்து இறைத்தூதுவர்களின் வரலாற்று குறிப்புகளுடன் இறுதிவேதமாம் திருக்குர்ஆனில் இடம் பெற்றுள்ளன.

எனவே திருக்குர்ஆன் திருவசனங்களில், பல்வேறான வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த கருத்துக்கள் பரவலாக இடம் பெற்றுள்ளன என்றே கூற வேண்டும். இவ்வரலாற்றுச் செய்திகள், அதில் இடம் பெற்றிருக்கும் இறைத் தூதுவர்களின் வாழ்க்கை குறிப்புக்கள் ஆகியவற்றை முழுமையாக உணரும் போதே அந்தந்த திருவசனங்களினுடைய முக்கியத்துவமும், அவை எந்த கருத்துப் புலப்பாட்டிற்காக இறக்கப்பட்டுள்ளன என்பதையும் அறிந்து கொள்ள முடியும். இவ்வகையில் திருக்குர்ஆனில் இடம் பெற்றுள்ள வரலாற்று நிகழச்சிகள் சுருக்கத்தை விவரிப்பதே இக்கட்டுரையின் நோக்கம். இக்கட்டுரையின் செய்திகள் இதன் நோக்கத்திற்கேற்ப பின்வரும் துணைத் தலைப்புகளில் விவாதம் செய்யப்பட்டுள்ளன.

- **திருக்குர்ஆனில் வரலாற்று நிகழ்ச்சிகள் இடம் பெற்றுள்ளதற்கான காரணமும், உணர்த்தும் விதமும்.**
- **திருக்குர்ஆனில் வரலாற்று நிகழ்ச்சிகள் மூலமாக உணர்த்தப்படும் நபிமார்கள் பற்றிய குறிப்புக்கள்.**

திருக்குர்ஆன் முகம்மது நபி (ஸல்) அவர்களுக்கு இறக்கப்பட்ட இறுதிவேதமாகும். முகம்மது நபிக்கும், திருக்குர்ஆன் வேதத்திற்கும் முன்னர் பல வேதங்கள் இறக்கப்பட்டுள்ளன. பல நபிமார்கள் இப்பூமியில் இறைவனால் இறக்கப்பட்டிருக்கின்றார்கள். இது பற்றிய செய்திகள் திருக்குர்ஆனில் பல இடங்களில் காணப்படுகின்றன.

முகம்மது நபிக்கு முன், லட்சத்து இருபதாயிரம் நபிமார்கள் தோன்றியுள்ளதாக இஸ்லாமிய வரலாற்றுக் குறிப்புகள் கூறுகின்றன. திருக்குர்ஆனில் இது பற்றிய யாதொரு குறிப்பும் இல்லை. ஆனால்

முகம்மதுவிற்கு முன் வாழ்ந்த இருபத்துநான்கு நபிமார்கள் பற்றிய செய்திகள் மட்டும் திருக்குர்ஆனில் கூறப்பட்டிருக்கின்றது. அவர்களாவன:

| | | | |
|---|---|---|---|
| ◆ ஆதம் | ◆ யாகூப் | ◆ மூஸா | ◆ யூனுஸ் |
| ◆ நூஹ் | ◆ யூசுப் | ◆ ஹாரூன் | ◆ இல்யாஸ் |
| ◆ இத்ரீஸ் | ◆ லூத் | ◆ தாவூத் | ◆ அல்யாஸ் |
| ◆ இப்ராஹீம் | ◆ ஹூத் | ◆ சுலைமான் | ◆ ஜகரிய்யா |
| ◆ இஸ்மாயில் | ◆ ஸாலிஹ் | ◆ ஐயூப் | ◆ யஹ்யா |
| ◆ இஸ்ஹாக் | ◆ ஷூஐபு | ◆ துல்கிப்லு | ◆ ஈஸா |

.இவர்களில் வேதம் இறக்கப்பட்ட நபிமார்கள் என்று நால்வரை மட்டுமே திருமறை சுட்டுகின்றது. (மூஸாவிற்கு தெளராத் வேதமும், தாவூத் நபிக்கு ஜபூர் வேதமும், ஈஸாவிற்கு இன்ஜீல் வேதமும், முகம்மது நபிக்கு திருக்குர்ஆன் வேதமும் இறக்கப்பட்டுள்ளது என்று திருக்குர்ஆன் சுட்டுகின்றது).

திருமறை மனிதனுக்குத் தேவையான அறிவுரைகளை, அவன் வாழ்வதற்கான வழிமுறைகளைச் சுட்டுகின்றது. மனிதன் ஏக இறைநம்பிக்கை கொண்டவனாய் இறையச்சத்தோடு, இறை உவப்பான காரியங்களையே செய்ய வேண்டும். இது அவனுக்கும், அவன் சார்ந்த சமூகத்திற்கும் நன்மை பயக்கும். மேலும் அவனது இறுதித்தீர்ப்பு நாளில் அவனுக்கு சுவர்க்கத்து வாழ்வைப் பெற்றுத்தரும் என்கிறது திருக்குர்ஆன். எனவே மனிதன், இறைவனுக்கு மாறு செய்பவனாய் இருத்தல் கூடாது என்று எச்சரிக்கின்றது. இறை எச்சரிக்கையை மீறி, மாறுசெய்வனுக்குத் தகுந்த தண்டனை அளிக்கப்படும் என்பதும் திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ளது. இறை நிராகரிப்புச் செய்து, இறைவனை இகழ்ந்தவருடைய நிலைமைப் பற்றியும் திருமறையின் பல வசனங்கள் பேசுகின்றன. வெறும் அறிவுரைகளையும், கட்டளைகளையும் தொடர்ந்து கூறிக்கொண்டே சென்றிருந்தால் அதனை ஓதும் மனிதனின் ஆர்வம் குறைந்துவிடும். கவனம் சிதறிவிடும் என்பதால் இடையிடையே முன்னர் வாழ்ந்த சமூகத்தவர் பற்றியும், அவர்களுக்கு வழிகாட்ட வந்த நபிமார்கள் பற்றியும் கதைப்போக்கில் திருக்குர்ஆன் செய்திகளைத் தருகிறது. இந்தச் செய்திகள் மனிதர்களின் கவனத்தை ஈர்ப்பதாக, ஆழ்ந்து படிக்கும் ஆர்வத்தைத் தோற்றுவிப்பதாக உள்ளன. இச்செய்திகள் மூலம் இறைநிராகரிப்புச் செய்தவரை இறைவன் தண்டிப்பான். எனவே இச்செயலை விட்டு உங்களைத் தடுத்துக் கொள்ளுங்கள் என்று திருமறை எச்சரிக்கை செய்கின்றது. முன்னர் வந்த சமூகங்களில் இறை நிராகரிப்புச் செய்து தண்டனைக்குள்ளான பிர்அவன்

கூட்டத்தார் பற்றியும், வரலாற்றுச் சிறப்புமிக்க சில போர் நிகழ்ச்சிகள் குறித்தும் திருமறை கருத்துரைக்கின்றது

## 2. திருக்குர்ஆனில் வரலாற்று நிகழ்ச்சிகள் மூலமாக உணர்த்தப்படும் நபிமார்கள் பற்றிய குறிப்புகள்

திருக்குர்ஆன், வேதம் இறக்கப்பட்ட நபிமார்கள் நால்வர் என்றும், ஏனையோர் இருபதுபேர் என்றும் சுட்டுகின்றது. இனி அவர்களைப் பற்றிய குர்ஆனின் வசனங்களையும், அவர்களின் கருத்துக்களையும் காண்போம்.

### 2.1 வேதம் இறக்கப்பட்ட நபிமார்கள்

மூஸா (அலை) தௌராத் வேதமும், தாவூத் நபிக்கு ஜபூர் வேதமும், ஈஸாவிற்கு இன்ஜீல் வேதமும், முகம்மது நபிக்கு திருக்குர்ஆன் வேதமும் இறக்கப்பட்டுள்ளது.

### 2.2 திருக்குர்ஆனில் மூஸா நபி பற்றிய குறிப்புகள்

> **''மூஸா சமூகத்தவர்கள் 'மூஸா' தம்மிடையே இறைத்தூதராக அனுப்பப்பட்டிருக்கிறார் என்று தெரிந்தும், அவரை நிராகரித்து, இறைவனுக்கு இணையாக காளைக்கன்றை வைத்து வழிப்பட்டனர். இதனை மூஸா (அலை) பலமுறை எச்சரித்தும், அது பற்றி அவர்கள் கவலை கொள்ளவில்லை. மேலும் பல அத்தாட்சிகள் வரப்பெற்ற பின்னரும் அவர்கள் நிராகரிப்புச் செய்ததனால் இறைவன் அவர்களுக்குத் தண்டனை அளிக்கின்றான்."[1]**

இச்செய்தி திருக்குர்ஆனில் சுட்டப்பட்டுள்ளது. இதன் காரணமாக முகம்மது நபி காலத்து சமூகத்தவருக்கு அறிவுரை கூறப்படுகின்றது. இணைவைத்தலை விட்டு தம்மைக் காத்துக்கொள்ள வேண்டிய முகம்மதுவிற்குப் பின் வருகின்ற சமூகத்தவரையும் இது எச்சரிக்கின்றது.

> **"இவர்கள் அல்லாஹ்வை மதிக்க வேண்டிய முறையில் மதிக்கவில்லை. ஏனெனில் அவர்கள் அல்லாஹ் எந்த ஒரு மனிதர் மீதும், எந்த வேதத்தையும் இறக்கவில்லை என்று கூறுகின்றனர். அவர்களிடத்தில் நீர் கூறும் பிரகாசமானதாகவும், மனிதர்களுக்கு வழிகாட்டியாகவும் மூஸா கொண்டு வந்தாரே அந்த வேதத்தை இறக்கியவன் யார்? அதனை நீங்கள் தனித்தனி ஏடுகளாக ஆக்கி, அவற்றில் சிலவற்றை வெளிப்படுத்துகின்றீர்கள்; பெரும்பாலானவற்றை மறைத்தும் விடுகின்றீர்கள். அவ்வேதத்தின் மூலமாகவே நீங்களும் உங்கள்**

**மூதாதையர்களும் அறியாமல் இருந்தவைகளை எல்லாம் கற்றுக்கொடுக்கப்பட்டீர்கள்."** [2]

இவ்வசனம் மூஸாவிற்கு இறக்கப்பட்ட வேதமாகிய தௌராதை நம்பாது அதில் குழப்பங்கள் விளைவித்த மனிதர்களைப் பற்றி பேசுகின்றது. இதன்மூலமாக முகம்மதுவின் காலத்தில் வாழ்ந்த மறுப்பாளர்களுக்கு அறிவுரை கூறப்படுகின்றது. வருங்கால சந்ததியினரும், வேதத்தில் குழப்பத்தை விளைவிக்கக் கூடாது என்று எச்சரிக்கை விடுகின்றது இவ்வசனம்.

## 2.3 தாவூத் நபி பற்றிய செய்தி

தாவூத் நபிக்கு இறைவன், இறைத்தூதர் என்ற பட்டத்தை நல்கினான். அவருக்கு ஜபூர்வேதமும் கொடுக்கப்பட்டது. அன்றைய காலகட்டத்தில் இதனை ஏற்காது மறுத்தவர்களின் கூட்டத்தின் தலைவனாக ஜாலூத் என்பவன் இருந்தான். இவன் ஒரு படையுடன் வந்து தாவூது நபியை எதிர்த்தான்.

**"இப்படையை வென்று, அரசுரிமை பெரும் ஞானத்தை இறைவன் தாவூத்துக்கு அளித்தான். மேலும் தான் விரும்பியவற்றையெல்லாம் இறைவன் அவருக்கு அளித்தான்."** [3]

இவ்வசனம் இறைத்தூதராகிய தாவூத் இறைவன் மீது கொண்ட நம்பிக்கையால் பெற்ற பலன் குறித்தும், அவருக்கு எதிராக இறைநிராகரிப்புச் செய்த ஜாலூத் தோற்கடிக்கப்பட்டமைக் குறித்தும் கருத்துரைக்கின்றது. இதனால் இறைவன், நல்லோர்களை வாழவைப்பான், தீயவர்களை அழித்துவிடுவான் என்ற எச்சரிக்கை திருக்குர்ஆனை ஓதக்கூடிய அனைத்து மனித குலத்திற்கும் கூறப்படுகின்றது.

## 2.4 ஈஸா பற்றிய குறிப்பு

மர்யமின் குமாரரான ஈஸாவிற்கு இறைத்தூதர் என்ற பணியை இறைவன் அளித்தான். அவருக்கு இன்ஜீஸ் எனும் வேதத்தையும் இறைவன் அளித்தான். ஆனால் அன்றைய நிலையில் வாழ்ந்த இறைநிராகரிப்பாளர்கள் அவரைக் கொன்று தம் கரங்களைப் பாவப்படுத்திக் கொண்டனர். இதனைத் திருக்குர்ஆன்,

**"இன்னும் மர்யமின் குமாரர் ஈஸாவிற்கு தெளிவான அத்தாட்சிகளைக் கொடுத்து ரூஹீல்குதுஸி என்னும் பரிசுத்த ஆன்மாவைக் கொண்டு வலுவூட்டினோம். உங்கள் மனம் விரும்பாததை நம் தூதர் உங்களிடம் கொண்டு வரும்போதெல்லாம் நீங்கள் கர்வம் கொண்டு, புறக்கணித்து வந்தீர்களல்லவா? சிலரைப் பொய்ப்பித்தீர்கள், சிலரைக் கொன்றீர்கள்."** [4]

என்கிறது. இதன் மூலமாக முகம்மதுவின் சமூகத்திற்கு இவ்விதமான பாவகாரியத்தினைச் செய்து, உங்களை நீங்கள் பாவதாரிகளாக்கிக் கொள்ளாதீர்கள் என்று எச்சரிக்கை செய்வதாக உள்ளது.

வேதம் இறக்கப்பட்ட நபிமார்கள் என்ற வரிசையில் திருக்குர்ஆன் வேதம் இறக்கப்பட்ட முகம்மது நபியே நான்காவதாக இருக்கின்றார். இவர் பற்றிய செய்திகளும், இவர் காலத்து மக்களுக்குரிய அறிவுரைகளும் இவ்வேதம் முழுவதிலும் பரவலாக கூறப்பட்டிருக்கின்றது.

## 3. வேதம் இறக்கப்படாத நபிமார்கள் பற்றிய கருத்துக்கள்

வேதம் இறக்கப்பட்ட மூஸா, ஈஸா, தாவூத், முகம்மது தவிர ஏனைய நபிமார்கள் இருபது பேர்களுக்கும் இறைக்கட்டளைகளை இறைவன் இறக்கியுள்ளான். இந்த இறைக்கட்டளைகளை 'ஸீபுஹ்' என்று திருமறை கூறுகின்றது. ஸீபுஹ் இறக்கப்பட்ட நபிமார்கள் பற்றிய குறிப்பும் திருமறையில் காணப்படுகின்றது.

### 31 ஆதம் நபி பற்றிய வரலாறு

திருக்குர்ஆனில் இறைவன் படைத்த முதல் மனிதனான ஆதம் (அலை) பற்றிய பல செய்திகள் காணப்படுகின்றன. இறைவன் மனிதனைப் படைக்க முனையும்போது மலக்குகள் "யாஅல்லாஹ்" உன்னை வழிபட்டு நடக்க நாங்கள் இருக்கும்போது, மண்ணில் குழப்பங்ளை விளைவிக்கக்கூடிய மனிதனையா படைக்க எண்ணுகிறாய் என்று வினவுகிறார். இறைவன் மலக்குகளின் வார்த்தைகளையும் மீறி, ஆதமை மண்ணால் படைக்கின்றான். மண்ணால் படைக்கப்பட்ட ஆதமுக்கு ஸீஜீது செய்யும்படி மலக்குளை ஏவுகின்றான். இப்லீசு தவிர ஏனையோர் ஸீஜீது செய்கின்றனர். இப்லீசு இறைவனுக்கு மாறு செய்தவனாக இருப்பதால் அவன் காபிர்களின் கூட்டத்திற்குத் தலைவனாக்கப்படுகின்றான். இந்த இப்லீசுதான் இன்றைய நிலையிலும் இறைவனுக்கு எதிரான அனைத்து செயல்களுக்கும் தூண்டுகோலாக, ஆதரவளிப்பவனாகக் கருதப்படுகின்றான். ஆதமின் விலா எலும்பிலிருந்து ஹவ்வா(அலை)வையும் படைத்த இறைவன், அவர்களை அனைத்து வசதியோடு சுவர்க்கத்தில் வைத்திருக்கின்றான். ஒரு மரத்தின் கனியை மட்டும் புசிக்க வேண்டாம் என்று தடுத்திருக்க, சைத்தானின் தூண்டுதலால் அவர்கள் அதனை உண்டு, இறைத்தண்டனையைப் பெற்று, பூமிக்கு அனுப்பப்படுகின்றனர். இந்த வசனங்கள் ஆதமிற்கும், ஹவ்வாவிற்கும் இறைவனது கட்டளையை மீறியதால் ஏற்பட்ட விளைவுகளைக் கூறுவதாக உள்ளது. இவ்வசனங்கள் தொடர்ந்து வரும் சமூகங்களுக்கும் இறைக்கட்டளைகளை மீறுவதால் ஏற்படும் நஷ்டங்களைப் பற்றி எச்சரிப்பதாக உள்ளது.

முகம்மது நபியின் காலத்தில் வாழ்ந்தவர்களில் சிலர், தாம் முன்னர் வந்த நபிமார்களின் சமூகத்தவர்களே என்றும், அவர்களின்

வழிகாட்டுதலிலேயே தாம் செல்கின்றோம் என்றும் உரைத்தனர்.

> **"இப்ராஹீமும், இஸ்மாயிலும், இஸ்ஹாக்கும், யாகூபும் எங்கள் மூதாதையரே என்றும், கிறித்தவர்களும் யூதர்களும் கூறுகின்றனர். ஆனால் அவர்தம் கொள்கைக்களைப் பின்பற்றுபவர்களாக இல்லை, இது தவறான போக்கு என்பதைச் சுட்டிக் காட்டுவதற்காக நபிக்கு வசனம் இறக்கப்பட்டது."** [5]

இந்த வசனம் உலகத்தில் தொடர்ந்து வருகின்ற அனைத்து சமூகத்தினருக்கும் எச்சரிக்கை செய்வதாகவே உள்ளது.

தாம் இறைவனால் அனுப்பப்பட்ட இறைத்தூதரையே பின்பற்றுகிறோம் என்று கூறிக்கொண்டு, ஏக இறைக்கொள்கைக்கு மாறு செய்தவரை இறைவன் தண்டிப்பான் என்று எச்சரிப்பதாக இவ்வசனம் உள்ளது.

சுலைமான் காலத்தில் வாழ்ந்த மனிதர்கள், சுலைமானுக்கு எதிராக சைத்தான் கற்றுக் கொடுத்ததையே ஓதினார்கள். ஆனால் சுலைமானைக் காரணம் கற்பித்தனர்.

> **"சுலைமான் ஒரு போதும் இறைவனை நிராகரித்தவர் அல்லர். சைத்தானைப் பின்பற்றுவோர்களே இறை நிராகரிப்புச் செய்பவர்களாவர். இதனால் யாதொரு பலனும் இல்லை என்று அறிந்தும் இதனைச் செய்கின்றனர்."** [6]

இவ்வசனம் இறைவனையும், நபியையும் சாட்சி என்றுரைத்து அதற்கு மாறு செய்வோரை நோக்கி எச்சரிக்கை செய்வதாக உள்ளது.

> **"ஜக்கரியா (அலை) இறைவனிடம் மனமுருகி வேண்டுகின்றார். ஒரு நல்ல சந்ததியை வழங்க வேண்டுமாய் இறைஞ்சுகிறார். இறைவன் அவரின் வேண்டுதலுக்குச் செவிமடுத்து யஹ்யா (அலை) உருவாகச் செய்கின்றான்."** [7]

இவ்வசனம் இறைவனிடம் முழுமனதோடு பிராத்திப்பவனின் வேண்டுதலை, இறைவன் ஏற்று நிறைவேற்றி வைக்கிறான் என்பதைக் கூறுகின்றது. இறைவனிடம் வேண்டுவது இறைஉவப்பான செயலாகும். எனவே இறைநம்பிக்கை கொண்டோர், இறைவனிடம் வேண்டுதல் அவசியமென்கிறது இவ்வசனம். இறைநேசர்களின் சந்ததியினரையும் இறைவன் மேலானவர்களாய் ஆக்கிவைப்பான். இவர்கள் யாவரையும் உலகத்தாரில் எல்லாம் மேலானவர்களாய் ஆக்கிவைத்தான். இறைவன் தன்னை நாடியவர்களை மேன்மைப்படுத்தி வைக்கின்றான். இவர்கள் யாவரும் ஸாலிஹானவர்களே. எனவே நல்லோர்களான இந்நபிமார்களின் வழியைப் பின்பற்றுவீர்களாக. இது உங்களுக்கு நன்மையையும், நல்மாராயத்தையும் பெற்றுத்தரும் என்று இவ்வசனங்கள் எடுத்துக் கூறுகின்றன.

## 3.2 ஷீஐபு பற்றிய செய்தி

மத்யன் நகரவாசிகளிடம் ஷீஐபு தூதராக அனுப்பப்பட்டார். அவர் அம்மக்களிடத்து நல்லோராய் வாழச்சொல்லி நன்மாராயங் கூறினார்.

> **"எடையை நீதமாகவும், அளவையை ஒழுங்காகவும் செய்யுங்கள். உலகில் குழப்பங்கள் தீர்க்கப்பட்டால் மீண்டும் குழப்பத்தை விளைவிக்காது. உண்மை முஸ்லீம்களாய் இருங்கள் என்று கூறுகின்றார்."** [8]

இதே போன்றுதான் முகம்மது நபியின் சமூகத்தவருக்கும் உரைக்கப் படுகின்றது. அவர்களைப்போல் நற்செய்திகளைப் பெற்ற பின்னர் மாறு செய்துவிடாதீர்கள் என்று எச்சரிப்பதாக இவ்வசனம் உள்ளது.

> **"ஆது கூட்டத்தாரிடம் சென்ற ஹீது (அலை) தம் மக்களிடம் இறைவனையே வணங்குங்கள். அவனுக்கு இணை வைக்காதீர்கள் என்று எச்சரித்தார். ஆனால் அம்மக்களும் அவருக்கு மாறு செய்து அழிந்துபோயினர். உஜைர் (நபி) யூதர்களிடம் அனுப்பிவைக்கப்பட்ட போது இறைவனின் மகனே அவர் என்று உணர்ந்து கொண்ட பின்னரும் அவருக்குத் தீங்கு செய்தனர்."** [9]

இதே போன்றதொரு செயலை நீங்களும் செய்துவிடாதீர்கள் என்று திருக்குர்ஆன் முகம்மது நபி சமூகத்தவரிடம் எச்சரிக்கை செய்கின்றது.

> **"இஸ்மாயிலையும், இத்ரீஸையும், அலிகிப்லுவையும் நபியே நீர் நினைவு கூறுவீராக. அவர்கள் யாவரும் பொறுமை மிக்கவர்களே."** [10]

இவ்வசனம் நபிக்கு பொறுமையுடையவராய் இருக்கச்சொல்லி அறிவுரை கூறுகின்றது. முன்னர் வந்த நபிமார்களுக்கும் அவ்வச் சமூகமக்கள் தீங்கு விளைவித்து, அவர்களையும் புறக்கணிக்கவே செய்தனர். எனவே நீர் அச்சங்கொள்ளவோ, பொறுமையை கைவிடவோ வேண்டாம் என்றுரைக்கிறது குர்ஆன்.

இவ்வாறு திருக்குர்ஆன் 24 நபிமார்களைப் பற்றியும், அவர்களின் காலத்தைப்பற்றியும், அவர்களுக்கு மக்கள் செய்த இடையூறுகள் பற்றியும் கூறுகின்றது. இதன்மூலம் முகம்மது நபியின் காலகட்டத்திற்குப் பின்வந்த சமூக மக்களுக்கு அறிவுரையும், எச்சரிக்கையும் திருக்குர்ஆன் மூலம் செய்யப்பட்டுள்ளது.

## 4. இறைவேதங்கள் பற்றிய செய்திகள்

திருக்குர்ஆன் வேதத்திற்கு முன் நான்கு வேதங்கள் இம்மண்ணில் இறக்கப்பட்டதற்கான ஆதாரம் திருக்குர்ஆனில் காணப்படுகிறது. மூஸாவிற்கு இறக்கப்பட்ட புர்க்கான் வேதம் பற்றியும், தௌராத், இன்ஜீஸ், ஜபூர் ஆகிய வேதங்கள் பற்றியும் திருக்குர்ஆன் பேசுகிறது.

இவ்வேதங்கள் நிராகரிப்புச்செய்த மனிதர்களை எச்சரிப்பதற்காகவும், நல்வழியில் மாற்றுவதற்கும் இறக்கப்பட்டிருப்பினும், அதனையும் மீறி மனிதர்கள் தவறான பாதையில் சென்றனர். எனவே முகம்மது நபியின் சமூகத்தை மாற்றவே திருக்குர்ஆன் இறக்கப்பட்டது. முந்தைய சமூகத்தினரின் தவறான போக்கை இந்த சமூகத்தவரும் பின்பற்றக் கூடாது என்று எச்சரிக்கும் பொருட்டாகவே இவ்வேதம் உள்ளது திருக்குர்ஆனிலேயே கூறப்பட்டிருக்கிறது.

> **"இன்னும் நீங்கள் நேர்வழி பெறும் பொருட்டு நாம் மூஸாவிற்கு வேதத்தையும், நன்மை தீமைகளைப் பிரித்து அறிவிக்கக்கூடிய புரிக்கானையும் அளித்தோம் என்பதையும் நினைவு கூறுங்கள்."**[11]

இவ்வசனம் மூஸா (அலை) இறக்கப்பட்ட தௌராத் வேதம் மனிதர்கள் நேர்வழி பெறுவதற்காக இறக்கப்பட்டிருப்பினும் அதனையும் மீறி மனிதர்கள் தவறான பாதையில் சென்றனர். அதே வழியில் சென்று விட வேண்டாம் என்று எச்சரிக்கும் பொருட்டாகவே திருக்குர்ஆனில் தௌராத் வேதம் பற்றியும், அதனை நிராகரித்தோர் செயல் பற்றியும் கூறப்படுகின்றது.

> **"நபியே! முற்றிலும் உண்மையைக் கொண்டுள்ள இந்த வேதத்தைப் படிப்படியாக அவன்தான் உன்மீது இறக்கி வைத்தான். இது இதற்கு முன்னாலுள்ள வேதங்களை உறுதிப்படுத்தும் தௌராதையும், இன்ஜீலையும் அவனே இறக்கி வைத்தான்."**[12]

இவ்வசனம் முன்னால் இறக்கப்பட்ட இன்ஜீஸ், தௌராத் வேதங்களை இறக்கிய இறைவனே இத்திருக்குர்ஆன் வேதத்தையும் முகம்மது நபிக்கு இறக்கியுள்ளான். இவ்வேதம் உண்மையையும், மனிதனின் நல்வழிகாட்டுதலையும் தன் உட்பொருளாகக் கொண்டுள்ளது என்ற செய்தியைக் கூறுவதாக உள்ளது.

> **"நபியே! நூஹீக்கும் அவருக்குபின் வந்த நபிமார்களுக்கும் நாம் வஹீ அறிவித்தது போலவே உமக்கும் நிச்சயமாக வஹீ அறிவித்தோம். மேலும் இப்ராஹீமுக்கும், இஸ்மாயீலுக்கும், இஸ்ஹாக்கிற்கும், யஃகூபிற்கும் அவர்களுடைய சந்ததியினருக்கும், ஈஸாவுக்கும், அய்யூபுக்கும், யூனுஸிக்கும், ஹாரூனுக்கும், சுலைமானுக்கும், நாம் வஹீ அறிவித்தோம். இன்னும் தாவூதுக்கு ஜபூர் வேதத்தைக் கொடுத்தோம்."**[13]

இவ்வசனம் திருக்குர்ஆன் வேதம் இறைவனால் இறக்கப்பட்டது என்று உறுதிமொழி கூறுகின்றது. இதற்கு முன்னர் எந்நோக்கத்துடன் எவருக்கெல்லாம் வஹீ அறிவிக்கப்பட்டது, வேதம் அருளப்பட்டது

என்ற செய்தியையும் இவ்வசனம் கூறுகின்றது. இதன் மூலம் இது இறைவனால் இறக்கப்பட்ட உண்மை வேதமே என்று தெள்ளத்தெளிவாக எடுத்துரைக்கின்றது.

## 5. நிறைவு

❖ திருக்குர்ஆன் ஏக இறைக்கொள்கையை வலியுறுத்தும் செய்திகளையே ஏக இறைக்கொள்கை உடையவர்களா-யிருந்து நற்பேறு பெற்ற முந்தைய சமூகத்தினர் பற்றியும், அவர்களில் நிராகரிப்புச் செய்து சீரழிந்து போனோர் பற்றியும் அது பேசுகின்றது. இச்செய்திகள் முகம்மது நபி காலத்தில் வாழ்ந்த மக்களுக்கு எச்சரிக்கை செய்து நல்வழிகாட்டும் பொருட்டாகவும், அதன்பின்னர் வரக்கூடிய சந்ததியினர்க்கும் நல்வழியைக் காட்டும் என்று கூறினால் மிகையில்லை.

## குறிப்புகள்

1. திருக்குர்ஆன், 2:51–53
2. மேலது., 6:91
3. மேலது., 2:51
4. மேலது., 2:87
5. மேலது., 2:140
6. மேலது., 2:102
7. மேலது., 3:38,39
8. மேலது., 7:85
9. மேலது., 9:30
10. மேலது., 21:85
11. மேலது., 2:53
12. மேலது., 3:3
13. மேலது., 4:163

## துணை நூல்

ஹாஜி முகம்மது — திருக்குர்ஆன், ஜான் லிட்டரரி சாரிடபிள் டிரஸ்ட், சென்னை, 1989

■

## கட்டுரையாளர்கள்

இராம. தனசேகரன் / கா. சந்தானலெட்சுமி

மெ. செந்தாமரை / இரா. கவிதா

சை. வஹிதாகௌசியா / சீ. காயத்ரிதேவி

பு. தங்கமாரியம்மாள் / ச. ஆமினாபர்வின்

**இராம. தனசேகரன்**
ஆய்வாளர், தமிழியல் துறை
தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ்நாடு

---

* *இராம. தனசேகரன்.*

* *எம். ஏ., எம். ஃபில். (தமிழிலக்கியம்)*

  *1991 – முதுகலை, திருச்சி தேசியக்கல்லூரி, பாரதிதாசன் பல்கலைக்கழம். (முதுகலையில் பல்கலைக்கழக அளவில் மூன்றாவது நிலை)*

  *1992 – ஆய்வியல் நிறைஞர். மதுரை காமராசர் பல்கலைக்கழகம்*

* *எம். ஏ. – 'பாரதிதாசன் ஆளுமைச் சிந்தனை'*

  *எம். ஃபில். – 'பாரதி ஆளுமைத் திறன்'*

  *பிஎச். டி. – 'தமிழ்க் காப்பியங்களில் காதல்'*

* *தமிழாய்வு குறித்த உலக அளவில், தேசிய அளவில், மற்றும் மண்டல அளவில் நடைபெற்ற பல்வேறு கருத்தரங்குகளில் கட்டுரைகள் வழங்கியுள்ளமை.*

* *பரல்கள், ஆய்வுக்கோவை, தமிழியல் ஆய்வு, ஆய்வுச் சிந்தனைகள், ஆய்வுப் பொழில், தண்டபாணி சுவாமிகள் ஆய்வு மாலை மற்றும் குமரகுருபரர் ஆய்வு மாலை முதலானவற்றில் பதினைந்து ஆய்வுக் கட்டுரைகள்.*

* *பகுதி நேரத் தமிழ் விரிவுரையாளர் (1994–'96) – மாலை நேரக் கல்லூரி, மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.*

  *பதிலி தமிழ் விரிவுரையாளர் (1994–'95) – அருளானந்தர் தன்னாட்சிக் கல்லூரி, கருமாத்தூர், மதுரை.*

---

* *பெயர் / கல்வி / ஆய்வு / கருத்தரங்கு / வெளியீடு / பணி* ■

**கா. சந்தானலெட்சுமி**
ஆய்வாளர், இலக்கணத்துறை,
தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ்நாடு

---

❋ *கா. சந்தானலெட்சுமி*

❋ *எம். ஏ., பி. எட். (தமிழிலக்கியம், கல்வியியல்)*

*1996 – முதுகலை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.*

*1997 – இளநிலை கல்வியியல். மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.*

❋ *எம். ஏ. – 'கிழார்களும் அவர்தம் பாடல்களும் – ஓர் ஆய்வு'*

*பிஎச். டி. – 'வரலாற்று நோக்கில் ஆய்த எழுத்து'*

❋ *தமிழாய்வு குறித்த கருத்தரங்குகளில் கலந்து கொண்டு கட்டுரைகள் வழங்கியமை.*

❋ *தமிழியல் ஆய்வு, ஆய்வுச் சிந்தனைகள் ஆகியவற்றில் இரண்டு ஆய்வுக் கட்டுரைகள்.*

---

❋ *பெயர் / கல்வி / ஆய்வு / கருத்தரங்கு / வெளியீடு* ■

**மெ. செந்தாமரை**
ஆய்வாளர், ஒப்பிலக்கியத் துறை,
தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ்நாடு

---

❋ மெ. செந்தாமரை

❋ எம். ஏ., எம். ஃபில். (தமிழிலக்கியம்)

1992 – முதுகலை. மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

1993 – ஆய்வியல் நிறைஞர். மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

❋ எம். ஃபில். – 'சங்க அகப் பாடல்களில் கண்டோர் கூற்று'.

பிஎச். டி. – 'பெண்ணியத் திறனாய்வு நோக்கில் இராஜம் கிருஷ்ணன் நாவல்கள்'.

❋ தமிழாய்வு குறித்த பல்வேறு கருத்தரங்குகளில் கலந்துகொண்டு ஆய்வுக் கட்டுரைகள் வழங்கியுள்ளமை.

❋ பரல்கள், ஆய்வுக் கோவை, தமிழியல் ஆய்வு, ஆய்வுச் சிந்தனைகள், ஆய்வுப் பொழில், தண்டபாணி சுவாமிகள் ஆய்வு மாலை முதலானவற்றில் பதினைந்திற்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகள்.

---

❋ பெயர் / கல்வி / ஆய்வு / கருத்தரங்கு / வெளியீடு ■

**இரா. கவிதா**
ஆய்வாளர், தொடர்பியல் துறை,
தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ்நாடு

---

❋ *இரா. கவிதா*

❋ *எம். ஏ., எம். ஃபில். (தமிழிலக்கியம்)*

*1995 – முதுகலை. மதுரை காமராசர் பல்கலைக்–கழகம்.*

*1996 – ஆய்வியல் நிறைஞர். மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.*

❋ *எம். ஃபில். – 'சின்னத்திரைகளின் தொடர்பியல் திறன்'*

*பிஎச். டி. – 'தொலைக்காட்சியும் பண்பாட்டு வயமாக்கலும்'*

❋ *தமிழாய்வாளர் மன்ற புதன் வட்டக் கருத்தரங்கில் கட்டுரைகள் வழங்கியமை.*

❋ *பரல்கள், தமிழியல் ஆய்வு ஆகியவற்றில் இரண்டு ஆய்வுக் கட்டுரைகள்.*

---

❋ *பெயர் / கல்வி / ஆய்வு / கருத்தரங்கு / வெளியீடு* ■

**சை. வஹிதாகௌசியா**
ஆய்வாளர்
திருக்குறள் ஆய்வகம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ்நாடு

---

❋ *சை. வஹிதாகௌசியா*

❋ *எம். ஏ., எம். ஃபில். (தமிழிலக்கியம்)*

*1995 – முதுகலை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம்.*

*1996 – ஆய்வியல் நிறைஞர். மதுரை காமராசர் பல்கலைக்கழகம்*

❋ *எம். ஃபில். – 'இஸ்லாமியப் பஞ்சாயத்து முறைகள்'*

*பிஎச். டி. – 'திருக்குறளும் இஸ்லாமும் காட்டும் மானிட 'மேன்மை'*

❋ *தமிழாய்வு குறித்த கருத்தரங்கில் கலந்து கொண்டு கட்டுரைகள் வழங்கியமை.*

❋ *பரல்கள், தமிழியல் ஆய்வு, ஆய்வுச் சிந்தனைகள், ஆய்வுப் பொழில், தண்டபாணி சுவாமிகள் ஆய்வு மாலை ஆகியவற்றில் ஏழு ஆய்வுக் கட்டுரைகள்.*

---

❋ *பெயர் / கல்வி / ஆய்வு / கருத்தரங்கு / வெளியீடு* ■

**சீ. காயத்ரிதேவி**
ஆய்வாளர்
திருக்குறள் ஆய்வகம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ்நாடு

---

* *சீ. காயத்ரிதேவி*
* *எம். ஏ., எம். ஃபில். (தமிழிலக்கியம்)*

  *1996 – முதுகலை. மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.*

  *1997 – ஆய்வியல் நிறைஞர். மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.*

* *எம். ஃபில். – 'கண்ணதாசன் திரையிசைப் பாடல்களில் தொன்மம்'.*

  *பிஎச். டி. – 'திருக்குறள் அறவியல் சிந்தனையும் கிரேக்க அறவியல் சிந்தனையும்'.*

* *தமிழாய்வுக் கருத்தரங்குகளில் கலந்து கொண்டு கட்டுரைகள் வழங்கியமை.*
* *பரல்கள், தமிழியல் ஆய்வு, ஆய்வுச் சிந்தனைகள், ஆய்வுப் பொழில், தண்டபாணி சுவாமிகள் ஆய்வு மாலை ஆகியவற்றில் ஐந்து ஆய்வுக் கட்டுரைகள்.*

---

* *பெயர் / கல்வி / ஆய்வு / கருத்தரங்கு / வெளியீடு* ■

**பு. தங்கமாரியம்மாள்**
ஆய்வாளர்
இஸ்லாமியத் தமிழியல் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ்நாடு

---

❋ *பு. தங்கமாரியம்மாள்*

❋ *எம். ஏ., எம். ஃபில். (தமிழிலக்கியம்)*

*1995 – முதுகலை. மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.*

*1996 – ஆய்வியல் நிறைஞர். மதுரை காமராசர் பல்கலைக்கழகம்*

❋ *எம். ஏ. – 'சம்பந்த தேவாரத்தில் இயற்கை'*

*எம். ஃபில். – 'தனிப்பாடல்களில் புராணச் செய்திகள்'*

*பிஎச். டி. – 'சமயங்களின் தனித்தன்மையும், சமூக ஒற்றுமையும் கிறிஸ்தவம் இஸ்லாம் ஒப்பீடு'.*

❋ *தமிழ் ஆய்வுக் கருத்தரங்குகளில் கலந்து கொண்டு கட்டுரைகள் வழங்கியமை.*

❋ *பரல்கள் ஆய்வு இதழில் இரண்டு ஆய்வுக் கட்டுரைகள்.*

---

❋ *பெயர் / கல்வி / ஆய்வு / கருத்தரங்கு / வெளியீடு* ■

**ச. ஆமினாபர்வின்**
ஆய்வாளர்
இஸ்லாமியத் தமிழியல் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021, தமிழ்நாடு

---

❋ ச. ஆமினாபர்வின்

❋ எம். ஏ., எம். ஃபில். (தமிழிலக்கியம்)

1996 – முதுகலை. சீக்கியத்தில் முதுநிலை பட்டயம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

1997 – ஆய்வியல் நிறைஞர். மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

❋ எம். ஃபில். – 'அல்பகரா, ஆல் இம்ரானில் இறையச்சமும் இறை உவப்பும்'.

பிஎச். டி. – 'திருக்குர்ஆனில் இறையச்சமும் இறை உவப்பும்'.

❋ தமிழாய்வு குறித்த தேசிக்கருத்தரங்கில் கட்டுரை வழங்கி யுள்ளமை.

❋ தமிழ் விரிவுரையாளர் (1997 – '98) – தாசீம் பீவி அப்துல் காதர் மகளிர் கல்லூரி, கீழக்கரை.

---

❋ பெயர் / கல்வி / ஆய்வு / கருத்தரங்கு / பணி ■

## பதிப்பாசிரியர்

**இராம. தனசேகரன்** (பி. 1962) மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற்புல அறிஞர் (பிஎச்.டி.) பட்ட ஆய்வாளர். இவர் 'தமிழ்க் காப்பியக் காதல்' என்னும் பொருளில் அறிஞர் பட்ட ஆய்வினை மேற் கொண்டுள்ளார்.

இவர் திருச்சி தேசியக் கல்லூரியில் தமிழிலக்கியத்தில் இளங்கலைப் பட்டமும் (1989), திருச்சி பாரதிதாசன் பல்கலைக் கழகத்தில் முதுகலைப் பட்டமும் (1991), மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் 'பாரதி ஆளுமைத் திறன்' என்னும் பொருளில் ஆய்வு செய்து ஆய்வியல் நிறைஞர் பட்டமும் (1992) பெற்றவர். மேலும் மைசூர் இந்திய மொழிகள் நடுவண் நிறுவன மொழியியல் ஆய்வு நெறிமுறைப் பயிலரங்கில் பயிற்சியும் பெற்றவர்.

இவர்தம் சிறப்புத் துறைகள் அகத் திணை இலக்கணம், அகப்பொருள் இலக்கியம் மற்றும் தமிழ்க் காப்பிய இலக்கியம் ஆகியவை ஆகும்.

இராம. தனசேகரன் மதுரை கருமாத்தூர் அருள் ஆனந்தர் தன்னாட்சிக் கல்லூரியில் பதிலி தமிழ் விரிவுரை யாளராகவும் (1994 - 1995), மதுரை காமராசர் பல்கலைக்கழக மாலை நேரக் கல்லூரியில் பகுதி நேரத் தமிழ் விரிவுரையாளராகவும் (1994 - 1996) பணியாற்றியவர்.

இவர் தமிழாய்வு குறித்து மண்டல அளவில், தேசிய அளவில் மற்றும் உலக அளவில் நடைபெற்ற பல்வேறு கருத்தரங்கு களில் கலந்து கொண்டு கட்டுரைகள் வழங்கியுள்ளார்.

பரல்கள், ஆய்வுக்கோவை, தமிழியல் ஆய்வு, ஆய்வுச் சிந்தனைகள், ஆய்வுப் பொழில், திசைகள், தண்டபாணி சுவாமிகள் ஆய்வு மாலை, குமரகுருபரர் ஆய்வு மாலை, கருத்தரங்கக் கட்டுரைக் கோவை மற்றும் இலக்கியமும் வேளாண்மையும் முதலான வற்றில் பதினைந்திற்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

தமிழ் ஆய்வாளர் மன்றம்

25

வெள்ளி விழா

1974 - 1999

தமிழ் ஆய்வாளர் மன்ற வெள்ளி விழா (1974 - 1999) வெளியீடான **பரல்கள் 12** ஆய்வு நூல் – நவ குறிஞ்சி மலர்.

வளர்நிலை தமிழ் ஆய்வாளர்களின் அரிய முயற்சியான **பரல்கள் 12**, நவீன அறிவியல் யுகத்திற்கேற்ற ஒரு புதிய வார்ப்பு.

இந்நூல் பகுப்பாய்வு, விளக்கம் செய்தல், மதிப்பிடுதல், திறனறிதல் மற்றும் ஒப்பாய்வு முதலான பன்முக ஆய்வுச் சிந்தனை வீச்சுக்களின் பெட்டகம்.

ஆய்வுச் சிந்தனைகள் இலக்கியம், இலக்கணம் மற்றும் தகவல் தொடர்பு முதலான பல்வேறு தளங்களில் பதிவு செய்து, அறிவியல் அணுகுமுறையில் கட்டமைப்பு.

கட்டுரை அமைப்பில் ஆய்வுச்சுருக்கம், கருச்சொற்கள் முதலான புதுப்பரிமாணங்கள் தமிழாய்வு மரபில் ஒரு புதிய வரவு.

**பரல்கள் 12**, பரல்களின் தொடர் வளர்ச்சியில் ஒரு மைல் கல்.

**இராம. தனசேகரன்**